# மணிமந்திர வயித்திய சேகரம்



சண்முகானந்தா புக் டிப்போ
67, T.K. முதலி தெருவு,
சூளை, சென்னை-600 112.

மீனாட்சி துணை

# மணிமந்திர
# வயித்திய சேகரம்

செஞ்சி மாநகரம்
ஏகாம்பர சோதிடரவர்களால்
தொகுத்து இயற்றப்பட்டது

சண்முகானந்தா புக் டிப்போ
67, டி.கே. முதலி தெரு,
சூளை, சென்னை-112

 விலை ரூ. 40

# காபிரைட் அறிவிப்பு





# முகவுரை

வேதத்தின் ஆறு அங்கங்களில் ஒன்ருன ஜோதிட சாஸ்திரத்தின் உதவி இல்லாவிடில் தம்முடைய நித்திய கர்மானுஷ்டானங்களும் சரிவர நடத்த இயலாது ஆறு அங்கங்களைசோதிட சாஸ்திரமானது நேத்திர ஸ்தானமாக அமைந்துள்ளது ஒருவனுக்கு நேத்திரம் இல்லாவிடில் எப்படி பிரயோசனமில்லையோ அப்படியே ஜோதிஷ சாஸ்திரம் இல்லாவிடில் வேதமோ அல்லது வேதத்தில் சொல்லிய கர்மாக்களோ சரிவர நடத்தமுடியாது ஜோதிட சாஸ்திரம் அறிந்தவன் தர்மாந்த தோஷங்களையும் கீர்த்தியையும் அடைவானென பாஸ்கர சித்தாந்தம் சொல்லுகிறது இந்த தேஷம் எவ்வளவு காலம் இருக்கும் என்றே கேட்கிருர்கள் என்று வராஹமிஹிரர் சொல்லியிருக்கிருர், எனவே முதலில் ஜோதிடம் பிறகு மந்திரம் அதன் பின் வைத்தியம் என மூன்று பகுதியாக பிரித்து "மணிமந்திர வயித்திய சேகரம்", என்னும் இந்நூல் இதனை செஞ்சி ஏகாம்பரமுதலியார் அவர்கள் ஏற்கெனவே எழுதிய பல நூல்களின் தொகுப்பே இந்நூல். இவருடைய ஜோதிட நூல்கள் மிகவும் அற்புதமானவை என்றே இது போன்ற அருமை வாய்ந்த நூல்களை பிரகாசப்படுத்தி உலகை மகிழ்விக்க செய்வார்கள் என்பது திண்ணம்.

**G. ஜானகிராம் நாயக்கர்**

# பொருளடக்கம்

மீனாம்பாள் துணை

# மணிமந்திர
# வயித்திய சேகரம்

## விநாயகர் துதி

கலி விருத்தம்

அணியாம் பதினெண்பே ரறைந்தநூ லாய்ந்துமே
மணியா மணிமந்திர வயித்திய சேகரத்
துணியாய்ப் பல்லோர்க்குந் துலங்கிட நாளுமே
கணியா யுரைத்திடக் கரிமுகன் காப்பரே.

## இராசி 12-னுங் கிரகங்கள் நிற்கும் நட்பாசி யுச்சம் பகை நீசம் அறியும்படி 1-வது மேடவிராசி

விருத்தம்

இரவிதகரிலுச்சமா மிராகுகேதுப் பொன்பிறை
சுறையெனும் பகையாகுமாமதிற் குருதியும் மிகவாட்சி
தருவியம்புகர் புத்திநட்பு தானறிசனிநீசமாம் [யாம்
மருவிய மேலோர்கள் சொன்ன மயேசன் மொழியா மீதே

2-வது ரிடபவிராசி

பகலவன்விடைப் பகைதாம் பரைவிடும் பிறையுச்சமாம்
நிகலசேய்பொன் புந்திகேது நிபனிவர்கள் நட்பதாம்
புகலவேபக ருட்சியாம் பொருந்தருகு நீசமாம்
இலகவே மேலோர்கள் சொன்ன யீசன்மொழியாகுமே

### 3-வது மிதுனவிராசி

பரிதிவீணைப் பகையதாம் பகரும்பொன் பிரைப்பு கருடன்
குருதியாகாரி கேதிவர் குலவுநட்பதாகுமாம்
கருதியாமல் யிருகுயிவர்கள் கண்டும்மனையாட்சியாம்
உறுதியாய் மேலோர் சொன்னஉண்மையாமிதுண்மையே

### 4-வது கடகவிராசி

பானுறண்டிற் பகையதாம் பகருந்திங்களாட்சியாம்
நோனெனுந் பொன்னுச்சமாங் குலவும்புந்தி நட்பதாம்
ஈனமாஞ்சனி ராகுகேதுடன் யாகுமேபுகர் பகையதாம்
தேனெனுமேலோர்கள் சொன்னதேவர் மொழியுண்வமயே

### 5-வது சிங்கவிராசி

ஆதியரிதினி லாட்சியாமாதி யாறல்புந்திப்புகருடன்
தீதுருஞ்சனி யிராகுயிவர்கள் தேடிலிம்மனை பகையதாம்
யீதநன்பெரும் நட்டதாம் புகன்றிடும்பணி நிசமாம்
கோதிலாமேலோர்கள் சொன்னகுருமொழியிதுண்மையே

### 6-வது கன்னியாராசி

அருக்கன் கன்னிபகையதா மரும்பிரைப்பொன் தீயுட
னிருக்க ருகுசனியிவ ரிஷடமாமனை நட்பதாம்
உருக்கமாகும் புந்திகேதிவர் குற்றவம்மனை யாட்சியாம்
பெருக்கமே புகர்நிசமாமெனப் புகன்றனர் மேலோர்களே

### 7-வது துலாம்விராசி

வெய்யவன் கோல்நிசமாம் விளக்கிடுஞ்சமபகையதாம்
செய்யசேய்பொன்னிராகுகேதுடன் சிறந்தபுந்திநட்பதாம்
ஐயமில்லா முடனுவனுச்சமாகிடும் புகராட்சியாம்
நையவேமேலோர்கள்சொன்னவிமலர்நன் மொழியாகுமே

### 8-வது விருட்சிகவிராசி

சூரியன்பொன் புந்திகாசி சொல்லருந்தேனிற்பகை
கூறிடும்பிறை நீசமாங் குலவுந்தீதே தாட்சியாம்
கோரிடும்புகர் நட்பதாங் குறித்திடும்பணியுச்சமாம்
வீரியமேலோர்கள் சொன்ன விமலர்நன்மொழியாகுமே

9-வது தனுசுவிராசி

பனிபகைச்சிபுந்தியம் பார்க்கவன் சுன்ருகுவும்
இனிமையாஞ் சிலைநட்பதா மிறையவற்கே தாட்சியாம்
கனிமையா மங்காரகன் வண்டிடும்பெருபகையதாம்
தனிமையாய் மேலோர்கள் தவமொழியி துண்மையே

10-வது மகரவிராசி

அலரிந்துமான்பகை யாறலுச் சமாமதில்
இலகுபுந்தி புகர்பணியியம்பிடு மிவர்நட்பதாம்
நலமிலைபொன் னீசமாம் நாடுபுகர்கே தாட்சியாம்
குலவுமேலோர் புகன்றிடுங் குருமொழியி துண்மையே

11-வது கும்பவிராசி

கதிருமிந்து சேயிவர் கலசமுனர் பகையதாம்
பதியெனும் பொன்புந்திபுகர் பாம்பிவர்கள் நட்பதாம்
இதமெனு முடவனுட்சி யியம்புங்கேதுவுச்சமாம்
ததியெனுமேலோர்கள் சொன்னதவமொழியிதுண்மையே

12-வது மீனவிராசி

விண்மணிபிரை காரிருகு விளங்குமீனினட்பதாம்
நன்னுந்தீபகை மேகநீசம் நவின்றிடும் புகருச்சமா
மண்ணிய பொன் கேதுவும் மகிழுஞ்சொந்த வாட்சியாம்
திண்ணமிலா மேலவர்கள் தானுரைத்தா ருண்மையே

கிரகங்களின் நட்பாச்சியுச்சம்
நீசம்பகை முற்றிற்று
ஃஃஃ

**சாயகிரகங்களின் சாரம் அறியும் குளிகன் சாரம்**

வருமிரவிக் கையைந்து கலையிருப தென்பார்
மதிக்கிருபத் திரண்டுடனே கலைநான்கதாகும்
பொருகுசேய்க்குப் பாகைபந்து காலைநாற்பத் தென்பான்
புதனுக்குப் பரகைபன்னேழ் கலையிருபத்தேழாங்

குருவாறு பகையுடன் கலையென்றேயாகும்
கொடும்புகர்க்குப் பாகையைந்து கனையெண்பத்
கருதுசனிக் காருபகை கலைமுப்பதொன்பான் [தைந்தாம்
கடுங்குளிக னுதிக்கின்ற ராசியிற் காண்பதுவே.

குளிகனுக்கு நட்பாட்சியுச்சம் பகைநீசம் அறியும்படி

கோடுரு குளிகனுக்குங் கொண்டபெண் டனுதானுட்சி
நீடுகோல் குடும்பமேடு நிரைகயல் மிதுன நட்பு
வாடிய மகரமுச்ச மாம்பகை யிடபஞ்சிங்கம்
மேடந்தேள் கடகநீசம் விளம்பலாங் குளிகனுக்கே

குளிகன் நிலை

| | | | |
|---|---|---|---|
| ஞாயிறு | 6 | இராத்திரி 19 | |
| திங்கள் | 3 | இராத்திரி 6 | |
| செவ்வாய் | 18 | இராத்திரி 2 | இந்தப்படி எந்தலக்கினம் |
| புதன் | 14 | இராத்திரி 26 | ஒட்டுகிறதோ அதில் |
| வியாழன் | 10 | இரத்திரி 2 | குளிகணைப் போடவும் |
| வெள்ளி | 6 | இராத்திரி 13 | |
| சனி | 1 | இராத்திரி 14 | |

உரோகணியில் சனிசரிக்குங் காலத்தில் வக்கரித்தால் க்ஷாமம் மகரத்தில் சனி சஞ்சரிக்குங் காலத்தில் வக்கரித்தால் க்ஷாமம் தூமகேது நட்சத்திரம் கிழக்கே யுதித்தால் க்ஷாமம்:

## இராசியில் குளிகன் நின்ற பலன்

விருத்தம்

ஜென்மத்திற் குளிகன் வந்து சேரனேக்கித்
திருத்தியயாவரு மிணங்கிச் சேர்ந்தபோது
வன்மனவன் வஞ்சனையாற் காமியாவன்
வாராது ஆசாரம் வாக்கில் வந்தால்
இன்பமுடன் விசையபரன் குரோதியாவ
னில்லாத துன்மார்க்கமிசையைச் சொல்வா

நன்மையன்றிப் பலர் கூடத் திரவியநாசம்
நல்லவிதத்தைப் படுத்திடுவான் நன்றாய்ச் சொல்லே

## இதுவுமது

சொல்லு மூன்றுமிடத்திற் குளிகளின்றால்
சுகவிரகன் கெர்விதனுஞ் சொன்னேங்கோபி
யல்லலில்லான் திரவியங்கள் தேடவல்லான்
ஆண்மைலு மதோன்மத்த னவனுனென்பான்
நல்லதொரு நாலில்வருஞ் சொற்ப வித்தை
நல்வீடும் திரவியமும் நட்புங் கொஞ்சம்
இல்லையென வஞ்சித்தவர்க் கொஞ்சம் பிள்ளை
யிருதயஞ் சலகுணவான் யெழிலு மில்லான்

## இதுவுமது

ஆறிலே குளிகன்வரக் குணவான் சூரன்
அவனிதனில் மந்திரத்தாலாம் விநோதன்
கூறியயேழதனில் வரக்காணும் மோசன்
குணமில்லான் ஸ்ரீகலகஞ் கொள்வான் நல்லன்
சீறியவிரோ சனஞ்செய் விரோதியாவான்
செய்நன்றி மறந்தவனுந் திருந்தா புத்தி
தேறியே யட்டமத்தி லற்ப தேகன்
தேருது தயனகுணஞ் சிலபோக் காமே.

## இதுவுமது

போக்கான நவமீது குளிகன் போனால்
பொல்லாத கிரியைகளும் பொய்யுஞ் சொல்வான்
ஆக்கமெனும் பிதுர்வழியை குருவை நன்றாய்
ஆதரணைப் பணணுத அசட்டக்காரன்
தீர்க்கமெனப் பத்தில்வா சிலுக்காம் புத்தி
ஜன்மவழி ஆசாரஞ் செய்யாதென்று
வாக்குடனே லாபமதில் வந்தான் மோகன்
வருதமையன் தமையடிப்பான் வணங்கான் ருபன்

இதுவுமது

பன்னிரண்டாம் மிடந்தனிலே குளிகனின்ருல்
பலவகையுந் திரவியங்கள் பதவிலாதான்
தன்னவனைப் போலெவர்க்குந் தாட்சிசொல்வான்
சதிகுளிகை பவனுதி யென்றுசாத்தும்
முன்னுக வந்திருத்த ராசிற்கப்பால்
முக்கோண சக்கரமாம் முடிந்தகாலந்
தன்னவனும் பவர்கூடச் சகலநட்டஞ்
சாற்றினேம் குளிகைபலன் சற்றேசொன்னேம்

இதுவுமது

சூரியனுடன் மாந்தி தோன்றி நின்ருல்
சொல்லுவதுவே தந்தைவழி சண்டையாகுங்
காரியமாந் திங்களுடன் கலந்தால்மாந்தி
கற்புடைய தாய்வழியிற் கலக்கஞ்சொல்ல
சீறிய செவ்வாயுடனே கவந்தால்பாந்தி
தினங்சலக முடன்பிறந்தா ருடனேசெய்யுங்
கூறியமா லுடன்மாந்தி கூடிநின்ருற்
குணமறியாப் பயித்தியங்கொண்டா ரனந்தம்

இதுவுமது

அந்தண்ணே டேமாந்தி யணைந்து வாழ்க
அவன்வணங்கா தூஷணமேலடையச்சொல்வான்
சுந்தரனுஞ் சுக்கிரனைத் தொட்டுக் கொண்டார்
சேரான மகன்கூடி மருவநல்ல
மந்தனுடன் மகன்கூடி மருவநல்ல
வாணிபமுந் திரவியமும் மாடும் வாழ்வாம்
வித்தைபெரு மரவமதால் விடமுண்டாகும்
விரும்பியகேதுக்கினியால் விளம்பச் செப்பே

தற்காலமித்திரம் அறியும்படி

வேறு விருத்தம்

அவரவர்க்கு மூலத்திரிகோண விராசிக்கே
யாகுமீரா றிரண்டுநாள் தைந்தோடெட்டு

நவிலொன்பானுச்சு மனையதிகவா னென்பார்
நயந்திடுமீராறி ரண்டுமொரு பத்துநான்குந்
தவமான பன்னென்றில் மூன்றுநின்ற தோரெண்
சுடர்க்கால மித்திரமாம் பகலில் சாதகர்க்கே
புவனமரக் கதிர்வெள்ளிப் பிதுர்மாதுற்கரியோன்
பிதுர்சகோ தரன்மாதுர் துசாபரிக்கிப்பலனே

ஜாதகன் குணமறியும்படி

இரவியுடன் மதிமன்னன் செவ்வாய்க்காரி
யேசேனுதிபதிபுந்தி இராசகுமா ரனுமாந்
திரமுடைய குருவெள்ளி மந்திரியாஞ் சனியன்
சேவகனன்பா ரிரவி சரிகமதுமந்து
விரவிசெவ்வாய் தத்துவமாம் புதன்வார்த்தை யொன்பா
மென்குருவே யானசுகம் வெள்ளிமதோன் மத்தன்
பரவரிய சனிதுக்க வெண்வரிந்த வுடலந்தான்
பகுத்தறிந்து சொல்லுவது பான்மையுள்ளோர்கடனே

அதியுச்சம் அறியும்படி

அதிவுச்சந் தனையுரைக்கிற் கதிரவனுக்குத்தா
னுனமேடந்தனிலே பகையொரு பத்தாம்
மதிதனக்கே ரிடபத்திற்றுன் மூன்றுபாகை
வருஞ்சேய்க்கு மகரத்தி லிருபத்தெட்டாற்
துதிபுதற்குக் கன்னியினிற் பதினைந்துபாகை
சொற்குருவுக் கேதுகடகந் தன்னிலைந்து பாகை
புதியபுகர்க் கேமீனி லிருபத்தேழ் பாகை
புகழ்சனிக்குக் கோலிருப்பார் பாகையென்பார்

அஸ்தமான மறியும்படி

சொல்லியது சாதிபஞ் சக்கரங்கடானே
சூரியனை யடுக்குமுன் பின்னின்றூர் கனமூடம்
புல்லியசேய் பதினேழு புந்தியதன் மூன்று
பொருந்துகுரு பதினொன்றுவெள்ளியொன்பதாகும்
நல்லியல்பாங் காரிக்குப் பதினைந்துபாகை
நயந்ததற்கு நின்றகா லத்தனமாகும்

மெல்லியசெம் பஞ்சணையும் வசன மலரிணையும்
மிகுத்திடும் பேராச்சரிய மேல்சீடியஞ் சுகமே

கிரகவுயித்தியங்களால் விஹீனம் அறியும்படி

தருகதிரோ னுடன்சனியன் கூடினுர்சனியன்
ருனிணைப்பன் சனியுடன்சேய் வந்துகூடின்
மருவுசெவ்வா யிணைப்பனிந்தச் சேயுடனே பொன்னேன்
வந்துறையிற் குருவிணைப்பன் குருவைமதிகூடி
லருணமதி பிணைப்பன்மதி யுடன்வெள்ளிகூடி
லசுரமந் திரியிணைப்பன் வெள்ளியுடன் புத்திகூடிற்
கழிதுபுத னிணைப்பணிந்த புதனைமதிகூடிற்
கலைமதியோ னிணைப்பனெனக் கண்டுரைக்கலாமே

கிரகவுயித்திய மறியும்படி

கொங்கலர்க்கு சாதிபஞ்சக் கிரகமொருசாலிற்
கூடினுற் கிரகரித்த மெதிர்நடக்குங்கிரகந்
துங்கமிகு வெற்றியாம் வக்கிடதக்கிரகந்
தோல்வியா மிவைமிரவி வதியுங்கூடாதே
சிங்கமுதலாறி ராசிதனி லிருந்தகிரகஞ்
சுறந்து வருங் கிரகத்தைத் திரமாக செயிக்கும்
இங்கிதமாங் கும்பமுதலாறி ராசிகன்னி
லிருந்தகிர கந்தன்னை வருங்கிரகம்வெல்லும்

கிரகநிலைக்கால் அறியும்படி

இனியவெள்ளி தெற்குதனி லற்றகோள் நடக்கி
லெய்தினுற் றேல்வையில்லை யென்னவே பகர்வா
புனிதருக்கு வெள்ளியுச்சக் கிரகமதி புதனும்
போற்றுமிடை நிலைக்கிரகஞ் சனியிரவிசேய்பாம்புங்
கனவில்பூமிக் கிரகஞ் சனிசெவ்வா! யிரவி
கருது!நாற்கால் கிரகம்புந்திபுகர் பொன்னேன்
வனிதையிரு காற்கிரகஞ் சனிபலகாற் றவிழ
வருஞ்சிரகுக் கொடுபறக்கல் வண்மையிவையாமே

அதிநீசமறியும்படி

உச்சபதி நின்றகோளுக் கேரேழா மிராசிநீச
மச்சமிலுச்சந்தன்னி லதிக வுச்சத்தைப் போல
மிச்சமா மதிகநீச மேவிடுமென்ருர் மேலோர்
பச்சிளங்குரும்பையென்னப்பணித் தெழுந்தனத்தினனே

தூமாதி பஞ்சகிரகங்களின் ஸ்புடமறியும்படி

மதிபுடத் துடனனகி ராசியும்பன் மூன்றும்
பாகைதனை யுடன் கூட்டத் தூமனிடப் புடமாம்
வருதூமன் புடந்தன்னைப் பனிரெண்குற் கலைந்தே
வந்தபாதன் புடம்பாம் பாதபுடத்துடனே
பெருமாற் ராசியுடன் கூடப்பரிவேடம்
தருமிந்த்ரதனு புடத்திற் பதினேழுபாகை
தான்கூட்ட வுபகேது கன்புடமதாமே

பாசகாதிபர்களின் உச்சமறியும்படி

ஓதரும் பாசகர்க்கே யுச்சந்தான் மேடமாகும்
வேதகன் தனக்கேயுச்சம் விறுசே ரிடபமாகும்
போதகன் தனக்குச்சந்திரன் பொருபொரு கன்னியாகும்
மாதுளங் கனியைப்போலும் வளம்பெறு தனத்தினளே

பரிவேட முதலியவற்றின் உச்சமறியும்படி

பரிவேடந் தனக்குச்சமிது மனமேயாகும்
பகர்கலைக் கியானுக்குச்சஞ் சிங்கமாகும்
உரியவிந்த்ர தனுசுக்குச் சந்தனுசேயாகும்
உற்றநுட்பந் தனக்குச்சங் கும்பமாகும்
அரியசோம னுக்குச்சங் கன்னி
யழகான மீனமென்பார் மதிக்குமேடந்
தெரிவுறு தூமனுக்குச்ச மகரந்தானுகுஞ்
சேய்கேதுவுக்குச்ச மிதுன மெனலாமே

பாசகாதிபர்களின் சதி

கதிரவன் தன் ததிபோலப் பரிதிபாசகனுங்
கதிரனுச்சத் துடனின்றே யிடமாய்ச் செல்வன்
மதிகதிபோல வேதகனு பதியினுர்சத்துடனே
வந்துநின்றே யிடஞ் செல்வன்வக்கிரன்றன்கதிபோல்
கதிருடைய தூமன்சேய் யுச்சத்தினுடனே
சாந்தவனு முடந்திரிவன் சாமனபோதகனும்
புதியபுந்திக்குள்ளபடி நடப்பருற் காயதான்
போற்றும் வெள்ளிக் கற்றபடி யிடமாகச்செல்வன்

சாயாகிரகங்களின் சாரம்

முற்றிற்று

# இலக்கின பாவம்

## மேஷோதய பலன்

1. மேஷம் லக்கினமாக அதில் அங்காரகனிருக்க, கடகத்தில் சந்திரனிருக்க, தனுசில் வியாழனிருக்க, ஜாதகமானவன் மன்னனுவான்.

2. மேஷத்தில் அல்லது ரிஷபத்தில் புதனிருக்க கடகத்தில் வியாழமிருக்க, மகரத்தில் செவ்வாயிருக்க, ஜாதகமானவன் மன்னனுவானென அறிக.

3. மேஷத்தில் சூரியன் உதயமாக நிற்க, அவரை சுபக்கிரகங்கள் பார்க்க, ஜாதகமானவன் புவிமன்னனுகுவானென அறிக.

4. மேஷத்தில் சனியுதயமாகி நிற்க ஜாதகமானவனுக்கு ஜலத்தினுல் கண்டம் நேருமெனவறிக

5. மேஷத்தில் காரிவுதயமாக மூன்ருமிடத் தோனும் நான்காமிடத்தோனும், புதன்நிற்க, அவரை பாபர்கள் பார்க்க ஜாதகமானவன் கொச்சையாகியும் அற்பப் புத்திரான் உடையவனுகவு மாவானெனவறிக.

## ரிஷபோதய பலன்

1. ரிஷபம் இலக்கினமாக அதில் சந்திரனும் வியாழனும் நிற்க, பாக்கியஸ்தானத்தில் சுக்கிரனிருக்க அல்லது நீசமுடவர்க்கமாக நிற்க ஜாதகமானவன் புவிக்கரசனுகுவான்.

2. ரிஷபத்தில் சந்திர நிற்க, வியாழன் பார்க்க, மன்னவனுவான் மற்ற கிரகங்கள் பார்க்கில் தேவராய் சிறப்புடைய மன்னனுக வாழ்வான்.

3. ரிஷபத்தில் அங்காரகன் உதயமாக நிற்க, திரேகாணமேற, பாபர்கள் பார்க்க,. ஜாதகமானவன் கருவிகளாலும், சோரர்களாலும், விஷத்தினுலும், தீயாலும் பயமுண்டாகுவன்.

4. லக்கினத்தில் சந்திரன் உதிக்க, அவருக் கேழாமிடத்தில் சூரியன் நிற்க, ஜாதகமானவன் களத்திர விரோதத்தினுல் மரணமாவான் இலக்கணத்தைப் பார்க்கில் அற்ப புத்திராளுடையவன்.

5. மூன்ருமிடத்தில் சுபக்கிரகங்கள் நிற்க, ஜாதகமானவனுக்கு பாதி வயதுக்குமேல் பல துன்பமுண்டாம்.

6. லக்கினத்தில் சந்திரனிருக்க செவ்வாய் கூட அல்லது பார்க்க, ஜாதகமானவன் பலனும் தைரியமுள்ளவனுகவிருப்பான்.

7. ஏழாமிடத்தில் சுக்கிரனிருக்க ஜாதகமானவனுக்கு களத்திரனுசமோடு ஈனமுண்டாமெனவறிக, ஏழாமிடத்தில் சந்திரனிருக்க அனேகதாரங்களுண்டாம் ஏழாமிடத்தில் செவ்வாய் நிற்க, விபசார களத்திரமுண்டாம்.

8. லக்கினத்தில் ஆதித்தன் நிற்க, சனி செவ்வாய் பார்க்க குந்தந் தள்ளிய கண்ணுடையவனுகுவான்.

9. லக்கினத்தில் புதன் உதயமாக இரண்டாமிடத்தில் தீக்கோள் நிற்க ஜாதகமானவன் முகரோகியாம்:

## மிதுனோதய பலன்

1. மிதுனவிராசி லக்கினமாக, அதிகசுபக்கிரகங்கள் நிற்க அல்லது பார்க்க, ஜாதகமானவன் அரசனுக்குச் சமானமானவன்.

2. லக்கினத்திற்கு எட்டாமிடத்தில் பாபக்கிரகங்கள் கூட ஜாதகமானவனுக்கு மிருகத்தினுல் அச்சமுண்டாம்.

3. லக்கினத்திற்கு ஆருமிடத்தில் சனிவக்கிரமாக நிற்க வக்கிர செவ்வாய் அவரைப் பார்க்க, ஜாதகமானவனுக்கு வருடம் 2-ல் அரிட்டம்.

4. லக்கினத்தில் தேயற்தோன் வலிவுபெற்று நிற்க ஜாதகமானவன் சதாகாலமும் போகியாக விருப்பான்.

5. லக்கினத்தில் வியாழ நிற்க அல்லது பார்க்க ஜாதகமானவன் மிக்க காமியாக விருப்பான்.

6. லக்கினத்தில் வியாழநிற்கஅல்லதுபார்க்க ஜாதகமானவன் மூத்திரக்கிரிச்சின வியாதி யுடையவனுவான்.

7. லக்கினத்தில் சுக்கிரனைப் பாபர் கூட அல்லது பார்க்க ஜாதகமானவனுக்கு மூத்திரக்கிரிச்சின ரோகமுண்டாம்.

8. லக்கினத்தில் சுக்கிரன் செவ்வாய் சந்திரன் இவர்கள் கூட இவர்களைப் பாபர்கள் பார்க்கப் புதன்கேந்திரத்திலிருக்க, ஜாதகமானவனுக்கு இரட்டைப் பெண் உண்டாம்.

9. லக்கினத்திற்கு 2-12-ல் பாபர்கள் இருந்து பார்க்க ஜாதகமானவனுக்கு நேத்திர ரோகமுண்டாம்.

10. லக்கினத்தில் சந்திர செவ்வாய் வியாழன் புதன் சூரியன் இவர்கள் கூடிநிற்க ஜாதகமானவனுக்கு இரட்டைப் பெண் ஜனிக்கும்.

11. லக்கினத்தில் பாபரோடு புதன்கூடி நிற்க அவரை சுபக்கிரகங்கள் பார்க்க ஜாதகமானவனுக்கு ஆண் ஒன்றும் பெண் இரண்டு ஜனிக்கும்.

12. மிதுன லக்கினமாக யுணிமுகனேடு வியாழன் கூடி கேந்திரமேற அல்லது புதனேடுகூட மேடத்திற் கெதிராகப் பார்க்க ஜாதகமானவனுக்கு இரட்டை ஆண் பிள்ளைகள் பிறக்கும்.

13. லக்கினத்தில் சூரியன் சந்திரன் வியாழன் இவர்கள் கூடி நிற்க, புதன் கேந்திரத்திலிருக்க, இரட்டைப் பெண்ணெனவறிக.

14. லக்கினத்திற்கு எட்டாமிடத்தில் பாபர்கள் சேர. ஜாதகமானவனுக்கு ஆசனத்தில் மூலரோகமுண்டாம்.

15. லக்கினத்தில் சூரியனிருக்க கடகத்தில் சந்திரனிருக்க ஜாதகமானவனுக்கு திரளான சௌக்கியமுண்டாம்.

16. லக்கினத்தில் சுக்கிரன் பலத்து நிற்க, ஜாதகமானவனுக்கு வெகு களத்திரமுண்டாம்.

17. லக்கினத்தில் ஏழாமிடத்தோனும். சுக்கிரனும் கேந்திரத்திலிருக்க, அவரைப் பாபர்கள் நீசர்கள் பார்க்க ஜாதகமானவனுக்கு விபசார களத்திரமுண்டாம்.

18. லக்கினத்தில் சுபக்கிரகங்கள் நிற்க அல்லது பார்க்க நல்ல களத்திர முண்டாம் பாபர் காண களத்திர நஷ்டமாம், வேசியர் சங்கமமாகும்.

## கடகோதய பலன்

1. கடகராசி லக்கினமாக அதற்கு 2-10 சந்திரன் நீசமாக நிற்க ஜாதகமானவன்மன்னற்குசமானமானவன்

2. லக்கினத்தில் வியாழன் இருக்க அல்லது பார்க்க சந்திரன் கேந்திரத்திலிருக்கஜாதகமானவன் ஜெகமன்னர் சரிசமானமெனவறிக.

3. லக்கினத்திற்கு மூன்ருந்திரே காணத்திற் பாபர் கூடி யெதிராகப் பார்க்க ஜாதகமானவனுக்கு நாற்கால் மிருகத்தினுல் பயமுண்டாம்.

4. லக்கினத்தின் மூன்ருந்திரேகாணத்திலும் ஐந்தாமிடத்திலும் லக்கினுதிபதிக்கும் பாவர்க்கமுற் ஜாதகமானவனுக்கு சர்ப்பத்தினுல் பீடை யுண்டாம்.

5. லக்கினத்திற்கு ஏழாமிடத்தில் சனி நிற்க, ஜாதகமானவனுக்கு இன்பமுடைய வெகு களத்திரமொடு வம்பான களத்திரத்தினுல் மானவீனம் போமென வறிக,

6. லக்கினத்திற்கு ஏழாமிடத்தில் சந்திரன் செவ்வாய் கூடி நிற்க ஜாதகமானவனுக்கு நல்ல களத்திரமுண்டாம்.

7. கடக லக்கினத்திற்கு 6-8-12-ல், சூரியன் நிற்க அவருடன் சந்திரன்கூட ஜாதகமானவன் தரித்திரத்தினேடு அற்ப ஆயுசுடையவன்.

8. லக்கினத்திற் சனி நிற்க அவருடன் சந்திரன்கூட ஜாதகமானவனுக்கு களத்திர நேசமுண்டாம்.

9. லக்கினத்தில் சூரியனும் இராகுவுங் கூடி நிற்க ஜாதகமானவனுக்கு களத்திர நேசமுண்டாம்.

10. லக்கினத்தில் மூர்க்கமுடைய பாபர்கள் நிற்க புத்திரயோகம் ஈனமென மேலோர் கூறுகின்றனர்.

சிம்மோதய பலன்

1. சிம்பவிராசி லக்கினமாக அதில் பாபர் உதயமாக அவரை சுபர்கள் பார்க்க அரசனுவான் லக்கினத்தில் சந்திரன் உதயமாக குசனங்கிசமேற புதன் இரண்டாமிடத்திலிருக்க நிசமாகி அதர்பஞ் செய்யுமரசனுவான்.

2. சிம்ம லக்கினத்தில் அங்காரகனுதயமாகஅவரை வியாழன் கூட அல்லது பார்க்க ஜாதகமானவன் மன்னனுவன் சிம்மமுதயமாக உதயத்தினும் இரண்டாமிடத்தினும் திரேகாணத்திலும் பாபர் நிற்க அல்லது பார்க்கக் கூட பட்சி தோஷமுண்டாம்,

3. லக்கினத்தில் காலன் நிற்க, கடகத்தில் சந்திரனிருக்க அவரை காமி பார்க்க ஜாதகமானவனுக்கு வருடம் 6-ல் அரிட்டமுண்டாம்: லக்கினத்திற்கு ஏழாம்

இடத்தில் இராஜாதிபதியிருக்க ஜாதகமானவனுக்கு விபசாரதாரமுண்டாம்.

4. லக்கினத்தில் புதனிருக்க அவரை சந்திரன் ஜாதகமானவனுக்கு நான்கு வருடத்தின் மேல் கண்டம்.

5. சிம்மலக்கினத்திற்கு 2-12-ல் பாபர்களிருக்க ஜாதகமானவனுக்கு திறமுள்ள மைந்தரோடு துயர் செய்யுங் களத்திரமுண்டாம்.

6. லக்கினத்திற்கு 2-ல் சுக்கிரன் இருக்க 3-ல்சூரிய னிருக்க 6-ல் அங்காரகனிருக்க 10-ல் வியாழனிருக்க சந்திரன் பாபருடனே கூட ஜாதகமானவன் மிக்க தரித்திர னும் வெகு விரோதனுமாமெனவறிக.

7. லக்கினத்தைப் பாபர் பார்க்க உதயத்தில்சூரியன் தோன்ற ஜாதகமானவனுக்கு அற்பபுத்திரரென வறிக.

8. லக்கினத்தில் சந்திரனிருக்கசூரியன்லாபஸ்தான மேற ஜாதகமானவனுக்கு புத்திரர் அற்பமாம்.

9. லக்கினத்தில் சூரியன் சந்திரன் கூடிநிற்க அவரை சனி செவ்வாய் பார்க்க ஜாதகமானவன் குருடனு வானென வறிக.

10. லக்கினத்தில் சூரீயனிருக்க அல்லது பார்க்க ஜாதகமானவனுக்கு மாலைக்கண்ணும்.

11. லக்கினத்தில் சூரியனிருக்க தீயோர்கள்சுபருடன் கூட அவரைப் பாபர் பார்க்க ஜாதகமானவன் இராஜ மன்னனுகுவானென வறிக.

## கன்னி உதய பலன்

1. கன்னிஇராசி லக்கினமாக, அதில் சுபக்கிரகங்கள் நிற்க அல்லது பார்க்க ஜாதகமானவன் இராஜமன்னுவா னெனவறிக.

2. லக்கினத்தில் சூரியன் நிற்க, அவருக்கேழில் சனி நிற்க ஜாதகமானவனுக்கு தாரநாசமாம்.

3. கன்னிலக்கினமாக அதற்கு ஏழாமிடத்தில் அங்காரகனு சுக்கிரனுங் கூடி நிற்க ஜாதகனுக்கு திரமுடைய களத்திரம் வாய்ந்தபோதும் நாசமென வறிக.

4. கன்னிலக்கினமாக அதற்கு எட்டாமிடத்தில் சனி வக்கிரமாக நிற்க, அவரை செவ்வாய் பார்க்க ஜாதகமானவனுக்கு ஆண்டு இரண்டில் அரிட்டமெனவறிக.

5. கன்னி லக்கினமாக லக்கினத்தை சுக்கிரன் நோக்கமுறுதிருக்க அவரைச்சந்திரன் பார்க்க ஜாதகமானவனுக்கு மூன்றும் வருடத்தில் அரிட்டமென வறிக.

6. கன்னி லக்கினமாக அதற்கு 12-மிடத்தில் சுக்கிரன் நிற்க ஜாதகமானவனுக்கு வருடம் 6-க்கு மேல் அரிட்டமென வறிக.

7. கன்னி லக்கினமாக அதில் செவ்வாய் நிற்க அவரை மலிவுற்று சனி பார்க்க ஜாதகமானவனுக்கு ஆண்டு 6-8-12 அரிட்டம் வருமெனவறிக.

8. கன்னிலக்கினமாக அதில் வியாழன் கலந்து நிற்க ஜாதகமானவனுக்கு உடனே அரிட்டமெனவறிக. அது தப்புமாகில் 12-ம் ஆண்டில் கண்டவரும்லக்கினத்தைப்பாபர் பாராதிருக்க அற்ப புத்திரயோகமாம்.

9. கன்னி லக்கினமாக நோய்முகன் பாபரோடுகூடி எட்டாமிடத்திற்கு குடையவனைப் பார்க்க ஜாதகமானவனுக்கு வாலிபத்தில் வரும் இரத்த காசத்தினுல் காளைபோல் அலறி வீழ்ந்து மாய்குவானென வறிக.

10. கன்னி உதயமாக சந்திரன் செவ்வாய் சுக்கிரன் இவர்கள்பாபருடனே கூடி நிற்க, ஏழாமிடத்தில் புதனிருக்க ஜாதகமானவனுக்கு இரட்டைப் பெண் உண்டாமென வறிக.

11. கன்னி லக்கினமாக சூரியன் சந்திர செவ்வாய் குரு இவர்கள் நிற்க, ஜாதகமானவனுக்கு ஆண் பெண் இரண்டாமெனவறிக.

12. கன்னி லக்கினமாக அதற்கு ஐந்தாமிடத்தில் வியாழன் நிற்க புத்திர நாசமாகும் சுக்கிரன் வக்கிராம்கிசமேறி நிற்க ஜாதகமானவன் தரித்திரம் பட்டுழல்வானெனவறிக.

துலாகோதய பலன்

1. துலாமிராசி லக்கினமாக, அதற்கு எட்டாமிடத்தில் சனி, செவ்வாய் சூரியன், சந்திரன் இவர்கள் கூடி நிற்க, மாதமொன்றில் அரிட்டமுண்டாம் எட்டாமிடத்தில் பாபரிருக்க அவரை சூரியன் பார்க்க ஜாதகமானவனுக்கு ஒரு வருடத்திற்கு மேல் அரிட்டங் காட்டுமென வறிக.

2. துலாம் லக்கினமாக அதற்கு நான்காமிடத்தில் பாம்பு நிற்க சனியுஞ் செவ்வாயுங்கூட எதிர்பக்கம் பிறந்தவன் விஷத்தை யுண்பான் துலாத்தின் இரண்டாந் திரேகாணத்தில் நின்றவர்களை பாபர் கூடிப்பார்க்க ஜாதகமானவனுக்கு பட்சிதோஷம் காணுமென வறிக.

3. துலாம் லக்கினமாக, செவ்வாய் பாபவர்க்கமேற புத்திர நாசமுண்டாம். சனியேறில் ஜாதகமானவன்புத்திர நாசத்தோடு தரித்திரப்பட்டுழல்வானெனவறிக.

4. துலாம் லக்கினமாக அதற்கு ஏழாமிடத்தில் செவ்வாய் நிற்க, அவரைப் பாபர் பார்க்க ஜாதகமானவனுக்கு வியபசார களத்திரம் வாய்க்குமென வறிக.

5. துலாம் உதயமாக பாபர் பார்க்க (சுவிகார) வளர்ப்பு புத்திரருண்டாம். பாபர் உதயத்தில் நிற்க ஜாதகமானவனுக்கு விபசார தாரமாமென வறிக.

விருட்சி கோதய பலன்

1. விருச்சிகவிராசி லக்கினமாக. அதற்கு மூன்றுந் திரேகாணத்தில் பாபர்கள் நிற்க அல்லது கூடிப் பார்க்க நாற்கால் ஜீவனால் துன்பமுண்டாம் இம்மாதிரியாக முதற்றிரே காணமாகில் விஷபயமுண்டாமென முன்னோர் கூறுகின்றனர்.

3. விருச்சிக லக்கினமாக அதற்கு ஏழாமிடத்தில் சந்திரன் நிற்க ஜாதகமானவனுக்கு வருடம் 7-8-9-ல், அரிட்டமுண்டாமென வறிக.

3. விருச்சிக லக்கினமாக அதில் வக்கிரசனி நிற்க அவரைச் செவ்வாய் பார்க்க ஜாதகமானவனுக்கு வருடம் இரண்டின் மேல் அரிட்டமுண்டாமென வறிக.

4. விருச்சிக லக்கினமாக அதற்கு 5-9 மிடங்களில் வியாழனிருக்க அல்லது கேத்திரத்தில் குரு செவ்வாய் இருக்க ஜாதகமானவனுக்கு உடனே அரிட்டமுண்டாம் என வறிக.

5. விருச்சிக லக்கினமாக அதற்கு ஏழாமிடத்தில் புதன் நிற்க விபசார தாரமுண்டாம், புதன் நிற்கில் ஜாதக மானவன் உற்றார் நாசமடைவாரென வறிக.

6. விருச்சிக லக்கினமாக அதற்கு 5-7 மிடங்களில் உள்ளோர் உதையத்தோனிற்க ஜாதகமானவனுக்கு நிகர் இல்லாத புத்திரர் பிறந்து நாசமடைவதோடு களத்திரமும் நாசமாமென வறிக.

### தனுசோதய பலன்

1. தனுசு இராசி லக்கினமாக, அதில் அங்காரகன் இருக்க அவரை நாற்கோள்கள் பார்க்க ஜாதகமானவன் அரசனுவானென வறிக.

2. தனுசின் முதற்றிரே காணத்தை பாபக்கிரகங்கள் பார்க்க அல்லது கூடி நிற்க ஜாதகமானவனுக்கு விஷத்தி னால் உயிர் பயமுண்டாம்.

3. தனுசு லக்கினமாக அதற்கு எட்டாமிடத்தில் புதன் நிற்க பாபருடன் பார்க்க ஜாதகமானவனுக்கு வருடம் நாலின்மேல் அரிட்டம் நேரும் அது தப்புமாகில் அற்பாயுளுள்ளவனுவானென வறிக.

4. தனுசின் முதல் திரேகாணத்தில் சந்திரனிருக்க அவருக்கு எட்டாமிடத்தில் புதன் நிற்க. சனி பார்க்க வியாழன் கேந்திரமேற ஜாதகமானவனுக்கு அற்பஆயுள் எனவறிக. அதனுடன் ஆயுதத்தினால் மரணமுண்டாம்.

5. தனுசு உதயமாக அதில் புகர் நிற்க எட்டாமிடத்தில் சனி நிற்க எட்டாமிடத்தோன் உதயத்தில் கலந்து நிற்க ஜாதகமானவனுக்கு அற்பாயுளென வறிக.

மகரோதய பலன்

1. மகரவிராசி லக்கினமாக அதில் பாம்பு நிற்க அதற்கு 7-ல் சந்திரன் நிற்க, 9-ல் சனியிருக்க, 12-ல் சூரியன் நிற்க ஜாதகமானவன் மிகவும் மனோசஞ்சலத்தோடு புவியாளும் மன்னவனவானென வறிக.

2. மகரம் முதற்றிரேகாணத்தில் தீக்கோள் கூடியிருக்கினும் அல்லது பார்க்கிலும் இவ்விதம் மூன்றுந்திரேகாணத்திலிருக்கினும் ஜாதகமானவனுக்கு பயமுண்டாம் என வறிக.

3. மகரத்தில் வியாழனிருக்க அவர்க்கேழில் சனி நிற்க புகழுண்டாம் ஒன்பதாமிடத்தில் அல்லது திரராசியில் இருக்க அற்ப புத்திரருண்டு அன்றி தன் வயதளவும் துக்கமுண்டாமென வறிக.

4. மகரம் உதயத்தில் அதற்கு ஏழாமிடத்தில் சந்திரன் செவ்வாய் இவர்கள் கூடினும் அல்லது களத்திரஸ்தானமேறி சந்திரனுடன் கூடி நிற்கிலும்சூரியன் இராகு களத்திரத்தி லிருக்கினும் ஜாதகமானவனுக்கு அநித்திய களத்திரத்தால் அவமானமும் நஷ்டமும் உண்டாமென வறிக.

5. மகரம் லக்கினமாக சந்திரன் பாவரோடு கூடி 6-3-12-ம் இடங்களில் நிற்க அவரை அங்காரன் சனி இவர்கள் பார்க்க ஜாதகமானவனுக்கு கேந்திர ரோகம் நேத்திரவீனம் இவைகளுண்டாமென வறிய.

கும்போதய பலன்

கும்பவிராசி லக்கினமாக அதன் முதற்றிரேகாணத்தைஇரண்டாந் திரேகாணுதிபதி பார்க்க பாபர்கள்

திரேகாணத்தைப் பார்க்க ஜாதகமானவனுக்கு பட்சி தோஷம் பட்சி பீடை இவைகளால் பயமுண்டாமென வறிக.

விருத்தம்

தேனிறை ருடமுதிப்பச் சிந்தைகூறிய நாருக
வானிற்றே மதியைப்பார்க்கின் வருடநான் கதிலரிட்டம்
நீனிறை வெள்ளியாறி னின்றிடவாரு மாண்டின்
மேனியே வரிட்டமாகும் வெய்யவேல் விழியினுளே

மீனோதய பலன்

1. மீனவிராசி லக்கினமாக, அதற்கு ஏழாமிடத்தில் வியாழனிற்க நான்காமிடத்தில் பாபர்கள் நிற்க களத்திர நாசமாகும், மூன்ருமிடத்தில் அல்லது பத்தாமிடத்தில் சூரியனிற்க ஜாதகமானவனுக்கு உடனே அரிட்டமாமெனவறிக.

2. மீனம் லக்கினமாக அதற்கு எட்டாமிடத்தில் சூரியன் செவ்வாய் சனி இவர்கள் கூடிநிற்க மாதம் ஒன்றில் அரிட்டமாம், இவர்களோடு பாபர்கள்கூட சூரியன் பார்க்க ஜாதகமானவன் வருடம் ஒன்றில் அரிட்டமாகுமெனவறிக.

3. மீனம் லக்கியமாக, அதற்கு இரண்டாமிடமாகிய வாக்கு ஸ்தானத்தில் சுரக்கிரனிருக்க வருடம் ஆறில் அரிட்டமாம் லக்கினத்தில் சூரியன் உதயமாக அவருடன் சந்திரன் கூடிநிற்க ஏழாமிடத்தில் சுக்கிரன் நிற்க ஜாதகமானவனுக்கு மரணகண்டம் நேருமென வறிக.

4. மீனம் லக்கினமாக, அதிற் சந்திரன் சூரியன் இவர்களிருக்க அவரைப் பாபர்கள் பார்க்க ஜாதகமானவனுக்கு சகல கண்டமுமுண்டாமென வறிக-

5. மீனம் லக்கினமாக, மூன்ருந் திரேகாணத்தில் பாபர்கள் உதிக்க, அல்லது கூடப்பார்க்க ஜாதகமானவனுக்கு விஷத்தினுலும் நாற்கால் ஜீவனுலும் பயமுண்டாமென வறிக.

6. மீனம் லக்கினமாக, ஐந்தாமிடங்களில் தீக்கோள்கள் நிற்க உபயவர்க்கமேற ஜாதகமானவனுக்கு புத்திர நாச மெனவறிக.

விருத்தம்

அரிட்டமீன் மீனுதிப்ப வைந்தினிற் செவ்வாய்தானே
தெரிவர்க்கோத் தமமேயாற் செத்தநாட்டானேகண்ட
முரிவிலா மயிலைத்தோன்ற மூன்ருகா மட்சேத்திரத்தில்
விரிகதிர் மதியினிற்கி னிருமூன்ரும் நாளிற்கண்டம்

சுகானுபவத்தின் காலமறிய

விருத்தம்

நூலாயு முதையத்தினு லொன்பதுடையோர்
நோக்கமுடன் கூடிநிற்க மூன்றுடையோனுச்சம்
மேலாகிலோராண்டு மேன்மூன்ருவரும்
மிகுந்தசுகமடைவ னுதயத்திலுச்சகோளே
பாலாகவுடையச்சேய் பார்க்கவொன்பதுடையோர்
பகர் மூன்றிலேயிருக்கிற் பன்னிரண்டா ண்டின்மேற்
சேலாமூன்ருண்டு சுகமடைவன் கண்டாய்
திலதநுதற்களபமுலைச் சேயரிக் கண்மயிலே

இதுவுமது

சுகவுதைய மவர்க்கொத்த வாங்கிசமேயேற பொன்னுகி
சுவாமியென்பான் பானிற்க மதிற்கொண்டதிற்
நிகர்வருடம்பதினுறின் மேன்மூன்றுவருடம்
நிறைந்த சுகமுமதையத்திற் கைத்தோனும் புகரும்
மனமகிழ்ந்து கூடிநிற்க லாபேசநட்பி
லாட்சியுச்சங்கேந்திர கோணங்களிலிருக்கி
லிகமனிதனிருபதாம் வருடமதின் மேலே
யெட்டு வருடஞ்சுக முண்டேந்துதனமயிலே

இதுவுமது

ஏய்ந்த விலக்கினம் அரமாட்சியுசுக்கப்பந்தோ
னிந்துவுடனேகூடி யேழிலுச்சமாகி

வாய்ந்தவயதிருநத்தைத் தானதற்குமேலே
யைந்துவருடஞ் சுகமுண்டாகுமுதயத்தில்
டாய்ந்தகர்மாதிபனிருக்கச் சாமிஒன்பதாகப்
பத்தினிலிராகுநிற்கப் பண்புடைய புவிமேற்
றேய்ந்திருப்பத்தொன்றின் மேலாயுள்மட்டுஞ்
சுகத்தையனுபவிப்ப னெனச்சொற்றனர்கற்றேரே

இதுவுமது

உணருமுறையந் தனிலிரண்டோ வுதயச்சாமிநான்காக
கனமில்பத்தோன் பாக்கியத்திக்கான விருபத்தைந்தின் மேற்
றனவிலைந்து வருடந்தான் சதிராய்ச்சுகத்தையனுபவிப்பான்
குணரஞ்சித பங்கயமயிலே குயிலே யமுதக்குஞ்சரமே

இதுவுமது

சரந்தானுதியமாக வைந்திற் சற்றுமேழிற் மன்னென்றில்
விரங்கூரி ரவிமதி சனியுமிருக்க வெட்டிக்குருவெள்ளி
நிரந்தானுகப்புகழ்கடக நிற்கிலிருபத் தேழின்மேல்
வரந்தான் வருடம்பதினறுமன்னுஞ்சரந்தையனுபவிப்பன்

இதுவுமது

பன்னுமுதய வங்கிசத்திற் பத்தோனிருக்க விவனங்கந்
தன்னிற சாமியிருக்க வீரந்தன்கை வியாழன் தான்பார்க்க
உன்னும் வருடமுப்பதின்மே லொன்பான் வருடஞ்சுகமுடையான்
பொன்னின் மணிமே கலையிலங்கு பாற்றேரல் குற்பூங்கொடியே
பொடியே உதயந்திரமாக கூர்பாக்கியத்தோன் தானிருக்க
பாடியாமைந்தோ னிரண்டிலுறப் பகருமிரண்டோன் பத்திநிற்க
துடியாம் பன்னென்றினிற் கிறைவன் றுய்ய லாந்தனிலாயின்
வடிவரம் முப்பத்தாறதின்மேல் வருடமட்டுஞ்சுகமுள்ளோன்

இதுவுமது

உள்ளுதய மவர்க்கொத்த மாங்கிசமேயாக
வுயர்குருவுஞ்சுக்கிரனும்பார்க்கவொன்பதுடையோன்
கொள்ளுமுச்ச மாமிருக்கி னுற்பத்தைந்தின்மேற்
கூறுமொன்பதாண்டும் பாக்கியமுடனுதையத்திற்

றெள்ளருமேழுக் கிறையவனுற் சுபரேபார்க்க
விரண்டிடத்தில் மதினிற்க சாமியுடன் குருவும்
விள்ளுமொரு பத்தினிற் கிளருபதிமூன்றின்
மேன்மூன்று வருடமே மிக்கசுகம்பெறுவான்

இதுவுமது

பெறுமுதையந் தனிற்புதனு மொன்பதினிற்குருவும்
பிரசுரன் பூரணமிதியும் பிரியமுடன் கூடத்
திறமுடையன் சுவாமிகேந்திர மிருக்கபுவிமேற்
சென்மித்த நாள்முதலாய் சிறந்த செல்வமுடையான்
மறுவறுலக் கிணத்துடனே சுவாமிசுபர் நடுவின்
மலிவுறவே சுவாமிசுப கேந்திரகோணத்தி
லுறுதிபற்றிச்செனமுதலா யுள்ளமட்டும்
போகவா னுவானெனவு முரைத்தனர் பூங்குயிலே

இதுவுமது

குயிலே உதயஞ்சுபமாகக் கூறுமுதவிலாபக்
தியலுஞ்சுபருற்றிடசா மினியகுருவுஞ் சுபகேந்திரன்
பயிலுங்கோண ந்தனிலிருக்கிற் பகரும்வயதிலதிர நடுத்
துயரமின்றிச் சுகமடைவன் சூதைவருந்துணைமுலையாய்

இதுவுமது

துணையாமுதஞ்சுபமாக சொல்லுமுதய மிரண்டொடிமுன்
றிணையாந்தானஞ்சுபனிருக்க வியலுஞ்சாமியுடன் புகரு
மணியுஞ்சுபகேந்திரகோண மதனிலிருக்கவந்ததிற்
கணைசாற்சுகத்தை யனுபவிப்பன்களபந்திமிர்ந்ததந்தாளே

இதுவுமது

தானதாமுதயஞ்சுபரிக்க தனத்தினேரு நான் குபத்தில்
வினவந்தீயோருறச்சாடி விளங்குமத்தமாங்கிசத்திற்
கனமுற்றிருக்கவாதியிலே காண்பான் சுகத்தைபின்
புதுக்கஞ்
சினமிற்கருவிவிரணபயந் தீர்க்குஞ்சொற்பங்கிலேச
முண்டே

இதுவுமது

உண்டுதய லக்கினத்தைச் சுபர் பார்க்கச்சாமி
யுயர்கேந்திர கோணமுறி னடுவயதின் சுகமாந்

திண்டிறலாமுதயத்திற் பாபர்நிற்கமூர்த்தித்
தேவிலோகாங்கிசத்திற் சேரவொன்பான் தன்னி
லண்டியொருகிரகநிற்கின் லாவிபத்திற்சுகமா
மருளுதையஞ்சுபமாக வெள்ளிநிறகச்சுடரே
கண்டிடிற்பூருவம் பாதிச்சுக மாய்ப்பிற்பாதி
கவலையினும் பலனே காணுவன்றேன் மொழியே

ஃஃஃஃ

## தனவந்தன் அறியும்படி வியாக்கியம்

லக்கினம், கடகம், தனுசு, மகரம் இவையாக அதில் சூரியன் இருப்பானுகில் ஜரதகன் குறைவில்லாமல்முற்றுந் தனமுடையவனுக விருப்பான்.

இலக்கினம் தனுசு, மீனம், மிதுனம், துலாம் இவைகளாக. அதில் சந்திரன் இருக்க; ஒன்பதாமிடத்தில் சூரியன் நிற்க பாக்கியாருபதி சூரியனேயாகி சூரியன் ரிஷபத்தில் உதயமாக சந்திரன் கூடியிருக்க அவை சுபர் ப்ார்க்க ஜாதகமானவன் பொருந்திய தனமுடையவனு வானென வறிக.

இலக்கினத்திலிருக்கும் வியாழனையும். சாமியையும் தனுதிபதியையும் சந்திரன் பார்க்க தனவானுவான். தனுவுதயமாக அதில் சூரியன் நிற்க பத்தாமீடத்தில் சந்திரன் செவ்வாயிருக்க நிறைந்த தனவானுவான். உதயத்தில் சூரியனிருக்க பத்தாமிடத்தோனுஞ் சாமியுப் பணபரஸ் தானத்திலிருக்க பணபரஸ்தானுதிபதி பதினேருமிடத்திலிருக்க ஜாதகமானவன் மறு உதயமுடையவனென வறிக.

இலக்கினத்தில் புதனிருக்க மூர்த்தி ஒன்பதாமிடத்தினிடமாக அதிக வித்தையுண்டாம். மிதுனம் இலக்கினமாக அதில் சூரியனிருக்க, கடகத்தில் சந்திரனிருக்க கன்னியில் புதனிருக்க பல விதத்தையும் உணரவன் பண் உதையமாக அஂதை இரண்டு மூன்று கோள்கள் பார்க்க சுபக்கிரகமாக உச்சம் பெற்றிருக்க , ஜாதகமானவன் நர பூபதியாக வாழ்வானெனவறிக.

இலக்கினத்தில் சுக்கிரனிருக்க நான்காமிடத்தில் பாபர்கள் நிற்க வாலிபத்தில் பாக்கியமுண்டாம்.

உதயத்தினும் தனத்தினும் வியாழனிருக்க சுவாமி சுபகேந்திர கோணத்திலிருந்து உச்சாங்கிசமேற ஜென்ம முள்ளளவும் பாக்கியவானாகை விருப்பான் இலக்கினத்தில் குருவிருக்க சாமிகேந்திர கோணத்திலிருக்கில் இலாபஸ் தானமும் பனிரண்டாமிடமும் சுபவர்க்கமாக விருக்க ஜாதகமானவன் வாலிபத்தில் தனவந்தனென வறிக.

உதயத்தில் பாபர் நிற்க சுவாமி திரிகோண கேந்திரத்தி லிருக்க இரண்டாமிடத்திலும் சலாராசியிலும் சலகிரகத் துடனே சுபக்கிரகமிருக்க வாலிப முதல் பாக்கியவானாம் வில்லுதயமாக அதிற் சாமி நிற்க லாபத்தில் லாபேச னிருக்க வியாழம் பார்க்க ஜாதகமானவன் நெடுங்காலம் சுகமுடன் வாழ்வானென வறிக.

இலக்கினத்தில் சுபர்கள் நிற்க இரண்டாமிடத்தில் பாபர்கள் நிற்க வாலிப மட்டும் சுகவானாகை யிருப்பான் இலக்கினத்தில் சுபரிருக்கஇரண்டாமிடத்தினுங் கேத்திரத் தினும் பாபர் நிற்க மூர்த்தி பலவானாகை விருக்க நடுவயதில் செல்வமுண்டாம் இலக்கினத்தில் சுபரிருக்க சுவாமி கோபு ராங்கிசஞ் சூழ்ந்து நிற்க சுக்கிரன் தேவலோகாங்கிசத்தி லிருக்க ஜாதகமானவனுக்கு நடுவயதில் பாக்கியமுண்டா மென வறிக.

உதயவிராசி சரவிராசியாக சுவாமி திரராசியாதி பதி யாகி கேந்திரத்திலிருக்க கேந்திராதி பார்க்க ஜாதகனுக்கு சஞ்சாரமுண்டாம்.

உதயத்தில் பாக்கியாதிபதியிருக்க பாக்கிய ஸ்தானத் தில் சுபக்கிரகங்களிருக்க 4-10-ல், பாபர்களிருக்க ஜாதக னுக்கு முற்பாதியில் மிகுந்த செல்வமுண்டாம்.

உதயத்தில் இராகு நிற்க ஏழாமிடத்ததிபனை வியாழன் பார்க்க ஜாதகமானவன் சிவார்ச்சனை செய்குவானென வறிக.

உதயத்தில் சுவாமி நிற்க சூரியனும் 10-மிடத்துக் குடையோனும் கரநவர்க்கத்தினும் சாராங்கிசத்தினும் நிற்க ஜாதகமானவன் தரித்திரப்படுவானென வறிக.

சந்திரனுடைய கிரகங்கள் உதயத்திலிருக்க 9-10-ம் இடத்தில் அங்காரகனிருக்க ஜாதகமானவன் மன்னர்க்கு சாமானமானவர் எனவறிக.

இலக்கினத்தில் உச்சகோள் நிற்க, அவரை வலுத்த கிரகங்கள் பார்க்க சாமி கேந்திர் திரிகோணத்திலிருக்க ஜாதகமானவன் அரசர்க்குச் சமானமாக வாழ்வானென வறிக.

விருத்தம்

அன்னவுவயத்தெழுங்குவைப்போதொருநீசன் பார்க்கின்
மன்னர்சமான னிலக்கினத்தை மகிழ்ந்து மூன்றுகோள் பார்க்கச்
சொன்னமூர்த்தி கேந்திரத்திற் சொல்லுந்திரிகோணந் தன்னி
லென்றும் பலம்பெற் றிருந்தாக்காலுலகின் மன்னர் சகியாவான்

அரசனுவதறியும்படி
விருத்தம்

சரியுதயத்திற் சாமிநான்கிற் றலையோனுந்
தெரிவுர நோக்கங்கூட வெந்நாளுந்திறை கொள்வான்
புரியுதயத்திற் குருவுறநான்கிற் பகராகப்
பரிவொடுபத்திற் சேயுமிருக்கிற் பார்க்கின் வேந்தன்

இதுவுமது

பாருதயஞ்சாமி நிற்கச் சாமியுச்சமாகிற்
பார்த்திபனுமிலக்கினமே கபாராசியாம்
வீரமெழுகோளேழும் பார்க்கின் மன்னவனுவன்
வினவியலக்கினமுதலா யிடையீடைவிட்டேதான்
தீரமிங்குகோளேழு மிருக்கிற் பார்த்திபனுஞ்
சீருதயந்தனிற்சாமி யிருந்திடவற்றோர்களோர்
தாருமோரைந்தெட்டு நிறையாகவிருக்கி
லுலகாளுமன்னவனு முவமையிவாவமுதே

## இதுவுமது

உவமானவுவமியுமதிவர்க்கமிலாமிருக்க
    உயர்சாமிவர்க்கோத்த மரங்கிசமேயாக
நவமாகமற்றோர்கண் மூன்றுகேந்திரத்தி
    நடந்துநிற்கொற்றவனும் நாடுமுவயத்திற்
பவமிலாச்சாமி நிற்கவாறேழிலெட்டைப்
    பரிந்து சுபரே நெரிக்திற் பார்புறக்குமன்னே
மவமிலுதயத்திரண்டு மந்திரிநூலோனு
    மாகநிறைமதி பார்க்கி லரசனுமழகாய்

## குருபுத்திர நன்மை அறியும்படி

என்றவைத்திற்குளிகனிற்க வியலுமைந்தோனெட்டாக
குன்றுந்திரமிராகுவுடன் கூடினுலுந்தென் மொழியாய்
மன்றுளைந்தினிலிரவியு மலியுமைந்தோனிருவுட
னென்றுமதிபொன் பார்த்திலையேலுலவும் பரவிந்தெனு
மாதே

## மாரகாதிபர்கள் அறியும்படி

மாதியன்மேடந்தனக்கு வெள்ளிசனிபுந்தி
    மாரகாரமிரவிக்குசுபர் மற்றோர்சமனும்
போதிபத்தனக்குமதி வெள்ளிபொன்மாரகாள்
    போற்றிரவிசனிசுபர் மற்றுளவர்தான்சமனுங்
கோதில்வியாழன் தனக்குச் சேய்பெண்ததிர்மாரகராங்
    கூறுபுகர்சுபன் மற்றையோர் களெலாஞ்சமனுந்
தீதில்கடகந்தனக்கும் புகர்புதன்மாரகராஞ்
    சேய்பொன்னன் சுபர்மற்றோர்தான்சமனுந்திருவே

## இதுவுமது

திருவரிக்குப் புதன்வெள்ளி மாரகர்சேய்சுபனுஞ்
    செப்புமற்றோர்தான் சமனுங்னெனிகுருசேவும்
வருமாரகன் வெள்ளிபுதன் சுபர்மற்றோர்கள்
    மன்னுசமன்கோலுக்கே யிரவிகுருசெவ்வா
யரிகின் மாரகர் சனிமால் சுபன்மற்றோர்க்கறிதேட்
    கானபுதன்குசன் வெள்ளிகேதுமாரகராந்
தருமிந்துசுபன்மற்றோர் சமன்சிலைக்குவெள்ளி
    சங்கரனிரவிகுஜன் சுபர்மற்றோர் சமனே

இதுவுமது

சமமே மகரஞ்சேயுமதி சனிபொன்னவனு மாரகராம்
மரும்வெள்ளிபுதன் சுபரா மற்மறயோர்கள் சமனுகும்
நிமருங்கம்பந் தனக்குச்சேய் நிலவுங்குருவே மாரகராத்
திமிரவெள்ளி சுபன்மற்றைக்கிரகம் யாவுஞ்சமமென்பார்

இதுவுமது

கலி விருத்தம்

என்பர் மீனற்து கேவருமாரகன்
வன்புறுஞ்சனி மால்கதிர்சுக்கிர
னன்புறுஞ்சுப ரம்புலிவக்கிரன்
போன்புண் மற்ருேர் பொருந்துஞ்சமனதே

பெருத்த நாபியான்

உதயத்தில் சனி பாம்பு இவர்கள் நிற்க ஜாதகமானவனுக்கு நாபி பெருத்திருக்குமென முன்னேர் கூறுகின்றனர்.

கூனன்

உதயத்தில் சனியும் புதனும் கூடி நிற்க ஜாதகமானவன் கூனனாமென வறிக.

பினியாளன்

உதயத்தில் அங்காரகன் நிற்க அவருசுடன் இராகுஞ் சனியுங்கூட ஜாதகமானவன் பிணியாளனாக விருப்பான் என வறிக.

இடக்கண் குருடு, வலக்கண் குருடு

இரண்டாமிடமெனும் வாக்குதஞ்தானத்திலும் ஆரும் இடத்திலும் அங்காரகன் இருக்க ஜாதகமானவனுக்கு இடதுகண் குருடாம்.

உதய விராசிக்கு எட்டாமிடத்தில் சூரியன் நிற்க பன்னிரண்டாமிடத்தில் சனி நிற்க ஜாதகமானவனுக்கு வலது கண் குருடாம்.

இருகண் குருடறிய

உதயத்தில் சந்திரன் சூரியன் இவர்கள் கூடி நிற்கினும் அல்லது சூரியன் ஒருவனே நிற்கினும் ஜாதகமானவனுக்கு இரண்டுகண் குருடாமென வறிக.

வலக்கண் குருடு இடக்கண் குருடு
சிறிது பார்வையுள்ளதறிய

இலக்கினத்திலும் ஏழாம் இடத்திலும் சூரியனிருக்க அவரோடு சனி இராகுகூட அல்லது பார்க்க ஜாதகமானவனுக்கு வலக்கண் ஊனமாகும் அங்காரகனும் இராகுவுங்கூட அல்லது பார்க்க, இடக்கண் ஊனமாகும் நற்கோள்கள் பார்ப்பாராகில் பார்வை சற்று உண்டாகும் என வறிக.

கற்பசத்திரத்தால் ஜனித்தவன்

உதயத்தில் செவ்வாய் நிற்க விருச்சிகத்திலும் ம... திலும் சனி நிற்க இராகு அவர்க்குமுன் நிற்க மூர்க்கமோடு பாபர் பார்க்க, ஜாதகமானவன் கர்ப்பசத்திரத்தால் ஜனித்தானென வறிக.

பால அரிட்டம் நீங்கல்

இலக்கினத்திற்கு 6-12 மிடத்தில் பாபக்கிரகமிருக்கில் சிசுவிற் கரிட்டமாம் பத்தாமிடத்தில் அங்காரகன் நிற்க அவருடன் சந்திரன் கூட விரயத்திற் செவ்வாய் வருங் காலம் சிசுவுக்காகவாம். சுபக்கிரகங்கள் நோக்கமுற்றிடுமாகிற கொடிய பிணி வந்து தீருமென வறிக.

## பாலாரிட்டம்

மிதுனங் கன்னி துலாம் கும்பம் இவைகளிற் சந்திரன் இருக்க அங்காரகன் சூரியன் சனி இவர்கள் பார்க்க சந்திரன் நின்ற தானுதிபதி சந்திரனுக்கு பின்னுக நிற்க ஜாதகமானவன் குழவிக்கரிட்டம் நேருமென வறிக.

மேஷம் விருச்சிகம் உதயவிராசியாக அதற்கு 5-9-ம் இடத்தில் நிற்கும் வியாழனுக்குகேந்திரத்தில் அங்காரகன் நிற்கினும் 6-7-8-12-2-மிடங்கள் சந்திரன் நிற்க அவனை பாபர்கள் பார்க்கினும் ஜாதகனுக்கு அரிட்டமாமென வறிக.

உதயத்தில் சூரியனிருக்க அவரைத் தீக்கோள்கள் கூட அல்லது பார்க்க அங்காரகனும் சனியும் பத்தாமிட மாக சிசுவுக்கரிட்டமாம் மீனம் உதயமாக கடகாங்கிசத் தில் அங்காரகனிருக்க பிறந்த சிசு உடனே மரணமென வறிக.

சலவிராசி உதயமாக அதற்கு ஏழாமிடத்தில் சனி நிற்க சூரியன் சந்திரன் கீழ்ராசியாகி சுபர் கேந்திரமேற் பிறந்த குழவி மரணமாம் ஜன்மத்திலும் ஏழாமிடத்திலும் பாபரோடு சந்திரன் மேவ அவரை நற்கோள் பாராதிருக்க ஜாதகமான குழவி உடனே மரணமாமென வறிக.

ஜன்மத்திலும் 7-8-12-மிடங்களிலும் பாபரோடு சந்திரன் கூடிநிற்க சுபக்கிரகங்கள் கேந்திரிக்க குழவிக் கரிட்டமாம் பாபக்கிரகங்கள் எட்டாமிடமாக சந்திரன் கேந்திரிக்க ஜாதகமான குழவி மரணமாமென வறிக.

சூரியன் அங்காரகன் சனி இவர்கள் கூடி 6-8-மிடத்தி லிருக்க அவரை நற்கோள்கள் பாராதிருக்குமாகில் குழவி யுடனே மரணமாகும், சந்திரனைப் பாபர் பார்க்க ஜாதக மான சிசு உடனே மாரணமாமென வறிக.

சந்திரனைப் பாபர் கூடினும் அல்லது நோக்கினும் லக்கினத்தில் சூரியன் சந்திரனிருக்க தீக்கோள் 5-8-9-ம் இடத்தில் நிற்கினும் ஜாதகமான சிசு மறித்திடுமென வறிக.

3 நாளில் அரிட்டமாவதறிய

நாட்டுமீனுதிப்பஜன்ம நாளுக்கு மூன்ருனில்
நீட்டுவெண்மதியும்பாலும் நிற்குநாள் மூன்றிற்கண்டம்
வாடுமோரைந்தென்பா னின்மதி நிற்கநாலோன்
மூட்டுஞ் செங்கதிரோ நிற்கின் மூன்ருநாள் மரணமாமே

4 நாளில் அரிட்டமாவதறிய

வலியமீனுதிப்பமூன்றின் மார்த்தாண்டன் மதியுநிற்கில்
நலியுநோய் வருத்தத்தாலே நாலாநாள் மரணமெய்தும்
மெலிவுறு மதிகோன்பத்தும் வெய்யோனுலொட்டிநிற்கிற்
பலிகொணுதயனுலாபம் பதறினிலரிட்டமாமே

10 நாளில் அரிட்டமாவதறிய

ஏறினமேடமுதலயாறி லக்கினமாக நான்கிற்
சூமியதீக்கோட்கனிற்கத் துலாமுதலாறிற்றிங்கள்
வழிபடவெட்டிற்பாபர் வாய்த்திடும் பத்துநாளி
லழியுமேகுழவியென்ரு ரளப்பருநோயினுலே

16-18-நாளில் அரிட்டமாவதறிய

தருமிலக்கினத்திற்பாபர் சனியுடன் கலந்துநிற்கி
லொருபதினுறுநாளி லான்மகவரிட்டமாகு
மருண்மதிநான்கினிற்ப் வாறினிவிரவிநிற்கின்
மருவிய பதினெட்டாநாள் மகவுக்கேயரிட்டமாமே

25 நாளில் அல்லது ஒரு மாதத்தில்
அரிட்டமாவதறிய

கதிர்கதி எட்டிநிற்கக் காரிசேய்கூடிப்பார்க்கிற்
றிதிதினமிருபத்தைந்திற் சனியிரவி யிரும்பதற்கோ
சதிருடன்லக்கினத்திற் சனித்தநன்மகவுஞ்சாவாம்
எதிருறப்பாராராயி னெழின் முப்பதாநாளிற்சாவே

1 மாதத்தில் அரிட்டமாவதறிய

வெள்ளியேரெட்டதாக வெய்யவன் சனிசேர்கூடிற்
றெள்ளியமாதமொன்றிற் சந்ததிக்கரிட்டமாகு
மெள்ளியசாபிராகுவுடன் கூடின்மாதமொன்றி
லள்ளிலைவறகனல்லா யருண்மகவரிட்டமாமே

2 மாதத்தில் அரிட்டமாவதறிய

ஓங்குதயனிற்கே துதித்திடப் பாபர் பார்க்கப்
பாங்குளவெட்டிலாறிற் பனிமதிநிற்கநற்போ
வாங்குளோர்பாராராகி லங்கமேல்விரண நோயாய்ப்
பூங்கொடுமாதமிரண்டிற் புனர்சன்மமாகுந்தானே

8 மாதம் 1 வருடம் அரிட்டமாவதறிய

இரண்டு பன்னிரண்டாறெட்டி லேற்றிடும் பாபர் நிற்கத்
திரண்டு நற்கோள்கள்பாரா துறின்மாதமெட்டிற்நின்று
முரண்டகோலிடப்பெட்டாக முனிவொடு பாபர் சாவர்
மிரண்டு செங்கதிரோன் பார்க்க மேன்மகவாண்டிற்சாவே

நாற்கால்பலிதம் பூமிபலிதம் தானியபலிதம்
பட்சிபலிதம் அறியும்படி

ஆதிசௌபத்திர சேயுடை மந்தொன்பதாமிரவிநிற்கி
லெதிரிலாவாடுமாடு பெருமைபூவாட்சியுண்டாம்
சதிருடனிவர்களோடே தருமந்திராகுகூடிற்
பதிநவதானியங்கள் பலபட்சி மிருகமுண்டே

தரித்திரனுவ தறியும்படி

ஆக்கியவுதயம் வெள்ளியைந்தினிற் செய்வாயொன்பான்
றேக்கியமதியம்பத்திற் செய்யலாபத்திற் பொன்னேன்
ஆக்கிய நீசமாகிற் றரித்திர யோனென்பார்
பக்கியமுடையோனும் பலபொருட்சேதமாமே

## அதிக விரலுள்ளதறிய

அற்நலக்கின மைந்தினிலொன்பதிற்
பொற்புளபுந்தி பொருந்தியுற்றிடவவர்
துற்பலமாயிடித் தாற்றுங்கைகால்களிற்
கற்பிலதிகவிரல் களைக்காட்டுமே

## ஊமையாய்ப் பிறந்து சிறிது நாளில் பேசுவான்

விடையினின்மதிதா னிருந்தடமீனம்
விருச்சிகங்கடக படந்தைந்திற்
கடைபடுகின்ற நவாங்கிசமதனிற்
கருதியமூன்றினிற் கரிங்கோளிடைவிடாதிருக்க
பிறந்திடுஞ்செல்வ வெண்ணமிலூமை
யாகநற்கோள டைவுறநோக்கிற்
சிறிதுநாள் கழிந்து பின்னர்
வாக்குண் டெனவரையே

## பல்லுடன் பிறப்பதறிய

அரும்பியமிதுனங் கன்னியிற்புந்தி
யங்கிசந்தன்னிற்செவ்வாய்க்காரி
இருந்தானுதயஞ் செய்திடப்
பிறந்தோனிலக்கின மின்றியேகெக்காய்
திருந்தியவாயிற் பல்லுடன்
பிறக்குஞ்சனி யுச்சமேயாகிற்
பெரும்பல்லதாக நிரிம்பியவாயாய்ப்
பிறந்திடும்மே டிளமயிலே

## கால் முன்னுகவும் கொடி நின்று பிறப்பதறிய

பாம்புதயத்தினேகப் பத்தினிற்சாமிமேவிற்
றேம்பிக்கால்முன்னுய்தோன்றும் செய்யகேந்திரத்தே
பாம்பு
பாம்பரியுடனேகூடி யானவக்கினத்தினிற்கிற்
ரும்புருங்கொடி பயநிற்கிற் றரணிலல்பிறக்குந்தானே

## கொடி சுற்றி பிறப்பதறிய

குறிந்தலக்கினத்தில்ராகு குளிகனுங்கூடி நிற்க
வெறித்தலக்கினத்தோனெட்டா மிடத்துடையவனுங்கூடி
சிறப்புறுராகித் திரேகாணந்தன் னி நிற்கப்
புறப்படுங்கொடியேசுற்றிப் பிறந்திடுமென்று சொல்வார்.

## இதுவுமது

அணையசற்பத்திரேகாண மானலக்கின திரேகாணம்
புணையிலக்கினேசன்றனே பொருந்திய திரேகாணந்தான்
றணையிலக்கினமுமத் தருநல்லோர் பாராராகில்
வணையறுகொடியேசுற்றிமண்ணின்மேற்பிறக்குமென்பார்

## இதுவுமது

சிந்தைகூறிடபமேடஞ் சிங்கமேயுதயமாகப்
பதறியுஞ்சனியுங்கூடப் பொருந்திடுமகவேதோன்று
நொந்தவீழுடலிற்பின்னிக் கொடிசுற்றிப்பிறக்குமென்பார்
அந்தரமின்னைப்போலு மழகியவிடையினளே

## இதுவுமது

விரவிலக்கினத்திற்பாவர் மேவிடக்கொடியோர்பார்க்க
கரியராக்கேதுகூடிக் கடியகோள்வீடுதானே
பரிவிலக்கினமதாகிற் பண்புறுதேகமீதே
றரணிமின்மாலையிட்டுத் தாள்கொடிசுற்றுந்தானே

## இதுவுமது

நடுக்கும்லக்கினத்துக்கோடகு நடுவாகப்பாம்புநீசந்
தொடுத்தலக்கினத்தை செவ்வாய்சூரியன்பார்க்கிற்றனும்
வடுத்தவிருமணையர்தன் னமந்தன்சேய்பாற்குமேனுந்
தடுத்திடாக்கொடியேசுற்றித் தரணியிற்பிறப்பன்மாதே

## சன்னியாசி ஞானியாவதறிய

கன்மநாயகன்றன்னோடே காட்சியாமூன்றுகோட்க
டன்மையாம்கூடிநின்றாற் சன்யாசிரோகமுண்டாம்

பொன்மையாலொருகோள்கூடிற் பொருந்தியஞானியாம்
நின்மையிற்குருகடாட்சத்தினின்மிகவுரைத்தல்வேண்டும்

இலக்கின பாவம் முற்றிற்று

ஃஃஃ

# இரண்டாம் பாவம்

வியாக்கியம்

வாக்குஸ்தனாதிபதி வியாழத்துடனே கூடி நிற்க 4-9-12-மிடத்தோர்கள் கேந்திரகோண மேறினிற்க ஜாதகமானவன் உயர்ந்த வாழ்க்கையோடு லட்சம் பொன் தேடி வாழ்வானென வறிக.

இலக்கினுதிபதி கேந்திரமேறினிற்க 4-5-9-மிடத்த திபர் கேந்திர கோணத்திலிருக்க ஜாதகமானவன் கீர்த்தி யோடு தனமுடைத்தாய் வாழ்வானென வறிக.

ஓரைக் குடையோனும் வாக்குஸ்தானுதிபதியும் 9-10-11-மிடத்தோர்களும் ஆட்சி யுச்சமாகினிற்க, ஜாதகமானவன் அரசற்கபிமானியாகவும் குறைவில்லா செல்வத்தோடு நானுவிதத்திலும் நிதிதேடுவானென வறிக.

ஜென்மாதிபதியும் 4-10-மிடத்ததிபரும் கேந்திரத்தி லிருக்க ஜாதகமானவனுக்கு பெருத்த வாழ்விஞேடு கீர்த்தி பெறுவானென வறிக.

வாக்குஸ்தானுதிபதி பாவியாக இலக்கினுதிபதி தீயனு கனிற்க ஜாதகமானவன் மிடியனுகவும் பாவியாகவும் குலத்தினுக்கு ஆகாதவனுகவுமிருப்பானென வறிக.

பாபக்கிரங்கள் உடலேயும் உயிரையும் பற்றி நிற்க தீயர்கள் மேல் நோக்க ஜாதகமானவன் குலம் நாசம் அடைவதுமன்றி ஆபத்தான மரணமடைவானென வறிக.

இரண்டாமிடத்திலும், அஷ்டமத்திலும், இலக்கினத்திலும் பாபக்கிரகங்களிருக்க அவரை சுபகிரகங்கள்நோக்க ஜாதகமானவன் சிசுவிற்கு ஆயுள் திரணம் தாய் வழியில் தனநஷ்டம் திரணத்திற்கும் உதவாமற்போமென வறிக.

### 2-மீடத்தில் சூரியன் நின்ற பலன்

தானஸ்தானமாகிய இரண்டாமிடத்தில் சூரியன் நிற்க ஜாதகமானவன் அரசர்க்குப் பிரியன் நேந்திர ரோகன் வித்தை விரோதமுடையவன் முகரோகி வாக்கு விரோதன் மாடு மைந்தர் காலி கன்று மித்திருவிரோதம், திரவியந் தேட வல்லவன், வாய்ச்சாலகன், முன்கோபி, இவனது தனம் சோரர்களால் நாசமாகுமென வறிக.

### 2-மிடத்தில் சந்திரன் நின்ற பலன்

வாக்குஸ்தானமாகிய இரண்டாம் இடத்தில் சந்திரன் இருக்க ஜாதகமானவன் வித்தைப்பிரதாபன் வாலிபத்தில் விவாகமாகும் நல்ல வசனன் தனமுடையவன் அழகன் கீர்த்தியான நயனசல ரோகன் புத்திரமித்திர சம்பதிதுமுடையவன் இவை வளர்மதியாகில் சொற்ப தனமுடையவனென வறிக.

### 2-மிடத்தில் அங்காரகன் நின்ற பலன்

நேத்திர ஸ்தானமாகிய இாண்டாமிடத்தில் அங்காரகனிற்க ஜாதகமானவன் சஞ்சலன். தனுர்வித்தை கற்பன், குருரமுகத்தையுடைய துட்டன், நேத்திர ரோகன் மலசல விரோத ரோகன் துஷ்டர் சாவகாசமுடையவன் மனையாளைப் பகை செய்பவன் அசத்தியனென வறிக.

### 2-மிடத்தில் புதன் நின்ற பலன்

தனஸ்தானமாகிய இரண்டாமிடத்தில் புதன் நிற்க ஜாதகமானவன் சகல கல்வியிற்பிரியன் சுகப்பொசுப்பன் வெகு வித்தையும் சுத்தமனதுமுடையவன் கொடுமை

யில்லாத நல்வாக்குடையவன் வாலிபத்தில் விவாகம் புரிகுவன் குணமுடைய சவுந்தரன் குளிர்ந்த நயநத்தன் விடுகதை காவியம் இவைகளில் அதிகப்பிரசங்கன் மிகு சாத்திர வல்லவன் சத்தியவாக்கன் முகவசியனென வறிக.

## 2-மிடத்தில் வியாழன் நின்ற பலன்

வாக்குஸ்தானமாகிய இரண்டாமிடத்தில் வியாழன் நிற்க ஜாதகமானவன்கல்விமான்சுபநேத்திரமுடையவன் வாக்கு மனம் புகழுடையவன் பாலியத்தில் விவாகமுண் டாகும் போக பாக்கியமுடன் பிராமணர்கள் பெரியோர் கள் நேசமுடையவன் மன்னருக்குச் சமானமானவன் சபை புகழும் வல்லவன்வாய்ச்சாலகன் மிக சுகபோஜனத் தன் கணத்துரைத்தனமுடையவன் விதரணி யென வறிக.

## 2-மிடத்தில் சுக்கிரன் நின்ற பலன்

வாக்குஸ்தானமாகிய இரண்டாமிடத்தில் சுக்கிரனிற்க ஜாதகமானவன் நயனரோகமுடையவன் காமநூல்களை அறிகுவன் வெகு சேஷ்டைகள் புரிகுவன் அபிமானன் கல்விமான் வாலிபத்தில் விவாகம் புரிகுவன் சத்திய வாக்கன் மேன்மை யுள்ளவன் சுயக்கவிதை சொல்வன் சுகபோஜனத்தன் பொருளுடையவன் முத்தாரம் அணிகுவன் வெள்ளிப்பாத்திரத்தில் போஜனம் பண்ணு வனென வறிக.

## 2-மிடத்தில் சனி நின்ற பலன்

வாக்குஸ்தானமாகிய இரண்டாம் இடத்தில் சனி நிற்க ஜாதகமானவன் நல்ல நயன மொழியுள்ள களத்திர முடையவன் போகியாவான் பணிகளை செலவழிப்பன் வாக்கு விரோதமுடையவன் மந்த பத்தியுள்ளவன் வீண் சண்டை போடுவன் காமதாகமுடையவன் வஞ்சகன் முகரோகி பாதாரத்தின் மேல் மனமுடையவனுமென வறிக.

## 2-மிடத்தில் இராகு நின்ற பலன்

வாக்குஸ்தானமாகிய இரண்டாமிடத்தில் இராகு நிற்க ஜாதகமானவன் தரித்திரன் கிலேரி நிர்மூடன் வித்தை விரோதி விஷவாக்குடையவன் நடுவயதில் பாக்கியமுடையவன் சாஸ்திரவாதி கண்டித வசனன் துர்ப்போசனம் பொசிப்பன் வாக்கு விரோதன் தந்த ரோகம் நேத்திர ரோகமுடையவன் குமிழ் மூக்கனென வறிக.

## 2-மிடத்தில் கேது நின்ற பலன்

வாக்குஸ்தானமாகிய இரண்டாமிடத்தில் கேது நிற்க ஜாதகமானவன் நிகரான வித்தை ஓதுவன் விவ வாக்கான் ஈன புத்தி வஞ்சனைத் தொழிலான் தனஞ்சம் பாதிப்பன் பந்துக்களுக்கெல்லாம் விரோதமாக விருப்பான் புரங் கூறுவனுமென வறிக.

## 2-மிடத்தில் குளிகன் நின்ற பலன்

வாக்குஸ்தானமாகிய இரண்டாமிடத்தில் குளிகன் நிற்க ஜாதகமானவனுக்கு நேத்திரரோகமுண்டாம் கோபி வீண் வார்த்தை வாங்காத சொற் பேதமுடையவன் பொருள் செலவை யுடையவன் தரித்திரன் சொற்பவித்தை யுடையவன் வாக்கு விரோதனென வறிக.

இரண்டாம் பாவம் முற்றிற்று

ஃஃஃ

# மூன்றும் பாவம்

## சகோதர பலன்

தனஸ்தானமாகிய இரண்டாமிடத்தில் சூரியன் நிற்க மூன்றுமிடத்தில் தீக்கோளிருக்க தனக்கு மூத்தோர்கள் உண்டாம், சரராசியில் சனி நிற்க, அங்காரகன் மூன்றும் இடத்தில் நிற்க அவரைத் தீக்கோள்கள் நோக்க ஜாதக மானவனுக்கு சகோதரமுண்டாமென வறிக.

வியஸ்தானுதிபதி 6-3 லேனும் அல்லது வியத்திலே
னும் பகைவர்களோடு பகை நீசத்தில் தோன்ற ஜாதக
மானவனுக்கு முன்பின் சகோதரமில்லை யென வறிக.

சகோதரஸ்தானமாகிய மூன்றும் இடத்தில் சுக்கிரன்
இராகு இவர்களிருக்க சகோதர விர்த்தியுண்டாம்மூன்றும்
இடத்திற்கு அதிபன் மூன்றுமிடத்திலிருக்க ஜாதகமானவ
னுக்கு சகோதரன் இரண்டு உண்டாமென வறிக.

பராக்கிரம பலன்

உதயத்திலும் மூன்றுமிடத்திலும் லாபஸ்தானுதிகள்
உச்ச கேந்திரகோணத்தில் இருக்க ஜாதகனுடைய
சகோதரர் பிரபலமானவர்கள் சனியுஞ்சாமியுங்கூடி ஆறும்
இடத்திலிருக்க சுபக்கிரகம் பாராதிருக்க பராக்கிரகம்
உண்டாமென லிறிக.

3-மிடத்தில் சூரியன் நின்ற பலன்

சகோதரஸ்தானமாகிய மூன்றுமிடத்தில் சூரியனிற்க
ஜாதகமானவனுடைய சகோதரத்திற்கும் பீடை யுண்டாம்
வழிபடுந் தியாகியாவான் வீரமுடையவன் பலாட்டியன்
துற்சனன் சாவகான் தன் பகைவர்களை வெல்லுவான்
வெகு ஜனமித்திரன் மைந்தர்களுக்குப் பீடை யுண்டாம்
என வறிக.

3-மிடத்தில் சந்திரன் நின்ற பலன்

சகோதரஸ்தானமாகிய மூன்றுமிடத்தில் சந்திரன்
இருக்கஜாதகமானவன் ஆடையாபரணசிங்கார பூஷணுதி
களின் இலாபமுடையவன் தர்ம கதைகளைக் கேட்பவன்
சூரத்துவமுடையவன்பெண்டுடையவன் சவுக்கியமுள்ள
சிரேஷ்டன் குரை சொல்லுங் குணத்தன் வித்தையுடைய
வனென வறிக.

3-மிடத்தில் அங்காரகன் நின்த பலன்

சகோதரஸ்தானமாகிய மூன்றுமிடத்தில் அங்காரகன்
இருக்க ஜாதகமானவனுடைய பிதுர் பிதுரர் இவர்களுக்கு

பீடையுண்டாம் ஞானவானுவான் குணப்பிரசித்தன் பூமி லாபமுடையவன் பாபர் நேயனெனவறிக.

### 3-மிடத்தில் புதன் நின்ற பலன்

சகோதரஸ்தானமாகிய மூன்ருமிடத்தில் புதன் நிற்க ஜாதகமானவன் சொல் ரட்புடையவன் தாட்சண்ணியம் உள்ளவன் பெரியோர்களிடத்தில் கேள்வி கேட்பன் ஞானகாரியங்களில் பிரியன் சற்சனர் சேர்க்கையுடைய வன் நிஷ்டூரன் முன்கோபி மந்த புத்தியுடைய அற்ப சகோதரமுடையவனெனவறிக.

### 3-மிடத்தில் வியாழன் நின்ற பலன்

சகோதரஸ்தானமாகிய மூன்ருமிடத்தில் வியாழன் நிற்க ஜாதகமானவன் துணைவருடன் ஞான உபதேசம் பெறுவான் தருமகதைகளிற் பிரியன் இராஜசேர்வை யுடையவன் பூஷணுதிகளணிகுவன் சொற்ப திரவிய முடையவன் வித்தையுடைவனெனவறிக.

### 3-மிடத்தில் சுக்கிரன் நின்ற பலன்

சகோதரஸ்தானமாகிய மூன்ருமிடத்தில் சுக்கிரனிற்க ஜாதகமானவன் மோகி கோபதாட்சிணியன் கலகன்சதா துக்கி தனத்தின் மேல் சிந்தையுடையவன் ஆளடுமைப் படுவோன் பெண் சகோதரமுடையவன் ஆடையாபரணப் பிரியனெனவறிக.

### 3-மிடத்தில் சனி நின்ற பலன்

சகோதரஸ்தானமாகிய மூன்ருமிடத்தில் சனி நிற்க ஜாதகமானவன் அபிமானி தனக்குக் கீழ்ப்பட்டவராகிய ஈனஜாதியைச் சேர்வை செய்குவன் நீச்சக்கிருத்தியன் காமி தைரியவான் செவிமந்தமுடையவன் ஜேஷ்டனுக்கு தோஷமுண்டாமெனவறிக.

### 3-மிடத்தில் இராகு நின்ற பலன்

சகோதரஸ்தானமாகிய மூன்ராம் இடத்தில் இராகு நிற்க ஜாதகமானவன் தீர்க்காயுளுடையவன் ஒழுக்க

முள்ளவன் தன்னையே புகழ்வன் பிரதாபி வசையுடையவன் சகோதரப்பீடை மண்ணின் மேற்றிரவியவான் யாவரும் நிந்திக்க அக்கிரமஞ் செய்குவானென வறிக.

### 3-மிடத்தில் கேது நின்ற பலன்

சகோதர ஸ்தானமாகிய முன்றுமிடத்தில் கேது நிற்க ஜாதகமானவன் செய்யும் காரியங்கள் காட்சியாகும். வீர பராக்கிரமசாலியாவான் சாத்திரக் கேள்வியுடையவன் கபால ரோகமுடையவன் பிராதுரு தோஷம் உண்டாமெனவறிக.

### 3-மிடத்தில் குளிகன் நின்ற பலன்

சகோதர ஸ்தானமாகிய மூன்றுமிடத்தில் குளிகன் நிற்க ஜாதகமானவன் வீரகதாபமுடையவன் பற்பல மொழி புகன்றிடுங்கர்வி பாக்கிய விரோதி சகோதர விரோதி கோபி பிதாவின் மேல் பக்தியுடையவன் மனோதிடத்தனென வறிக.

மூன்றும் பாவம் முற்றிற்று

ஃ ஃஃ

## நான்காம் பாவம்

### மாதுரு பலன்

மாதுரு ஸ்தானமென்னும் நான்காமிடத்ததிபனும் சந்திரனுங்கூடி கேந்திரகோணத்திலிருக்க சுபர்களோடு கூடி நிற்க ஜாதகமானவனுக்கு நன்மை யுண்டாகும் மாதுரு சுகமுண்டு வித்தை யுண்டு பூமியில் வாகனம் உண்டாகி வாழ்வானென வறிக.

மாதுரு ஸ்தானமென்னும் நான்காமிடத்ததிபனும் 7-8-10-11 மிடத்தோர் இவர்கள் கூடி கேந்திர கோணங்களிலும் உச்சம் ஆட்சி நட்பிலும் நிற்க ஜாதகமானவனுக்கு பெரிய யோகமுண்டாம் உத்தியோகமுண்டாம் அரசர்களிடத்தில் நேசமாகி சிவிகைலாபம் பெறுவானெனவறிக.

மாதுரு ஸ்தானமென்னும் நான்காம் இடத்தோனும் தனஸ்தானாதிபதியும் ஐந்தாமிடத்தோனும் இவர்கள் கேந்திர கோணமேறி ஆட்சி யுச்சம் பெற்று நிற்க, சுபக் கிரகங்கள் பார்க்க ஜாதகமானவனுக்கு சிவிகை குதிரை சாமரம் இவைகளுண்டாம் கன்னியர்கள் மீது மோகம் தமிழ் வித்தையிற் பிரியன் என வறிக.

மாதுருஸ்தானமென்னும் நான்காமிடத்ததிபன் 2·3 9-11 மிடத்ததிபர் இவர்கள் 6-12 மிடங்களில் பகை நீசம் பெற்று அஸ்தமனமாய் நிற்க ஜாதகமானவன் மிடியன் பொய் சொல்லுபவன் சுகமொன்றுமில்லாத வனென வறிக.

## மித்திர பலன்

மாதுரு ஸ்தானமாகிய நான்காமிடம் சுபமாக அதற் கிறைவன் சுபசேந்திரமேறி நிற்க அல்லது கேந்திராதிபதி நான் காமிடத்தோனும் சுபக்கிரகங்களும் மத்தியராகி நிற்க கேந்திரமேறி சாமியுடன் சுபமாகி நிற்க கற்பன சுபவர்க்கமான ஜாதகமானவன் கனம் பொருந்திய தனக்கணுகிமித்திரனுவானென வறிக.

## சௌக்கிய பலன்

மாதுருஸ்தானமாகிய நான்காமிடம் சுபக்ஷேத்திர மாகி அதில் சுபர்களிருக்கினும் மீனவிராசியில் குருவுஞ் சுபக்கிரகங்களும் கூடியிருக்க மூன்றுமிடத்திற்கிறைவன் கேந்திர கோணமேற குளிகன்கூட ஜாதகமானவன் தனது ஆயுள் பரியந்தம் குறைவில்லா செல்வமேடு வாழ்ந்திருப்பானென வறிக.

## 4-மிடத்தில் சூரியன் நின்ற பலன்

மாதுருஸ்தானமாகிய நான்காமிடத்தில் சூரியன் நிற்க ஜாதகமானவன் மனஸ்தாபமுடையவன் வாகன யீனன் பந்து ஜனன் தலபேதமுடையவன் வெகு ஜனவிரோதன்

மந்த புத்தியுடையவன் பிதுர் தோஷம் செய்யும் கிரகத்தில் தனநாசமாகும் மாதுருக்குப் பிடை உண்டாம் பற்பல விசாரம் உடையவன் பிரபு சேர்வை செய்பவன் என வறிக.

## 4-மிடத்தில் சந்திரன் நின்ற பலன்

சந்திரன் நிற்க ஜாதகமானவன் அழகன் போகி ஒழுக்கமுடையவன் பிரகாசமாகிய சொற்களை பகர்வன் செல்வன் வாகன லாபமுடைய விடு வாசல் வஸ்திர லாபமுடையவன் சுகபோஜனம் புசிப்பன் வித்தையில் அலங்காரப்படுவன் இவனுக்குப் பாதி வயதில் வாகன மேறுதலால் விரோதம் நேரும் மாதுருவுக்குப் பிடை காட்டும் கிரக பேதத்தினுல் மூலகண்டம் சம்பவிக்கும் என வறிக.

## 4 மிடத்தில் அங்காரகன் நின்ற பலன்

மாதுரு ஸ்தானமாகிய நான்காமிடத்தில் அங்காரக னிற்க ஜாதகமானவன் மித்துரு விரோதப்படுபவன் கருவிகளாலும் சோரர்களாலும் மாதுருத்துவேஷ முண்டாகும். தொடுத்துச் செய்யும் காரியம் சேதமாகும் அயல் வீட்டில் குடியிருப்பான் மனையாளை நிந்திப்பன் பாபாளுகவிருப்பன் பந்துஜன விரோதமுடையவனென வறிக.

## 4-மிடத்தில் புதன் நின்ற பலன்

மாதுரு ஸ்தானமாகிய நான்காமிடத்தில் புதன் நிற்க ஜாதகமானவன் பத்து வயதுக்கு மேல் பக்கிய வாளுகவிருப்பான் தீர்க்காயுளுடையவன் சேனாதிபதி யாகுவான் ஞானத்தைத் துஷிப்பவன் வாகனப்பிராப்தி யுடையவன் சுகபோஜனன் மனைவியுடையவன் மாதுருக்குப் பிடை காட்டும் வித்துவான் சமர்த்தன் சுபக் காரியம் முடிப்பன் கோவுடையவன் சங்கீதப் பிரியன் என வறிக.

## 4-மிடத்தில் வியாழன் நின்ற பலன்

மாதுரு ஸ்தானமாகிய நான்காமிடத்தில் வியாழன் நிற்க ஜாதகமானவன் பிறர் தேசத்திற்கு அதிபதியான பந்து ஜனங்களைச் சேர்க்கை செய்வன் தீர்க்காயுசு உடையவன் கீர்த்தி பொருந்திய பலவான் தனவஞ்சன் சிரேஷ்டன் யாவரும் புகழத்தக்க வித்தை யோதுவன் வீடு வாசலுடையவன் சுகதேதி அரசர்க்கினியவன் ஆளடுமை கொள்வன் மித்திரனுவானென வறிக.

## 4-மிடத்தில் சுக்கிரன் நின்ற பலன்

மாதுரு ஸ்தானமாகிய நான்காமிடத்தில் சுக்கிரன் நிற்க ஜாதகமானவன் கியான வித்தையுடைவன் சவுக்கியன் சுயமாகக் கவிபாடுபவன் ஆளடுமை கொள்வன் பசுவிர்த்தியுடையவன் அழகன் கீர்த்தியுடையவன் தீர்க்காயுசு உடையவன் தர்மத்தில் பித்திரன் மேல்வீடு உப்பரிகை ஆசாரமுகப்பு மாடமாளிகை யுடையவன் சங்கீத வித்தையிற் சாமர்த்தியப்பிரசங்கள் முக்கியமான் தேசாதிபதியாவான் சுகமுடையவன் மோகன் புத்திர மித்திரர்கள் உடையவனென வறிக.

## 4-மிடத்தில் சனி நின்ற பலன்

மாதுரு ஸ்தானமாகிய நான்காமிடத்தில் சனி நிற்க ஜாதகமானவன் மாதுருக்கு தோஷம் காட்டும் பந்து ஜனவிரோதன் ஆசார ஈனமுற்று சதா துக்கியாக விருப்பான் ரோகமுடையவன் இருகால் முடக்குண்டாம் மனக்கபடன் பந்துநாசமுடையவன் வாதத்தினால்பீடை யுடையவன் வாகன மேறுதலினுலும் நாயினுலும் பய முண்டாமென வறிக.

## 4-மிடத்தில் இராகு நின்ற பலன்

மாதுரு ஸ்தானமாகிய நான்காமிடத்தில் இராகு நிற்க ஜாதகமானவன் பந்து ஜனங்களுக்குப் பகையாகு வன் வாகன பயம் மாதுவுக்குப் பீடை தனச்செலவு யாத்திரை சஞ்சாரம் நடையில் அலைப்பு கோபம் தாபம்

மடம் வீடுவாசல் இவைகளுண்டாம் கிரகங்களினால் விரோதமுண்டாம் யாதொரு காரியமும் அவசரமாகப் பேசுவானென வறிக.

## 4-மிடத்தில் கேது நின்ற பலன்

மாதுரு ஸ்தானமாகிய நான்காமிடத்தில் கேது நிற்க ஜாதகமானவன் பிறர்மனைக்கு ஈனமாக மறுமனையில் வந்து வாழ்வன் முதலில் பீடையுண்டாம் மாதுருவுக்குத் தோஷம் செய்யும் தான் செய்யுங் காரியத்திற் தாட்சி யுண்டாம் பிறரால் நிந்திக்கப்படுவான் சதா துக்கி மதுபானன் குச்சி வீடுள்ளவன் குளிகனும் கூடச் சேர்ந் திருப்பானாகில் வீடில்லான் வழிக்கரையில் குடியிருப் பான் தரித்திரன் சஞ்சாரனுவானென வறிக.

## 4-மிடத்தில் குளிகன் நின்ற பலன்

மாதுரு ஸ்தானமாகிய நான்காமிடத்தில் குளிகன் நிற்க ஜாதகமானவன் பந்து ஜனங்கள் யாவரையும் விட்டுகாடுமலை இவைகளில்சஞ்சாரம்செய்வான் சனியும் இராகுவுங்கூடி நிற்கில் காடுகளில் திரிவான் சத்துரு கிரகங்களுக்கு ஆட்சி வீடாகவிருக்க பந்து ஜனங்களைத் தள்ளி வேறுபட்டிருப்பானென வறிக.

நான்காம் பாவம் முற்றிற்று

ஃ ஃ ஃ

# ஐந்தாம் பாவம்

## பிதாபலன் புத்திரபலன் விவேகபலன்

ஐந்தாமிடத்ததிபனும் வாக்கு ஸ்தானாதிபதியும் புதனும் வியாழனுந் தோன்றி நட்பாச்சியுச்ச திரிகோண கேந்திரங்களிலுள்ளவர்களோடு கூடினும் பார்க்கினும் ஜாதகனுக்கு செகத்தின் மீதுகளத்திர புத்திர பௌத்திர னால் யோகமுண்டாமென வறிக.

வாக்குஸ்தானாதிபதி குருவுடன் கூடி நிற்க சுக்கிர புதன் சந்திரன் இவர்கள் கடகத்தில் நிற்க ஜாதகனுக் மிகுந்த தனமுண்டாகி ஆளடுமை கீர்த்தி முதலி யோகமுண்டாமெனவறிக.

வாக்குஸ்தானாதிபதியும். புதனும் கேந்திர கோண தில் ஆட்சியுச்சமாக நிற்க ஜாதகமானவன் வித்வா யும் ஆறு சாஸ்திரமும் வாசிக்க வில்லவனாகி கணி நூல் புலவனாவானெனவறிக.

மாதுரு ஸ்தானாதிபதியும். சிவகிரகங்களும் வாக் ஸ்தானத்தில் நிற்க அல்லது பாவக் கிரகங்களோ சேர்ந்து பகை நீசத்தில் நிற்க ஜாதகமானவன் பாதை படுத்தும் பிணியும் மக்கள் சேதமுமாகி மிடியனாக இற துன்பனெனவறிக.

ஐந்தாமிடத்ததிபனும், வியாழனும் நட்பாட்சியி னும் திரிகோண கேந்த்ரங்களிலேனும் சேர்ந்து நிற் ஜாதகமானவன் பட்டாடை யணைவன் பரிமளகந் பணிவன் தன்னுடைய குலத்திற்கெல்லாங் காரியவா வானெனவறிக.

புதன் சந்திரன் சுக்கிரன் இவர்கள் திரிகோ கேந்திரத்தில்சேர்ந்து நிற்க ஜாதமானவன் ஞானி ப கலைவாசிக்குந் தீரன் புத்திரப்பேருடையவன் கவி கொண்டாட வல்லவனாவானெனவறிக.

குரு சுக்கிரன் புதன் இவர்களிலொருவர் நிற்கினு நோக்கினும் சர்வதோஷமும் நீங்குமெனவறிக

பிதுர்க்கிரகமான சூரியனும் மாதுர்க் கிரகமா சந்திரனும், பத்திர கிரகமான குருவும் நட்பாட்சி யு மாய் பலவானுமாய் சுபக்கிரகங்களின் பார்வை யுண் னால் ஜாதகனுடைய பிதாவுக்கு பூரணாயுசுவெனவறி

ஜன்மலக்கினத்தில் பிதுர்க்கிரகம் நட்பாட்சி யு மாய் பலன் பெற்ற இராசி பூர்பாதியில் நிற்கினு இட்டிச்சொத்த கிரகங்கள் பிதுர்க்கிரகமாலும் இ ராசிக்குண்டான குணமும் ஜாதகன் பிதாவுக்குப் பூ யுசுமுண்டாமெனவறிக.

## 5-மிடத்தில் சூரியன் நின்ற பலன்

ஐந்தாமிடத்தில் சூரியன் நிற்க ஜாதகமானவன் திற முள்ள புத்திரமான ஞானி தரித்திரன் புத்திர நாசமடைகுவன் பிதுர் தோஷம் அல்லது சர்வஜன விரோதமுடையவன் காந்தன வனசஞ்சாரன் அ௱சர்களுக்குக் கோபியாகவிருப்பான். அவனுக்குதான் கற்ற வித்தையிலேயே அபாயம் நேருமென வறிக.

## 5-மிடத்தில் சந்திரன் நின்ற பலன்

ஐந்தாமிடத்தில் சந்திரனிருக்க ஜாதகமானவன் தாயாருக்கு இடர்நேரும் புத்தியினுல் தலைந்தேறுவோன் மாந்திரீக வித்தை கற்பன் மூர்க்கன் சோம்பன் காமி சவுபாக்கியன் துலங்கிய சரீரனென வறிக.

## 5-மிடத்தில் அங்காரன் நின்ற பலன்

ஐந்தாமிடத்தில் அங்காரன் நிற்க ஜாதகமானவன் சஞ்சாரன் கோபி தனநாசமடைகுவன் காரிய நாசன் பாச சிந்தையுடையவன் கலகவான் புத்திர நாசமடைகுவன் நீசகர்மம் புரிகுபவன் பராக்கிரம வைராக்கியன் தைரியவானெனன வறிக.

## 5-மிடத்தில் புதன் நின்ற பலன்

ஐந்தாமிடத்தில் புதன் நிற்க ஜாதகமானவனுக்கு மாதுரு புத்திரதோஷமுண்டாம் பாராயணக் கேள்வி கல்விமான் ஞானி, சம்பத்து. கீர்த்தியுண்டாம். மணி மந்திர வைராக்கியத்தில் வல்லவனுக யிருப்பானென வறிக.

## 5-மிடத்தில் வியாழன் நின்ற பலன்

ஐந்தாமிடத்தில் வியாழன் நிற்க ஜாதகமானவனுக்குப் பெரியோர்கள் நேசமுண்டாம். வாய்ச்சாலகனுக விருப்பான் தீர்க்காயுசுடையவன் விவேகி நிபுணன் உரசர் சினேகன் உன்னித சரீரன் தாயையீன்ற தாயாருக்கு அரிட்டம் நேருமென வறிக.

## 5-மிடத்தில் சுக்கிரன் நின்ற பலன்

ஐந்தாமிடத்தில் சுக்கிரன் நிற்க ஜாதகமானவன் சுயமாகக் கவிபாடும் பிரசங்கீன் சுகதேகன் நியாய புத்தி யுடையவன் மடவார்களின் சரீரமுடையவன் கல்வியிற் பிரியன் வெகு ஜனக்கூட்டுறவுடையன் புவி ராஜர் நட்பு பெற்றவன் கீர்த்திமான் நாலு விதத்திலும் தனந்தேடுவானென வறிக.

## 5-மிடத்தில் சனி நின்ற பலன்

ஐந்தாமிடத்தில் சனி நிற்க ஜாதகமானவன் தரும சிந்தையுடையவன் கெடுதியான புத்தி அற்பாயுள் சத்துரு மைந்தர்கள் நாசமடைகுவர் உதய காலத்தில் தந்து நேரும் அது தீப்பில் தீர்க்காயுளுண்டு பிதுர்க்குத் தோஷம் பத்திரவேஷன் தேகவீனன் பிறரை நிந்திப்பன் குலமந்தன் சதா துக்கி அற்பனென வறிக.

## 5-மிடத்தில் இராகு நின்ற பலன்

ஐந்தாமிடத்தில் இராகு நிற்க ஜாதகமானவன் தலைப்பிள்ளை பெண் பெருகுவன் அற்ப புத்திரர் உடைய வன் பல வேசையரிடத்தும் பரிகாசமுஞ் சரசவிரோதமும் நேரும் செப்பிடு வித்தை கற்பன் படித்தோர்களிடத்தில் அவமானப்படுவன் பாவ சிந்தையுள்ளவன் மனப்பிரீதி யும் தரித்திரமும் காமியும் வஞ்சகனுமாவனென வறிக.

## 5-மிடத்தில் கேது நின்ற பலன்

ஐந்தாமிடத்தில் கேது நிற்க ஜாதகமானவன் ஞானிகிலேசன் புத்திரதாசன் மிகுவஞ்சகன் குரூரன் சதா காலமும் ரோகியாகி மைந்தர்களைப் பெற்று இழப்பன் என வறிக.

## 5-மிடத்தில் சந்திரன் நின்ற பலன்

ஐந்தாமிடத்தில் குளிகன் நிற்க ஜாதகமானவன் பூசி வயித்தியன் குலதெதுர்கருமிசதா துக்கிபாவிகஞ்சலக்காம

பாவ புத்தியுடையவன் மடத்திலும் சத்திரத்திலும் பிறர் மனை யிடத்தும் போஜனம் செய்வன் என வறிக.

ஐந்தாம் பாவம் முற்றிற்று

ஃஃஃ

# ஆறும் பாவம்

சத்துரு பலன்

புத்திரகாரனாகிய குரு ஐந்தாமிடத்தில் நிற்க அவரைப் பாபர்கள் கூடி நிற்க ஜாதகமானவன் வெகு பசியாளன் வெகு புசிப்பானென வறிக.

ஆறுமிடத்தில் அங்காரகன் நிற்க சூரியன் சந்திரன் இவர்கள் கூட ஜாதகமானவன் பகைவரை உபாயத்தினால் ஜயம் பண்ணுவானென வறிக.

பாபர்களோடு சுபர்கள் கூடி ஆறுமிடத்தில் நிற்க ஜாதகமானவன் பரதார விஷயத்தில் கலகமும் அவமானமும் அடைவன் விஷவிரோகமனையாள் விரோதன் என வறிக.

சனி செவ்வாய் இவர்கள் கூடி ஆறுமிடத்தில் நிற்க ஜாதகமானவன் பலவான் கீர்த்திப் பிரதாபன் தனவான் சத்துருக்களை ஜெயம் பண்ணுவன் சனி ஐந்தாமிடமிருக்கினும் ஜெயமுண்டாமென வறிக.

ரோக பலன் கூறுகின்றன

வாத ரோகம்

ஆறுமிடத்தில் பாவக் கிரகங்களுடன் சந்திரன் கூடினும் அல்லது பாபரிருக்கினும் ஆறுமிடத்ததிபன் பாவ ராசியாக அவரை சனி கூடி நிற்க உதயத்திலும் 6-8-ம் இடத்தில் புதன் நிற்க 4-6-மிடத்தில் சனி நிற்க ஜாதகமானவனுக்கு வாதரோகம் சம்பவிக்குமென வறிக.

## விப்புருதி குஷ்டம்

குருவானவர் மூன்றுமிடத்திற் குடையவனைக் கூடி குறைந்து நிற்க உதயத்தில் செவ்வாய் சனி சூரியன் இவர்களிருக்க அல்லது செவ்வாய் உதயத்திலிருக்க சனி பார்க்க ஜாதகமானவனுக்கு விப்புருதி குஷ்டம் சம்பவிக்குமென வறிக.

## குஷ்டம், பிளவை தந்த ரோகம்

6-8-மிடத்தில் சனியிருக்க சுக்கிரன் தவிர மற்ற கிரகங்கள் கூடியிருக்க குஷ்டமுண்டாம் ஐந்தாமிடத்தில் பாபக்கிரகங்களிருக்க தந்தரோகமுண்டாமென வறிக.

இலக்கினத்திற்கு 3-5-6-லாபம், பாக்கியம். இந்த ஸ்தானங்களில் தீயர்களிருக்க ஜாதகனுக்கு தந்தரோகம் உண்டாமென வறிக.

## பிளவை, முகரோகம், முகவாதம், முகஜன்னி

அங்காரகன் அங்கிசத்தில் சூரியனிருக்க அதுவே இலக்கினமாக சந்திரனும் பார்பும் நான்காமிடத்தில் கூடி நிற்க ஜாதகனுக்குப் பிளவை ரோகமுண்டாமென வறிக.

இலக்கினத்திற்கு இரண்டாமிடத்தில் சூரியனும் சனியுங் கூடி நிற்க ஆறுமிடத்தில் சந்திரனிருக்க சந்திரனுக்கு எட்டாமிடத்தில் குளிகனிருக்க ஜாதகனுக்கு முகரோகம் உண்டாமென வறிக.

லக்கினத்திற்கு 2-3-மிடத்ததிபரும் புதனும் இராகுவுங் கூடி நிற்க ஜாதகனுக்கு முகவாதரோகமுண்டாமென வறிக.

ஆறுமிடத்திறைவன் ஆறுமிடத்திலிருக்கினும் புதன் சனி இராகு இவர்களை கூடினும் ஜாதகனுக்கு முகவாதம் முகஜன்னி யுண்டாமென வறிக.

## நாசி ரோக, முகரோகம்

உதயவிராசியிற் சூரியன் செவ்வாயுடன் கூடியிருக்க ஜாதகனுக்கு நாசிரோகமோடு முகரோகம் உண்டாமென வறிக.

## கண்ட ரோகம்

நலிவுற்றுப் பாபர்கள் நின்ற நட்சத்திரத் தனச்குப் பின்னால் மலியும் நட்சத்திரத்தில் வந்திடும் மகவேறாக எட்டாமிடத்தோன் எட்டாமிடத்தில் நிற்கினும் இலக்கினத்திற்கு மூன்றுமிடம் நீசமாக மூன்றுமிடத்ததிபன் கலந்திருக்கினும் அல்லது எட்டாமிடத்தில் இருக்கினும் 2-3-மிடத்ததிபரை இராகு கூடினும் ஆறுமிடத்தில் செவ்வாய் நிற்கினும் ஜாதகனுக்கு கண்ட ரோகமுண்டாமென வறிக.

## கன்னரோகம்

இலக்கினத்திற்கு 5-9-மிடங்களில் பாபக்கிரகங்கள் நிற்க ஜாதகனுக்கு கன்னரோகமுண்டாமென வறிக.

சுக்கிரன். சனி, குரு, புதன், சந்திரன் சூரியன் இவர்கள் கூடினும் 3-6-மிடத்திலிருக்கினும் அதில் நிற்பவர் உடன் கலக்கினும் ஜாதகனுக்கு சிரரோகமாமென வறிக

## பீனிச ரோகம்

ஆறுமிடத்தில் குருவன்றி மற்ற கிரகங்கள் கூடி நிற்க ஜாதகனுக்கு நாசியில் பீனிசரோகமுண்டாமென வறிக,

## குய்ய விரணரோகம்

இலக்கினத்திற்கு மூன்றுமிடத்தில் நிற்பவனையும் மூன்றுமிடத்ததிபனையும் செவ்வாய் இராகு சனி இவர்கள் கூடி நிற்கினும், இலக்கினத்திற்கு ஆறுமிடத்தும்மிதுனம் கன்னி இவைகளினும் தீக்கோள்கள் நிற்கினும் அல்லது 7-8-மிடத்திற் குடையோர்களை செவ்வாய் பார்க்கினும் ஜாதகனுக்கு குய்யத்தில் விரணரோகமுண்டாமென வறிக.

## வீரணம் சரீரம் லிங்கவிரணம்

இலக்கினத்திற்கு 2-8-மிடத்தில் கேதுவிக்க 3-6-ம் இடத்துக்கிறைவன் பாவியுடனே கூடி உதயத்திலும் எட்டாமிடத்திலும் இருக்க ஜாதகனுக்கு சரீரவிரணம் உண்டாமென வறிக.

இலக்கினத்திற்கு 6-7-மிடத்தோர்கள் எட்டாமிடத்தி லிருக்க அவரை செவ்வாய் பார்க்க ஜாதகனுக்கு லிங்க விரணமுண்டாமென வறிக.

## பயித்தியம்

உதயத்திற்கு எட்டாமிடத்தில் சூரியன் நிற்க தன ஸ்தானத்தில் சனி நிற்க அவரைப் பாபர் காணினும் சூரியனுக்கு எட்டாமிடத்தில் வியாழனுடன் புதன் கூடி யிருக்க ஆருமிடத்திற்கதிபன் ஆருமிடத்தில் சுக்கிரனுடன் கூடினாலும் பார்த்தாலும் ஆருமிடத்திலிருப்பவனும் சந்திரன் வியாழன் சனி சூரியன் சுக்கிரன் இவர்களிருக் கினும் ஜாதகனுக்குப் பயித்தியமுண்டாம் என வறிக.

## பித்த ரோகம்

இலக்கினத்திற்கு ஆருமிடத்தோன் அங்காரகனைச் சேர்ந்து நிற்க ஜாதகனுக்கு இரத்தப் பித்த ரோகமுண்டா மென வறிக.

## பசாசு பீடை

### விருத்தம்

பலமதின்மதியுமெட்டிற் பெட்புர்ச்சனியும்பாம்பும்
பலமுறக்கூடிநின்ருற் பசாசினுற் பயமுண்டாகு
மிலகியவாறிலாறுக் கிறைபாம்பைக்கூடினுலுங்
கலகமாய் பசாசுப்பீடை காட்டிடுங்க யற்கண்ணுளே

## இதுவுமது

நவிலும்லக்கினத்தைச் செவ்வாய் நோக்கிடவாறுக்
குள்ளோ
னவமிலாவேழிநிற்கி லலகையாற்பிடைகாட்டுந்
தவறிலா நாலிற்செவ்வாய் சனிரவியிருக்கிற்பார்க்கிற்
கவலையாம் பசாசுபீடை காணுங்கற்பகப்பூந்தேனே

## இருமல் ரோகம்

இலக்கினத்திற்கு ஆறுமிடத்தில் சந்திரன் சூரியன் பாபரோடு சேர்ந்து நிற்க ஜாதகமானவனுக்கு இருமல் ரோகமுண்டாமென வறிக.

## இரணதேகம்

இலக்கினத்திற்கு ஆறுமிடத்துக்குடையோன் சூரியனுடன் இலக்கிணத்தி லிருக்கினும் மூன்றுமிடத்தில் அங்காரகனிருக்க மூன்றுமிடத்திறைவன் பாபரோடே கூடி 6-8-மிடத்திலிருக்கினும் சுவாமி நீசமுடன் வக்கிரமாக அல்லது குருவற்கமாக அலைந்திடினும் ஜாதகனுக்கு இரணமுள்ள தேகமாமென வறிக.

## இடது நேத்திர ரோகம்

உதயத்திலும் ஏழாமிடத்திலுஞ் சூரியன் கலந்துநிற்க பாபர்கள் பார்க்க ஜாதகனுக்கு இடது நேத்திர ரோகமாம் என வறிக.

## வலது நேத்திர ரோகம்

உதயத்திற்கு 2-8-மிடத்தில் பாபர் நிற்க ஜாதகனுக்கு வலக்கண் ரோகமுண்டாம் ஜென்மத்திலும் ஏழாமிடத்திலும் ராகுவிருக்க அவரை சனி பார்க்க வலக்கண் ரோகமுண்டாமென வறிக.

## இரண்டு நேத்திரங்களிலும் ரோகம்

உதயத்திற்கு ஆறுமிடத்தில் சந்திரனிருக்க எட்டாம் இடத்தில் சூரியன் நிற்க பன்னிரண்டாமிடத்தில் சனி

நிற்க தானஸ்தானத்தில் செவ்வாய் நிற்க ஜாதகனுக்கு இரு கண்களிலும் ரோகமுண்டாமென வறிக.

எட்டாமிடத்தில் சனி நிற்க அவரை பாபர்கள் பார்க்க ஜாதகன் உபயநேத்திர யோகமுடையவனென வறிக.

மாலைக்கண்

இரண்டாமிடத்திறைவன் பாபருடன் கூடி உதயத்தில் இருக்க சுபர்கள் பார்க்க சிங்கம் உதயவிராசியாகி அதில் சூரியன் சந்திரன் கூடி யிருக்கினும் அல்லது தனது தோஷக் கூடினும் சிங்கமுதயமாக அந்தஇராசியை உச்ச மான கிரகங்கள் பார்க்கினும் ஜாதகனுக்கு மாலைக்கண் ணுகுமென வறிக.

கரும் படலைக்கண்

உதயவிராசியில் சூரியன் நிற்க ஜாதகனுக்கு கரும் படலைக்கண்ணுகுமென்று மேலோர் கூறுகின்றனர்.

உச்சிக்கண்

சாமியுடன் இரவிமதி கூடி நிற்க ஜாதகனுக்கு உச்சிக் கண்ணுகுமென வறிக.

பூனைக்கண்

உதயவிராசிக்கு முன் செவ்வாயும் சனியுங் கூடி நிற்க ஜாதகனுக்குப் பூனைக்கண்ணுகுமென வறிக.

நேத்திர சலரோகம்

2-6-8-9-மிடத்தில் சந்திரன் நிற்க அவரைத் தீக் கோள்கள் எதிராகப் பார்க்கினும் 2-6-மிடத்தில் சுக்கிரன் இருக்கினும் ஜாதகனுக்கு அழகிய நேத்திரமாயினும் சல ரோகமுண்டாமென வறிக.

## அண்ட ரோகம்

உதயத்தினும் ஏழாமிடத்தினும் பாபர்களிருக்க அந்த ஸ்தானாதிபதியும் சுக்கிரனும் நீச்சவர்க்கமுற மகரவிராசிக் கிறைவன் நீச்சமுற்று 6-9-12-மிடத்தில் நிற்க சுக்கிரன் நீச்சமாய் நான்காமிடத்திலிருக்க மிதுனத்தில் அங்காரக னிருக்க ஜாதகனுக்கு அண்ட ரோகமுண்டாமென வறிக.

## சுவாச காசம்

இலக்கினத்தில் சனி செவ்வாய் இராகு இவர்களிருக்க ஜாதகனுக்கு தேகமும் மார்புத் துடிக்கும் சுவாசகாசம் உண்டாமென வறிக,

## ஈளை ரோகம்

இலக்கினத்தையும் இலக்கினாதிபதியையும் செவ்வாய் இராகு இவர்கள் எதிர் நின்று பார்க்க அல்லது அவருடன் கூட ஜாதகனுக்கு ஈளை ரோகம் உண்டாமென வறிக.

## உதர ரோகம்

இலக்கினத்திற்கு 6-9-மிடம் மகரம் கும்பமாக அதில் சந்திரனிருக்க அவரைப் பாபர்கள் பார்க்க உதயத்தில் சூரியனுஞ் சனியுஞ் சுக்கிரனுங் கூடி நிற்க ஜாதகனுக்கு உதர வேதனை யுண்டாகுமென வறிக.

## நீராமை பெரும் வயறு ஆசனரோகம்

### விருத்தம்

கர்க்கடகந்தனிற்சனியுங் சாற்றதனிற்பிறையுங்
கருதுகலராசியு மாருகியதிற்கூடி
வர்க்கமுடனுறிலங்க மாறியேயிருக்கில்
வருந்துநீராமை பெருவயறு மெனவுரைப்பார்

சொர்க்கமுஞ்சுவாமியுடன் புதன் செவ்வாய்கூடி
துன்னியவாறினி லிருக்கிலாசனவியாதி
தர்க்கமுறுங்கடககும்ப விருச்சிகத்தின் மதியுந்
தானிருந்தங்கிதஞ்செய்யி லாசனவியாதி

மூத்திரக் கிரிச்சனம்

இலகியவெட்டில றினிற்பாவ ரிருந்திடவாரினிற்கிறைவ
துலங்குலக்கினத்திருத்திடுமேனுஞ் சொற்சலராசியின் மதித்தா
பலம்பெறவிருக்கப்பாபர்கள் பார்க்கப்பிரைநின்றராசி யோனுல்
கலந்துறநிற்கக்கர்மத்தோன்பார்க்கக் காணுமூத்திரக் கிரிசன

நீர்க்கடுப்பு

ஓதுமொன்ருறுமேகுந்தோனாகி யொளிமதிசேயுமிரு
கொதுறுமாறுக்கிறைசலக் கூடிபார்த்திடினு நீர்க்கடுப்ப
போதுறுமென்டின் மதிதனைபாவமொற்புறநோக்கிடுமெ
மேதுவாமேழிந் சனியிருந்தாலு மெய்திடும்நீக்கடுப்ப னென்

சலக்கழிச்சல்

ஏடவிழுமதிவெள்ளி யட்டமத்திலிருக்க
இவர்களங்கிசாதிபர்க்குஞ் சுவாமிக்குமெட்டே
நீடரியசலராசியாய் சலக்கிரமம்
நின்றிடினுமெட்டுறையுஞ் சனிபுகருங்கூடித்
தேடறுமாருமிடமே சலராசியாகிற்
சென்றிருக்கக்கரத்தோ னிருக்கினும்பார்த்தாலும்
நாடியகர்க்கடகத்திற் சனிமகரமதியும்
நயந்தேருலக்கமுறிற் சலக்கழிச்சலெய்தும்

பிரேக ரோகம்

மதிவெள்ளியாறினிற் சேய்ப்பனிபார்த்தாலும்
வருமாறேழினுக்கிறைவர் கூடமதிவெள்ளி
வெதிராகப்பார்த்தாலு மோரெட்டுக்கிறைவ
னியன்மதியுடன் கூமவாறிதை நோக்கிடினுஞ்

சதிராகவருமேழு மேழினிறைதனினுள்
சனிசெவ்வாய்ராகுமாக வந்தனையுமேனும்
புதியகாமத்தோலைச் சதுரேசன்பார்க்கப்
பொருந்தியேகூடினும் பிரமேகமென்பார்

குன்மரோகம்

சொல்லியவைந்தினுக்கிறைவர் துர்பலமேயாகிநிற்க
செல்லுமதிபாவருதயஞ் சென்றிருக்கவாருடையோன்
மல்லுறவேசரம்பார்க்க வன்சனரேழினிற்கிற்
கொல்லுநமனைப்போலக் குன்மரோகந்தோன்றுமே

வைசூரி கண்டம்

தக்கலக்கினமுமி லக்கினுதிபதிபனுஞ் சனிராகு சேய்வற்க மூறினு
மந்தமாமெட்டினுக்கிறைவ நவாங்கிசாதிபன் தன்னுடன் செவ்வாய்
மந்தனேடுராகு வற்கம் முற்றிடினு யுவருஞ்சாமி யிருந்த ராசியினும்
முந்தவங்கிசா திசேய்சனிராகு முன்ரவிபார்க்கில்வை சூரியே

இதுவுமது

சத்துருதானத்திரையுள்ள செவ்வாய்சாற்றிராகுகூடிடினு
மற்றவரெட்டிற்செயிராகுருறினு மன்னுமொன்றேலெட்டி விரலின்
எத்துளச்சனிதானிருந்திடச் செவ்வாயிராகும் பார்த்திடா னாகிக்
குத்துளவுடம்பில்வைசூரியேயுண்டாத் தேனினுமினி சொல்வனமே

தலைவலி உட்காய்ச்சல்

வளறுமொன்றெட்டுக் குடையவர்
கதிரோன் வர்க்கமே யடைந்திடுமேனும்
மளவியவெட்டி லிராகுவுற்றிடினு
மாகியவொன் றிரண்டைந்திற்
றழ்லுறுகதிரோ னிருந்திடிற்சுரமாந்
தலையினில்வே தனையுண்டா
மொழியுமெட்டி லொன்றிலிரவிசே
யிருக்கிலுட்காய்ச்சலுடன்தனில் வருமே

### மூலரோகம்

வாசமாமேழுக்கிறைவியத் திருக்கவக்கிரன்பார்க்கவெட்டு டையோர்
நீசமாமிரவிதன்னைகூடினு நிலைபெறுசாமிக்காறெட்டிற்
பூசலாய்ப்பாபருக்கினு மெட்டைப் பொருந்திரை நீசமூடத்தைப்
பாசமாமிவர்க்குறவாகியவெட்டிற் பாவிகளிருக்கினுமூலம்

### பவுத்திர ரோகம்

வெண்பிறையெட்டிற்குசனுறச்சுபமே விரைந்துபாரா திருந்தாலும்
பண்புறுவெட்டிற்சனிதனைச் செவ்வாய் பார்க்கினுமெட்டு டையோன்
எண்பெறுசெவ்வாய் சனியுமே பார்க்கவேழினுக்கிறைவர் நீசவெர்
வண்பெறுமூதயமெட்டினுக்கிறைவர்தனைப் பார்க்கிற் பவுத்திரமென்பர்

### நாபி நோய் சயரோகம்

ஆறினிற்புதனைப்பாபரேபார்க்கி லானதோர்நாபிக்கீழ் வியாதி
மாறியவாறிற்புதன் செவ்வாயிருக்க மதிபார்கில்வருஞ்சய ரோகம்
வீறுமோராறுகிறைதரும்புதனும் மிக்கராகுவுமுடனிருக்கச்
கூறியசுபரே நோக்கிலாராறிற் குறுகிடுமேசயரோகம்

### சுவாசகாசம் வெகு மூத்திரம்

கூர்க்குமாறிற்சனிகுளிகன் கூடராகுகதிற்செவ்வாய்
பார்க்கிற்சுவாசகாசமெனப் பகர்வர்மதிதான் சலராசி
யேர்க்கவிருக்கவினவச் சத்திரைதாரரூலுநவாய்
போர்க்குஞ் சலராசியிலிந்த புதனும்பார்க்கவெகுமூத்திரம்

### குன்மம் விப்புருதி முகவிரணம்

ஈட்டுமாறிலேழினிற்செவ்வாயிருக்க பாபர்தான்பார்க்கின்
மூட்டுங்குன்மம்விப்புருதிமுகத்தில் வியாதிவிரணமதாம்
நாட்டுமாறுக்கிறைவனஞ்சந் தானேவந்தவங்கிசத்திற்
கூட்டுவானேலவர்க்குள்ள குணமுமிகரோகஞ்சொல்வார்

### அன்னத்வேஷம், வாந்திபேதி, அபானரோகம் லிங்கரோகம்

எண்ணமிரண்டொன்று மூன்றைந்துடனேழெட்டுக்
கிறைவர்சனியோடுராகு குளிகனுடன்கூட

விண்ணமதிதூர்த்தானத் துறிலன்னத்துவேஷம்
வாந்திபிராந்தியுண்டாம் வாகனமாவுதயங்
கண்ணணையசாமியுடன் புதன்செவ்வாய்கூடக்
கடும்பாபர்பார்த்திடினும் புதன்செவ்வாய்கூடி
பண்ணறியசரமாறி நிற்கில்பானத்திற்
பாகைவிட்டோனும் புதனுங்கூடிலிங்கரோகம்

பிரமை பயித்தியம்

இருமையாமைந்திலேழி லிரவிசேயிராகுகூடில்
வருஞ்சித்தப்பிரமையற்றி வன்பயித்தியமுமெய்தும்
பொருத்துஞ்செவ்வாய்த்திசையிலன்றேன் பொசிப்பினி
லதனைக்கூடி
ஒருமையாயுடலிருந்தோனுட் பொசிப்பதனினுண்டாம்

அன்னரோகம்

ஆறினுக்குடையோனேடே யரிஞ்சகனுமிராகுங்கூடிப்
பேறதாவிலக்கினத்திற் பெட்புறவிருக்கவல்லான்
மோறதாமொருராசிக்குண்மே விடிலன்னரேகங்
கூடியபுதன் திசைக்குள் கூர்புந்திப்பொசிப்புற்றுனே

துர்க்கந்த ரோகம்

பத்தினிலேபுதன் செவ்வாயுடன்
கூடச்சாமிதனைப் பாபர்பார்க்கி
லெத்தசரீரந்தனிலே துர்க்கந்தங்
காணலிரு முதயந்தன்னில்
வைத்தசனியுற நீசன்பார்க்கச்
சாமியும்பாம்பும் வந்துகூடிற்
சுத்தநீசாங் கிசத்தைபெறினும்
பெருகுந் துர்க்கந்தமாமே

6-மிடத்தில் சூரியன் நின்ற பலன்

ஆறுமிடத்தில் சூரியன் நிற்க ஜாதகமானவனுக்கு அனேக மைந்தர்களுண்டாம் காமியாகவிருப்பன் சூரன் அபிமானி அரசர்க்குப் பிரியமுடையவன் கீர்த்திமான் பசிதாபமுடையவன் வலியபகை செய்வன் விரோத குண முடையவன் கடன் வாங்கி பரபத்திரஞ் செய்வன்.

### 6-மிடத்தில் சந்திரன் நின்ற பலன்

ஆருமிடத்தில் சந்திரன் நிற்க ஜாதகமானவனுக்கு சலைமயமுண்டு செய்யுங் காரியந் தாட்சியாகும், சயரோக முடையவன். புத்திரயோகன் கடன் கொடுக்கில் மீளாது வெளிதேசம் போக்குவரத்து சஞ்சாரமுண்டு அற்பாயுள் உள்ளவன் உதிர ரோயுண்டாமென வறிக.

### 6-மிடத்தில் அங்காரகன் நின்ற பலன்

ஆருமிடத்தில் அங்காரகன் நிற்க ஜாதகமானவன் காமி பிரசித்தன் அழகிய தேகன் சோகிராகினும் விரோதி வீரன் சேனாதிபதியான பூபாலங் கிடைக்கும் வெற்றி யடைவன்.

### 6-மிடத்தில் புதன் நின்ற பலன்

ஆருமிடத்தில் புதன் நிற்க ஜாதகமானவன் சத்துரு விரோதி துர்க்காமி கலகப்பிரியன் அற்பாயுளுடையவன் தூரதேசத்தார்க்கு அப்பன் பந்து ஜனவிரோதன் விந்தை யுடையவன் வாய்வுப்பீடையுடையவனென வறிக.

### 6-மிடத்தில் வியாழன் நின்ற பலன்

ஆருமிடத்தில் வியாழன் நிற்க ஜாதகமானவன் ஞானமுடையவன் பொருள் ஈனன் அரசர் பிராமணுள் கலகம் நேரும் புத்திரர் கலகம் சம்பவிக்கும் சத்துரு வுண்டாம் காமி அற்பாயுளன் ரோகமுடையவனென வறிக.

### 6-மிடத்தில் சுக்கிரன் நின்ற பலன்

ஆருமிடத்தில் சுக்கிரன் நிற்க ஜாதகமானவன் வெகு மனோதுக்கன் தரித்திரன் சத்துருக்களை நாசமடையச் செய்வன் மிகுபொசிப்பன் பந்து ஜனவிரோமுடையவன் பயமுடையவன் விஷரோகன் கல்விமான் மனைவியினுல் ரோகமுண்டாமென வறிக.

### 6-மிடத்தில் சனி நின்ற பலன்

ஆருமிடத்தில் சனி நிற்க ஜாதகமானவன் துற்காமி நீசராற் பயமுடையவன் குஷ்ட நோயுடையவன் விகார மான ரூபத்தை யுடையவனென வறிக.

### 6-மிடத்தில் இராகு நின்ற பலன்

ஆருமிடத்திற் சனி நிற்க ஜாதகமானவன் பலன் உடையவன் கீர்த்திமான் வாக்கு சுத்தன் பகைவர்களை வெல்லுவான் துரைத்தன பிராப்தியுள்ளவன் வீரன் என வறிக.

### 6-மிடத்தில் கேது நின்ற பலன்

ஆருமிடத்தில் கேது நிற்க, ஜாதகமானவன் கீர்த்தி மான் சத்துருக்களை ஜயம் பண்ணுவான். ஞானி ரோக வான் உதிர வேதனையுடையவன் வித்துவான் கதை பிரிய முடையவன் தனவானென வறிக.

### 6-மிடத்தில் குளிகன் நின்ற பலன்

ஆருமிடத்தில் குளிகன் நிற்க ஜாதகமானவன் பகை விரோதமுடையவன் சத்துருக்களை ஜயஞ்செய்வான் குளிகன் இவரோடு நிற்க சேய் ஐந்தாமென வறிக.

ஆறாம் பாவம் முற்றிற்று

ஃஃஃ

## ஏழாம் பாவம்

### விவாகபலன்

இலக்கினத்தில் தீக்கோள்கள் நிற்க ஐந்தாமிடம் சுத்தமாக வியாழன் கேந்திராதிபதியுடன் கூடி கேந்திரத் திலிருக்க ஜாதகனுக்கு வாலிபத்திற்றானே விவாகமாகும் என வறிக.

சாமிக்கேழாமிடத்தில் தனாதிபதியும் அஸ்தமனமா நிற்க ஜாதகனுக்கு வாலிபத்தில் தானே விவாகமாகு என வறிக.

7-10-2-4-மிடத்திறைவர்கள் சாமியுடன் கூடி நிற் ஜாதகமானவனுக்கு வாலிபத்தில் தானே நல்ல மடந்தை யை மணம் புரிவானென வறிக.

சுக்கிரனுஞ் சனியும் இவர்கள் உதயகேந்திர தி கோணங்களிலிருக்க ஜாதகமானவனுக்கு வாலிபத்தி றானே விவாகமுண்டாமென வறிக.

களத்திர சங்கை

ஏழாமிடத்தோன் சுபனாகி அத்தானத்தி லிருந்தே நற்கோள்களாக விருக்க சுபர்கள் நோக்க எட்டாமிட சுத்தமாகப் பொருத்தியிருக்க ஜாதகனுக்கு களத்திரயோ மும் ஆபரணாதிகளுமுண்டாம்பிரபலமான கீர்த்தி கிடை குமென வறிக.

ஏழாமிடத்துக்குடையோன் சுபக்கோளாதி சுபருடனே கூடி கேந்திர திரிகோணமேற அவரைத் தீக்கோள்க பார்க்க. ஜாதகனுக்கு நல்ல களத்திரங் கிடைக்கும் வா வுண்டாம் மனைவியால் தனஞ்சேரும் மனைவியின் கரு முடிப்பான் என வறிக,

வியாழன் கேந்திரமான சந்திரனுடன் கூடின சுக்கிர இவர்கள் மறைவாக நிற்க 7-8-மிடத்தில் சில கிரகங்க இருக்க சுத்தமாக ஜாதகனுக்கு அதியோகமுண்டா பெரியோர்கள் நேயன் குருபக்தியுடையவன் குறையா வாழ்வையுடையவன் சுதனைப் பெறுவனென வறிக.

சுக்கிரனும் ஏழாமிடத்தோனும் 8-12 மிடங்களிருக் அவரைப் பாவக்கோள்கள் நோக்கினும் அல்லது மறை கோள்கள் திருஷ்டி யுண்டாயினும் ஜாதகமானவனுக் வாய்க்கும் மிடியுமுள்ளதும் மிர்தான குணமுடையதுமா களத்திர நாசமாகும் என வறிக.

7-மிடத்தில் சூரியன் நின்ற பலன்

ஏழாமிடத்தில் சூரியன் நிற்க ஜாதகமானவன் வஞ்சகன் கோபி விரோதமுடையவன் அரசர்களின் கோபத்தால் துயரமுடையவனென வறிக.

7-மிடத்தில் சந்திரன் நின்ற பலன்

ஏழாமிடத்தில் அங்காரகன் நிற்க ஜாதகமானவன் தாட்சணியன் கனவான் நல்ல களத்திரமுடையவன் ஸ்திரீ வசியன் களத்திரத்தினுல் லாபம் பெருவன் யோக வான் சர்வ ஜெனமித்திரனைவன் அலங்காரமுடைவன் என வறிக.

7-மிடத்தில் அங்காரகன் நின்ற பலன்

ஏழாமிடத்தில் அங்காரகன் நிற்க ஜாதகமானவன் பாவ களத்திரத்திரமுடையவன் கலகன் ரோகமுடைவன் களத்திரத்தினுல் சேதம் நேரும் பயமுள்ள களத்திரங் கிடைக்கும் களத்திரத்தினுல் துக்கமுண்டாமென வறிக.

7-மிடத்தில் புதன் நின்ற பலன்

ஏழாமிடத்தில் புதன் நிற்க ஜாதகமானவன் தன ராஜயோகமுடையவன் சஞ்சாரன் கீர்த்திப் பிரதாபன் பெருமை யுள்ளவன் பரியாச வார்த்தை யுடையவன் சமர்த்தன் அற்ப போகி கல்வியிற் பிரசங்கன் அழகிய வார்த்தைகளை யுடையவன் கரலத்திற் புத்திரருண்டாம் கன்னியர் மோகன் வார்த்தையில் வல்லவன் என வறிக.

7-மிடத்தில் வியாழன் நின்ற பலன்

ஏழாமிடத்தில் வியாழன் நிற்க ஜாதகமானவன் யோக களத்திரமுடையவன், ஆடையாபரண அலங்கார சுத்தன் தைரியவான். காமி, பிதுர், குரு இவர்கள் மீது துவேஷமுடையவன், பாக்கியமுடையவன் பிரசித்தன் என வறிக.

### 7-மிடத்தில் சுக்கிரன் நின்ற பலன்

ஏழாமிடத்தில் சுக்கிரன் நிற்க ஜாதகமானவ அழகுடையவன் காமி மித்திரன் கல்விப் பலனில்லாதவ ஸ்திரீ சுகமுடையவன் தரும சிந்தையுள்ள ரூபகளத் உடையவன் என வறிக.

### 7-மிடத்தில் சனி நின்ற பலன்

ஏழாமிடந்தில் சனி நிற்க ஜாதகமானவன் தரித்திர தேசசஞ்சாரன் யோகமுடையவன் சொற்புத்தியுடையவ செல்வமுடையவன் ஆகமங்களை வாசிப்பவன் வயித்தி செய்பவன் வேசையர்க் கொப்பான களத்திரத்தை மண புரிவன் களத்திர சுகமில்லாதவன் துற்புத்தியுள்ள புத் களைப் பெறுவன் என வறிக.

### 7-மிடத்தில் இராகு நின்ற பலன்

ஏழாமிடத்தில் இராகு நிற்க ஜாதகமானவன் பரத தின் மேல் மனமுடையவன் வேசையர்களையும் விருத் களையும் புணர்வன் மேகமுடையவன் போக பாக்கி உடையவன் சீலவான ஜனவசியமுடைவன் விப துஷ்ட களத்திரமுடையவன் என வறிக.

### 7-மிடத்தில் கேது நின்ற பலன்

ஏழாமிடத்தில் கேது நிற்க ஜாதகமானவன் தூரஸ் யின் மேல் மனமுடையவன் சோம்பன் வஞ்சகன் சனன் தேசசஞ்சாரன் மூர்க்கன் பயமுள்ள களத் முடையவன் சிலுகு சொல்வன் களத்திர வழியில் துக் உள்ளவனென வறிக.

### 7-மிடத்தில் குளிகன் நின்ற பலன்

ஏழாமிடத்தில் குளிகன் நிற்க ஜாதகமானவன் களத் வீனன் அழகில்லாத தாரத்தை மணம் புரிவன் மந்தபு யுள்ளவன் கர்வி களத்திர துக்கன் என வறிக.

ஏழாம் பாவம் முற்றிற்று



# எட்டாம் பாவம்

## ஆயுள் பலன்

### 1-வது ஆண்டில் அரிட்டம்

விருத்தம்

ஏறுகோலெட்டாய்ப்பாவ ரிருக்கவேயிரவிபார்க்கில்
கூறுமோரண்டிற்சாவங்கொழுங்கன்னி பாகைவொன்றில்
ஆறுமெண்மதியுனிற்கில் வெய்யவன் பார்க்கிலாண்டிற்
பேறுளமலைச்சாவாம் பின்றநுதலங்கண்மாதே

### 2-வது ஆண்டில் அரிட்டம்

வக்கிரமாகக்காரி மறிதேளெட்டாகநிற்க
உக்கிரச்செவ்வாய்பார்க்க வுடன்கூடவிரண்டாமாண்டில்
புக்கிடும்தலைச்சாவாம் புகலுந்தேய்மதிகேந்தரிக்க
வக்கிரச்சனிசேய்பார்க்கி லரிட்டமிரண்டிலென்பர்

### 3-வது ஆண்டில் அரிட்டம்

எள்ளியசெவ்வாய்க்கெட்டா மிராசியில்வியாழனிற்க
வெள்ளிபாராதிருக்க மிகுபாவர்மதியைப்பார்க்கில்
உள்ளியமதலைநோயாள் மாண்டிடுமூன்றுமாண்டிற்
றெள்ளியகணிதநூலோர் தெரிந்துரைசெய்தவாரே

### 3-4-வது ஆண்டில் அரிட்டம்

பற்றிடுமிலக்கினத்தான் பலயீனகாகப்பால
ருற்றிடமாத்திகேந்திர முறிலாண்டுமூன்றிற்சாவாம்
கற்றபன்னிரண்டெட்டாருங் கடகமாய்புதனேநிற்க
நற்றயமதியும்பார்க்கில் நாலாண்டிலரிட்டந்தானே

### 4-5-வது ஆண்டில் அரிட்டம்

படிதுலாந்தன்னிறுலாம் பாகையின்மதிதானிற்க
கொடியபாவக்கோள்பார்க்கக் கூடிநாலாண்டிற்சாவாம்
துடியைந்திற்பாவர்நிற்கச் சுகர்முடமாகப்பாவ
ரடியுறபலக்கிலைந்தா மாண்டினிலரிட்டமாமோ

## 5-வது ஆண்டில் அரிட்டம்

குருசனமதிசேய்கூடிற் குலவைந்தாமாடிற்கிண்ட
முருகுசேய்கேந்திரமேற மூர்த்தியோன் பலங்கேடாக
வருகுமோரைத்திலெட்டில் மதிநிற்கவருடமைந்திற்
பெருகுமோர் குழவிக்கீனம் பேசுவர் கோதைமாரே

## 5-6-வது ஆண்டில் அரிட்டம்

சிங்கத்திற்பாகையைந்திற் றேய்மதிநிற்கப்பாவப்
பங்கயத்திற்கூறப்பாற்கிற் பகரைந்தாமாண்டிற்சாவாம்
மங்கத்துங் கடகஞ்சிங்கமாறு பன்னிரண்டாம்வெள்ளி
இங்குற்றுநிற்கப்பரவ ரிருக்கிலாராண்டிற் சாவாம்

## 7-வது ஆண்டில் அரிட்டம்

தாங்கியசனிகளம்பட்சி சர்ப்பத்ரேகாணந்தோன்ற
வீங்கியைருடனேப வரிருந்திடச்சாமிதானே
ஓங்கியேபாரார கி லோரேழாமாண்டிற் சாவாக்
பூங்கிணையணைத்தீஞ்சொற் புகலுவாம்பூவையன்னாய்

## இதுவுமது

பார்க்கிலக்கினத்தினாறில் பாவர்கணிற்கவேணிற்
கூர்ச்குஞ்சத்துரு வீடாக்க குளிர்கதிநிற்கப் பொன்னோன்
ஏர்க்குநற்பாவையுற்ரு னேழாண்டிற்மரணமென்பார்
சேர்க்குநூற்புலமையோர்க டெரிந்துரைத்தனரிவ்வாறே

## 8-வது ஆண்டில் அரிட்டம்

தேய்மதியுதையநிற்கச்சி றந்தனலெட்டில்வெய்யோன்
வாய்மலர்ந்திருக்கி லெட்டாம் வருடத்திலரிட்டம் காட்டும்
மாய்மதியிரவியேழி லாகத்தீசோள்கண்ணோக்க
வேய்மகிழ்மூர்த்திப்பாம்போ டிருக்கிலொட்டாண்டிற்
சாவாம்

## இதுவுமது

மரிதினிலெட்டாம்பாகை மதிநிற்கப்பாவர்கூட
பிரியமாய்ப்பார்க்குமேனும் பெலமாந்திபவனாக்கேது
சிரியராகுவுமேகேந்திரஞ் சேரிலெட்டாண்டிற்சாவாம்
மதியுற்றகோனேகூடி லரிட்டங்கள்வந்துதீரும்

## 7-8-9 வது ஆண்டில் அரிட்டம்

துய்யலக்கினத்திற்செவ்வாய் சூரியன்மதியுங்கூடிச்
செய்யநற்கோளே பாரா விடிலெட்டாமாண்டிற்சாவா
மெய்யுங்கோலிடபமேழா மிடமாய்த்தேய்மதியுநிற்க
ஓய்யும்பொன்பார்க்கிலே ழெட்டொன்பதாமாண்டிற்
சாவாம்

## 9-வது ஆண்டில் அரிட்டம்

சந்திரன்மிதுனங்கன்னி தனிநிற்கிற்செவ்வாய்பார்க்க
வெந்திரள்நற்கோள் பாராவிடிலொன்பதாண்டிற்கண்டம்
முந்திடின்மதிக்கீராறின் மூர்த்தியோர்பாவிவாகின்
வந்தவம்புலியங்கிசத்தின் வரிஞென்பதாண்டிற்சாவாம்

## இதுவுமது

இடதுபத்திற் பாவையொன்பா னெழின்மதி நிற்கப்பாவர்
திடமூற்றுப்பார்க்கக்கூடிற் றெரிந்தொன்பதாண்டிற்
சாவாம்

தடமுற்றவைந்தில்செவ்வாய்.சந்திரனிரவிநிற்க
வுடனற்கோள்பாராராகி லொன்பதாமாண்டிற்சாவாம்

## 10-11-வது ஆண்டில் அரிட்டம்

மீனத்தில்பாகைபத்தில் மெண்மதிநிற்கப்பாவர்
தானுற்றுக்கூடப்பார்க்கிற் றட்பத்தாம்வருடங்கண்டம்
வானுற்ற கதிரோன்றிங்கள் பாலவனுதயம்கூடிப்
பானுற்றபாகாபார்க்கிற் பதினென்ருமாண்டிற்சாவாம்

## 12-வது ஆண்டில் அரிட்டம்

அருண்மதிசிங்கமேவ வாதித்தசனியுமீன
மருவகன் பாராராகில் வருடம்பன்னிரண்டிற் சாவாம்
கருவதேளங்கிசத்திற் சனிதுவாங்கிசமாய்நிற்க
மருகுருத்தானும் பார்க்கில் வருடத்திலரிட்டமாமே

## 13-14-வது ஆண்டில் அரிட்டம்

சனிதுலாங்கிசமாய்நிற்கச் சற்குருபார்க்கப் பன்மூன்
றினிற்பிதுர்துவேஷமாகியிறந்திடு மதலையென்பார்

சனியும்பெண்ணங்கிசத்துற் காரிதானிற்கமாலோன்
வனியுறப்பார்க்கப்பன்ரு லாமாண்டிலரிட்டமாமே

## 15-16-வது ஆண்டில் அரிட்டம்

முடவன்சிங்காசனத்தின் முட்டிடவிராகுபாக்கி
லிடர்பதினைந்தாமாண்டிலெதிர்க்குஞ்சத்துருவாற்கண்ட
படர்சனிகன்னுபங்கம் பதறிடக்கேதுநோக்கில்
விடமதாய்ப்பதினருண்டில்மே மன்மகவரிட்டமாமே

## 17-18-வது ஆண்டில் அரிட்டம்

மிதுனவங்கிசத்திற்காரி மேவிடச்சாமிபார்க்கில்
சதுரசூரனுமாய்ப்போகி தானுய்ப்பன்னேழிற்சாவா
மதுதுலாலக்கினத்தோ னட்டமக்கிரமாறப்
பதுமைப்பொன்பாரானுறுற்பதினெட்டா மாண்டிற்சாவே

## 19-வது ஆண்டில் அரிட்டம்

மந்திரியங்கிசத்தின் மந்தனுமிராகுங்கூடிச்
சொந்தமூர்த்தியனைபார்க்கிற் ளுண்டுசேயுடனேகண்ட
தந்தனக்கித்தோனுச்சந் தானேறிப்பலவானுகிற்
பந்தெனுமூலையினனே பன்ேனன்மாண்டிற்சாவே

## 20-வது ஆண்டில் அரிட்டம்

கேந்திரம்பாவர்நிற்கக் கிளர்சுபர்பாராராகிற்
சாய்ந்தசந்திரனுலெட்டிற் சாரிலாண்டிருபதிற்சா
மேய்ந்தபோன்னிரவிகூடி யிலக்கினந்திரும்பவேதா
னுய்ந்தகேந்திரத்திருக்கி லாண்டிருபதினிற்சாவாம்

## 12-17-22-25-32-வது ஆண்டில் அரிட்டம்

பேருதுநட்டத்தோன் கேந்திரம்பெலக்கவேலக்கினத்
தோன்

வரும்பெலயீனமாக வந்திடின்வடிவேற்கண்ணுள்
பொரும்பன்னிரண்டுபன்னே ழாரிருபத்திரண்டா
மிருபத்தைந்தல்லான்முப்பத் திரண்டினில்மரணமாமே

## 27-19-10-வது ஆண்டில் அரிட்டம்

கெதியில்சத்துருக்கோட்கோண கேந்திரஞ்சனியேநிற்க
எதிரவிநற்கோணிற்கி னிருபத்தேழாண்டிற்சாவாம்
மதியஞ்சேயருக்கன்கேந்திர மாகிற்பத்தாண்டிற்கண்ட
மதியங்கேந்திரிக்கிற் கண்டம்வரும்பத்தொன்பதனிலம்மா

## 28-9-வது ஆண்டில் அரிட்டம்

அட்டமத்தோனேவேந்த னன்புடன்பார்க்கச்சாது
எட்டினிலிருப்பனுகி லிருபத்தெட்டாண்டிற்கண்டஞ்
சாட்டவெண்மதியருக்கன் சனியெட்டிலிருக்கெல்லோ
ரிட்டமாய்ப்பார்ப்பராகி லிருபத்தொன் பானுண்டென்னே

## 27-30-வது ஆண்டில் அரிட்டம்

தலமிகுமட்டமத்தோன் சாமிக்குநடுவே திங்கள்
பெலம் மிருந்துற்றுநிற்கப் பொன்னும்பாத்கியத்தினிற்கில்
விலகியவிருபத்தேழின் மேன்முப்பதாண்டிற்சாவாங்
கனகவேல்விழியினுளே கணிதநூலுறைத்தவாறே

## மாதுர் பிதுர்களுடன் மரணம்

நாட்டுங்கீர்த்தியன் பலக்கநாலொன்பதுடையோன்மாந்தி
யீட்டருய்சனிசேய்கூடி யெட்டிற்பன்னிரண்டிலாறின்
கூட்டுறநிற்பாராகிற் குலமகன்றேன்றப்பின்னுள்
ஊட்டுமாதாபிதாவுடன் மரணத்தானென்பார்

## பிதுர் தீர்க்காயுள் இராசயோகம்

சூரியற்கைந்தெட்டோன் பான்சுபர்நிற்கவதனுக்குள்ளோர்
சீரியகேந்திரகோணஞ் சென்றுநீர்பிதாவுக்கேதான்
பாரினிற்றனமும் செல்வம்பண்புந்தீர்க்காயுளுண்டாம்
மேரிசைபொன்மால்வெள்ளி தனம்பெறவிராசயோகம்

## பாட்டனாரிட்டம்

கனிவிமைசனிசேய்பார்க்க கலந்திடச் சுபர் நோக்காறேல்
வனச்சிசுபிறக்குமூன்னே தந்தையர்க்கரிட்டமாகும்

வினவியபிதாவைப்பெற்ற வீருளாபாட்டான்சாவான்
பனகபூடனின்கைம்மான் பார்வையான்மயக்குமாதே

## பிதிராதிய அரிட்டம்

கடுத்திடுமைந்துக்குள்ளோன் காரகன்சத்துருநீசம்
பதித்தவங்கிசத்திலேறப் பகையினிற்சனியிராகு
கொதித்தெழுங் குளிசன்பார்க்க கூடவேயிருக்குமேலுந்
துதித்திடுந்தந்தையானோன் துக்கத்தை யடைவன்றே

## சகோதரர் அரிட்டம்

பர்தமாஞ்சரகேரித்ரத்திற்பானு வேயிருக்கத்தோன்றுஞ்
சந்ததிப்பிதாவுக்கேதான் றுனுதவாமற்போவ
னுந்தியமூன்றிற்காரி யுறச்சகோதரர்க்குப்பீடை
பிந்தியபானுதிக்கிற் பிதுர்ச்சகோதரர்வரிட்டம்

## களத்திர அரிட்டம்

துள்ளியவிரண்டிலேதான் சுக்கிரனிவர்கள்மூவர்
தள்ளியபாவர்க்கந் தானுயத்தீயோர்சேர்ந்தாலும்
விள்ளரும்பெண்ணிற்பானு மீனத்திற்சனிநின்றுலும்
கள்ளவிழ்கோதைமாதே களத்திரநாசமாமே

## 8-மிடத்தில் குளிகன் நின்ற பலன்

எட்டாமிட்டத்தில் சூரியன் நிற்க ஜாதகமானவன் அற்பாயுளுடையவன் கேந்திரரோகன் கல்விக்காக யிவன் அடுத்தவாசான் வியாதிப்படுவான். துராசையுடையவன் அக்கினி கண்டமுண்டுமித்துரு விரோதம் நேரும் சுகதன முடையவன் கொர்வியாவனென வறிக.

## 8-மிடத்தில் சந்திரன் நின்ற பலன்

எட்டாமிடத்தில் சந்திரன் நிற்க ஜாதகமானவன் அற்பாயுளுடையவன், ரூபன் ஞானமுடையவன் வித்தை விரோதன் அற்பாயுளன் நீரினுல் பயம் நீரினுல் கண்டம் சலக்கழிச்சல் க்ஷயரோகம் நீர்க்கடுப்பு இவைகள் சம்பவிக்குமென வறிக.

8-மிடத்தில் அங்காரகன் நின்ற பலன்

எட்டாமிடத்தில் அங்காரகன் நிற்க ஜாதகமானவனுக்கு களத்திர லீனன் களத்திரத்திஞல் வெகு சேதம் உண்டாமென வறிக.

8-மிடத்தில் புதன் நின்ற பலன்

எட்டாமிடத்தில் புதன் நிற்க ஜாதகமானவன் சதாசாலமும் ரோகியாவான். வாதபீடையுடையவன் பலமுடையவன் தீர்க்காயுளுடையவன் தனமுடையவன் கீர்த்திமான் அரசர்க்கு சமானன் பிறபாஷையில் வல்லவனென வறிக.

8-மிடத்தில் வியாழன் நின்ற பலன்

எட்டாமிடத்தில் வியாழன் நிற்க ஜாதகமானவன் புத்திமான் தீர்க்காயுளுடையவன், கீர்த்திமான். ஆகாரயீனன், பந்துக்களுக்கு தாட்சண்யவான் மித்திரன் என வறிக.

8-மிடத்தில் சுக்கிரன் நின்ற பலன்

எட்டாமிடத்தில் சுக்கிரன் நிற்க ஜாதகமானவன் நற்குணமுடையவன், தீர்க்காயுளுடையவன், ராஜயோகமுடையவன், பலமுடையவன். தாசிதாசாள் கன்று காலி இவைகள் கிரகத்திஞலும் களத்திரத்திஞலும் கெடுதி நேரும் புருடாங்கிசலட்சணத்தில் ஒழியா ரோகமுண்டாமென வறிக.

8-மிடத்தில் சனி நின்ற பலன்

எட்டாமிடத்தில் சனி நிற்க ஜாதகமானவன் பயமுடையவன் மரணகண்டம் தந்தைக்கு தோஷமுண்டாம் பசியாளன் துக்கன், பொய்யன், ஆசாரன் கன்மி, நேத்திரயாகி, ஆசனரோகி, அவமிருத்தான தோஷங் காணும் காரிய விக்கினன் என வறிக.

### 8-மிடத்தில் இராகு நின்ற பலன்

எட்டாமிடத்தில் இராகுநிற்கஜாதகமானவன்வைகு பிணியுண்டாம், வித்தையுள்ளவன் கள்ளர் முதலியவை களிற் பயமுடையவன் பிளவை காசரோகம் காணு மந்திரவாதிகளால் பயம் நேருமென வறிக.

### 8-மிடத்தில் கேது நின்ற பலன்

எட்டாமிடத்தில் கேது நிற்கஜாதகமானவன் வித்தை யுடையவன், பாவ சிந்தையுடையவன், புத்திர வீனன் பேய் பிடித்தாடுவன். குஷ்டரோகமுண்டாம் மாதர் மே ஆசையுடையவன், பிறர் திரவியத்தின்மேல் இஷ்டமுடை யவன் துன்மரணனென வறிக.

### 8-மிடத்தில் குளிகன் நின்ற பலன்

எட்டாமிடத்தில் குளிகன் நிற்க ஜாதகமானவனுக் வழிப்போக்கான ஊறுகளில் மரணம் நேரும் முகரோக உண்டாம் கோபுரங்களில் ஏறி விழுந்து சாவானென வறிக.

எட்டாம் பாவம் முற்றிற்று

ஃஃஃஃ

## ஒன்பதாம்பாவம்

### பாக்கியபலன்

சந்திரன் கேந்திர கோணத்தில் நிற்க சுபக்கிரகங்க நோக்கினும் அல்லது சேரினும் ஜாதகனுக்கு தனலாப உண்டு, புத்திரர்கள் உண்டாம் அல்லது தீர்ந்து வாழ் னென வறிக.

வாகனாதிபனும் லாபாதிபதியும் 9-மிடத்ததிபனு நட்பாட்சியானஸ்தானங்களில்சேர்ந்திருக்க ஜாதகனுக் வாகனம் பூமியோகமுண்டாமென வறிக.

வாக்குஸ்ள்ளோன் ஜென்மத்தான் 3-12-மிடையோன் இவர்கள் குற்றமில்லாமல் நட்பாட்சியில் கூடி நிற்க ஜாதகமானவன் அரசர்கள் அமைச்சர்கள் பெரியோர்கள் புகழும்படியாக வாழ்வானென வறிக.

## பிதுர்களின் பலன்

ஒன்பதாமிடத்தில் பாம்பு நிற்க ஒன்பதாமிடத்ததிபன் சூரியனுடன் பிதுர் ஸ்தானத்தில் பாவருடன் மருவி நிற்க 6-9-12-மிடத்தில் பிதுர்காரகளிருக்க ஜாதகனுடைய தந்தைக்கு ஆயுசு நசியுமென வறிக.

கன்னி, மீனம், மிதுனம். சிங்கம், தனுசு, கும்பம் இந்த ஆறு இராசிகளிலும் ஏழு கோள்களும் பதிந்திருக்க இராஜயோகம் உண்டாமென வறிக.

## 9-மிடத்தில் சூரியன் நின்ற பலன்

ஒன்பதாமிடத்தில் சூரியன் நிற்க ஜாதகமானவன் துராசையுடையவன், பாவ சிந்தையன் மித்திரர்களுக்கு இனியன் அந்தணர் தேவதா பக்தியுடையவன் நல்ல மனமுடையவன், செல்வம், பிதா குரு இவர்களுக்கு தோஷமுண்டாம் குருவை பகை செய்வானென வறிக.

## 9-மிடத்தில் சந்திரன் நின்ற பலன்

ஒன்பதாமிடத்தில் சந்திரன் நிற்க ஜாதகமானவன் தெய்வபக்தியுடையவன், வாக்கு சுகமுடையவன் புத்திர மித்திரருடையவன் தன்னையீன்ற பிதாவிற்குதீர்க்கமுள்ள வன் பலஸ்திரீவாசன் சீதளதேகமுடையனென வறிக.

## 9-மிடத்தில் அங்காரகன் நின்ற பலன்

ஒன்பதாமிடத்தில் அங்காரகன் நிற்க ஜாதகமானவன் செல்வநாசமுடையவன் பிதுர்க்கு தோஷமுண்டு தகமை யில்லாதவன், துக்கமுடையவன், துணைவருக்குங் குருவுக் குந் தோஷமுண்டாமென வறிக.

## 9-மிடத்தில் புதன் நின்ற பலன்

ஒன்பதாமிடத்தில் புதன் நிற்க ஜாதகமானவன் கீர்த்தியுள்ளவன், நல்ல வாக்குடையவன் சமர்த்தன் கல்விமான், மனதிற் சிந்தையுள்ளவன் தனவானுவான் என வறிக.

## 9-மிடத்தில் வியாழன் நின்ற பலன்

ஒன்பதாமிடத்தில் வியாழன் நிற்க ஜாதகமானவன் ஞானமுடையவன் அமைச்சன் தாட்டீகன் இராஜசேர்வையுடையவன், பாக்கியமுடையவன், வேதியராலும் அரசராலும் இலாபம் பெறுவானென வறிக.

## 9-மிடத்தில் சுக்கிரன் நின்ற பலன்

ஒன்பதாமிடத்தில் சுக்கிரன் நிற்க ஜாதகமானவன் தீர்க்காயுளுடையவன், வித்தை கற்பன் நல்ல ரூப களத்தித்தால் பாக்கியமடைவன் சொற்சோராதவனென வறிக.

## 9-மிடத்தில் சனி நின்ற பலன்

ஒன்பதாமிடத்திற் சனி நிற்க ஜாதகமானவனுக்கு பிதுர் பாக்கியமுண்டு, தனக்கு தோஷங் காட்டும் அன்னியரிடத்திலும் நீசர்களிடத்திலும் அடிமைத் தொழில் புரிவன், தரித்திரன், புத்திரயீனன், பந்துஜனயீனன், துக்கமுள்ளவன், சகோதரவீனனென வறிக.

## 9-மிடத்தில் இராகு நின்ற பலன்

ஒன்பதாமிடத்தில் இராகு நிற்க ஜாதகமானவன் விகடகவிப் பிரசங்கன், அதனால் தனஞ் சம்பாதிப்பான், கீர்த்திமான், வார்த்தையிற் பிரியன், பிதாகுரு இவர்களைத் தூஷிப்பானென வறிக.

## 9-மிடத்தில் கேது நின்ற பலன்

ஒன்பதாமிடத்தில் கேது நிற்க ஜாதகமானவனுடைய களத்திரத்தை யீன்ற தகப்பனுக்கும் சிறிய தகப்பனுக்கும் தோஷமுண்டாம் வாய்ச்சாலகன், தீரன், பாவ புத்தியுடையவனென வறிக.

9-மிடத்தில் குளிகன் நின்ற பலன்

ஒன்பதாமிடத்தில் குளிகன் நிற்க ஜாதகமானவன் பாவி; வஞ்சகன் நாசன் பிதுரர்கள் குரு இவர்கள் மேல் துவேஷனென வறிக.

ஒன்பதாம் பாவம் முற்றிற்று

.:.:.

# பத்தாம் பாவம்

உதயவிராசியினும் 4-7-10-மிடத்தினும் சந்திரன் நிற்க வியாழன் இவர்கள் பார்க்க ஜாதகமானவன் எக்காலமும் மன்னற்கு சமானமாக யாவரும் புகழும்படி வாழ்வானென வறிக.

10-மிடத்தில் சூரியன் நின்ற பலன்

பத்தாமிடத்தில் சூரியன் நிற்க ஜாதகமானவன் வாகன பிரசித்தன், பிதுர் வழியிற் கர்மியானவன்; கரும புத்தியுடையவன்; மன்னர் சேவை செய்குவான், புதல்வர் களைப் பெற்றிழப்பானென வறிக.

10-மிடத்தில் சந்திரன் நின்ற பலன்

பத்தாமிடத்தில் சந்திரன் நிற்க ஜாதகமானவன் கொடுக்குங் காரியத்தில் வல்லவன் தீர்த்த யாத்திரை செய்வன் கல்விமான் மாதுர் வழியிற் காமி. தனலாப முடையவன்; ஸ்திரீகள் மேல் மோகமுடையவனென வறிக,

10-மிடத்தில் அங்காரகன் நின்ற பலன்

பத்தாமிடத்தில் அங்காரகன் நிற்க ஜாதகமானவன் சூரன் தாஷ்டிகன், வெகு ஜனபூஜிதன் நினைத்த காரியத்தை முடிப்பனென வறிக.

## 10-மிடத்தில் புதன் நின்ற பலன்

பத்தாமிடத்தில் புதன் நிற்க ஜாதகமானவன் பிரத பரதேசவான் ஞானபுத்தியுடையவன் தெய்வ பிராம பக்தியுடையவன் கல்விமான் கருமி தனமுடையவனெ வறிக.

## 10-மிடத்தில் வியாழன் நின்ற பலன்

பத்தாமிடத்தில் வியாழன் நிற்க ஜாதகமானவ தொடுத்த காரியத்தை முடிப்பான் தனவான் தர்மவா ஞான ஆயுசுடையவன் பிரசித்தன் மந்திரித்தொழ் புரிகுவனென வறிக.

## 10-மிடத்தில் சுக்கிரன் நின்ற பலன்

பத்தாமிடத்தில் சுக்கிரன் நிற்க ஜாதகமானவ பூஜிதன் நினைத்த காரியத்தை முடிப்பன் கல்வி கீர்த்திமான் தீர்க்காயுளுடையவன் மதியூகி தனவா என வறிக.

## 10-மிடத்தில் சனி நின்ற பலன்

பத்தாமிடத்தில் சனி நிற்க ஜாதகமானவன் பாக்கி வான் குரு பக்தி பிராமணர்ப் பக்தி கிராமாதிக்கம் இ களுண்டாம் முன்னதாக தனங்கிடைக்கும் மந்தி தொழில் புரிவானென வறிக.

## 10-மிடத்தில் இராகு நின்ற பலன்.

பத்தாமிடத்தில் இராகு நிற்க ஜாதகமானவன் அநே களத்திரமுடையவன் அற்ப புத்திரருடையவன் உப மாடகூடப் பிரதாபமுடையவன் சமர்த்தனென வறிக.

## 10-மிடத்தில் கேது நின்ற பலன்

பத்தாமிடத்தில் கேது நிற்க ஜாதகமானவன் நற்புத் யுடையவன் வெகு ஜென விரோதன் பலவான் ஞா னவான் லோபி என வறிக.

10-மிடத்தில் குளிகன் நின்ற பலன்

பத்தாமிடத்தில் குளிகன் நிற்க ஜாதகமானவன்மனோ துக்கமுடையவன் என வறிக.

பத்தாம் பாவம் முற்றிற்று

°°°°°°

# பதினோராம் பாவம்

இலாபத்துக்குடையோன் ஏறிய அங்கிசாதிபதி தனத் தானுதிபதியாக ஏற 8-மிடத்ததிபன் இலக்கின கேந்திரங் களில் முன்பின்னாக சுக்கிரனங் கிசமேற அல்லது ஆயுள் பாக்கியம் பெற்று நிற்க சந்திரன்சுக்கிரன்வியாழன் புதன் இவர்கள் சேர்ந்திருக்க அல்லது பார்க்க வாதரோகமான வன் சிறுபொழுதில்தானே செல்வமுண்டாகி வாகனங்க ளுடன் சமர்த்தாய் எழுபத்தெட்டாணடு வரைக்குமிருப்பா னென வறிக.

வாகன ஸ்தானுதிபதியும் ஜன்மஸ்தானத்தில்நின்றோ னும் சேந்திரிக்க சுபரோடு சுபராயும்பாவரோடுபாவராயும் இலாபஸ்தானத்திலிருக்க லாபாதிபரும் அந்த ஸ்தானுதிப ரும் பார்க்க ஜாதகமானவன் செல்வமும் பல்லக்குமுடை தாய் பாக்கியம் பெற்று வாழ்வதை தாய் தந்தையர் பார்த்துக்களித்துப் புகழ்வர் இவனுக்கு வயது எண்பத் தாருமென வறிக.

11-மிடத்தில் சூரியன் நின்ற பலன்

பதினோருமிடத்தில் சூரியனி நிற்க ஜாதகமானவன் அரசர்களால் தனம் பெறுவன் வயதுக்குத்தக்க காரிய முடிப்பானென வறிக.

## 11-மிடத்தில் சந்திரன் நின்ற பலன்

பதினோருமிடத்தில் சந்திரன் நிற்க ஜாதசமானவன் மாதுரு வழியில் செய்யுந்தொழிலால் இலாபங் கிடைக்கும் மைந்தர் தீர்க்காயுளுடனிருப்பர் போக பாக்கியன் மாந்திரீகவானென வறிக.

## 11-மிடத்தில் அங்காரகன் நின்ற பலன்

பதினோருமிடத்தில் புதன் நிற்க ஜாதகமானவன் நெடியன் செவிமந்தமுடையவன் வாக்கு சுஃமுடைய வன் காமி சோர ஸ்திரீயினாலும்துணைவராலும் பூமியாலும் தனதான்னிய லாபங் கிடைக்குமென வறிக.

## 11-மிடத்தில் புதன் நின்ற பலன்

பதினோருமிடத்தில் புதன் நிற்க ஜாதகமானவன் கீர்த்திமான் சந்தோஷி செய்யும் வியாபாரத்தினால் லாப முடையவன் கணக்கில் வல்லவன் வித்தையுடையவன் பந்துஜனவழியில் தனம் சம்பாதித்து வாழ்வானென வறிக.

## 11-மிடத்தில் வியாழன நின்ற பலன்

பதினோருமிடத்தில் வியாழன் நிற்க ஜாதகமானவன் வித்தையினாலும் அரசர்களாலும் ஞானத்திலும் தனம் படைத்து வாழ்வானென்ன வறிக.

## 11-மிடத்தில் சுக்கிரன் நின்ற பலன்

பதினோருமிடத்தில் சுக்கிரன் நிற்க ஜாதகமானவன் அற்பாயுளுள்ள குரூர சிந்தையுடையவன், பரத்தையர் மேல் மனமுடையவன் வெங்கலம் முத்து இவைகளை வியாபாரஞ் செய்து வாழ்வானென வறிக.

## 11-மிடத்தில் சனி நின்ற பலன்

பதினோருமிடத்தில் சனி நிற்க ஜாதகமானவன் ஞானி சிற்பசாஸ்திரி சகோதர தோஷமுடையவன் பந்துக்களுக்குப் பிரியனென வறிக.

### 11-மிடத்தில் இராகு நின்ற பலன்

பதினோருமிடத்தில் இராகு நிற்க ஜாதகமானவன் பிற்புத்தியுடையவன் நோயுடையவன் பண்டிதன் வல்லவன் பெரியோர் பிராமணர்கள்மீது பக்தியுடையவன் இஷ்டனுக்கு தோஷமுண்டாமென வறிக.

### 11-மிடத்தில் கேது நின்ற பலன்

பதினோருமிடத்தில் கேது நிற்க ஜாதகமானவன் துணை வருள்ளந் துன்பமுற மகிழும் கம்பீரன் புத்திரனாற் கலக்கப்படுவான் வியாபாரத்தினால் இலாபங் கிடைக்கும் என வறிக.

### 11-மிடத்தில் குளிகன் நின்ற பலன்

பதிருேமிடத்தில் குளிகன் நிற்க ஜாதகமானவன் பேச்சினால் இலாபமுடையவன் ஜேஷ்டனுக்கு தோஷம் உண்டாமென வறிக.

பதினோரும் பாவம் முற்றிற்று

.°.°.°.

## பன்னிரண்டாம் பாவம்

வாகனங்கிசாதிபதி நின்ற அங்கிசத்தோன் இலாப ஸ்தானத்திலிருக்க இலாப ஸ்தானத்திலுள்ளோன் போக ஸ்தானத்தானோடு நிற்க போக ஸ்தானாதிபதியும்4-3-12 மிடத்தோரும் சேர்ந்து சுக்கிரனுக்கு 3-11-12-மிடத்தில் ஜாதகமானவன் 14-வது முதற்கொண்டு 78 வயதளவும் வாகனாதிகளுண்டாய் வாழ்வானென வறிக.

ஐந்தாமிடத்தில் குளிகன் நிற்க ஐந்தாமிடத்ததிபன் எட்டாமிடத்திலிருக்க சந்திரன் இராகுடன் கூடி நிஜ ஜாதகமானவன் பிறருடைய விந்தினால் பிறந்தவனென வறிக.

ஐந்தாமிடத்தில் சூரியன் நிற்க ஐந்தாமிடத்தானோடு இராகு கூடி நிற்க சந்திரனை குரு பார்க்க பிறர் விந்திற்குப் பிறந்தவனென வறிக.

வியாழன் சனி சந்திரன் சுக்கிரன் புதன் இவர்கள் அங்கிசமாக கேந்திர கோணமேற ஜாதகன் சகல சமபத்துடன் வாழ்வானென வறிக.

### 12-மிடத்தில் சூரியன் நின்ற பலன்

பன்னிரண்டாமிடத்தில் சூரியன் நிற்க ஜாதகமானவன் நயனரோகமுடையவனென வறிக.

### 12-மிடத்தில் சந்திரன் நின்ற பலன்

பன்னிரண்டாமிடத்தில் சந்திரன் நிற்க ஜாதகமானவன் அங்கயீனன் எந்நேரமும் புசித்திருப்பானென வறிக.

### 12-மிடத்தில் அங்காரகன் நின்ற பலன்

பன்னிரண்டாமிடத்தில் அங்காரகன் நிற்க ஜாதகமானவன் ரோககளத்திரமுடையவன் துக்கவான் நயன விசார சுயஜாதிகளால் வெறுக்கப்படுவன் சயன சுகமில்லா வனென வறிக.

### 12-மிடத்தில் புதன் நின்ற பலன்

பன்னிரண்டாமிடத்தில் புதன் நிற்க ஜாதகமானவன் லோகம் வெறுக்கப்படுவான் கிரக சுகமுடையவன் ஆலசியவான் பாரியர் சகிதன் ஆசாரகிருத்தியன் துவேஷ முடையவன் அங்கயீனனுவானென வறிக.

### 12-மிடத்தில் வியாழன் நின்ற பலன்

பன்னிரண்டாமிடத்தில் வியாழன் நிற்க ஜாதகமானவன் வழக்கோரஞ்சொல்வன் பாபகர்மிஅறிவீனன் இராஜஸ்தானன் இராஜவயிரமுடையவன் போக வெறுப்பன் சுயஜாதியர், மேல் பட்சமில்லாதவனுவானென வறிக.

### 12-மிடத்தில் சுக்கிரன் நின்ற பலன்

பன்னிரண்டாமிடத்தில் சுக்கிரன் நிற்க ஜாதக மானவன் சுகித்து வாழ்வான் தேக சுகமுடையவன் வித்தையில் வல்லவனாவானென வறிக.

### 12-மிடத்தில் சனி நின்ற பலன்

பன்னிரண்டாமிடத்தில் சனி நிற்க ஜாதகமானவன் முகரோகி விவாதசீலன் பரிபூதனுவானென வறிக.

### 12-மிடத்தில் இராகு நின்ற பலன்

பன்னிரண்டாமிடத்தில் இராகு நிற்க ஜாதகமானவன் வழக்கில் ஓரஞ் சொல்பவன் அழிவேறினவன் அன்னிய கிரக பரிபாலகன் என வறிக;

### 12-மிடத்தில் கேது நின்ற பலன்

பன்னிரண்டாமிடத்தில் கேது நிற்க ஜாதகமானவன் பலவான் வாததேகமுடையவன் அழிவேறினவன் சயன சுகமில்லாதவன் என வறிக,

பன்னிரண்டாம் பாவம் முற்றிற்று

ஃஃஃ

நாம நட்சத்திரங்க

அதிதேவதை நட்சத்

| 1 பாதம் | ௨ பாதம் | ௩ பாதம் | 4 பாதம் | நட்சத்திரங்கள் | அதி தேவதைகள் | கணங்க |
|---|---|---|---|---|---|---|
| சு | சே | சோ | லா | அசுவனி | சரஸ்வதி | தேவம் |
| வி | லூ | லே | லோ | பரணி | துர்க்கை | மானுஷ |
| அ | இ | உ | எ | கிருத்திகை | அக்கினி | ராட்சசம் |
| ஒ | வா | வீ | வு | உரோகினி | பிரமா | மானுஷம் |
| வே | வோ | க | கி | மிருகசிரம் | சந்திரன் | தேவம் |
| கு | க | ங | ச்ச | திருவாதிரை | உருத்திரன் | மானுஷம் |
| கே | கோ | ஹ | ஸி | புனர்பூசம் | அதிதி | தேவம் |
| ஹ | ஹே | ஹோ | ட | பூசம் | குரு | தேவம் |
| டி | டு | டே | டோ | ஆயில்லியம் | ஆதிசேஷன் | ராட்சசம் |
| ம | மி | மு | மே | மகம் | சுக்கிரன் | ராட்சசம் |
| மோ | டா | டி | டு | பூரம் | பார்வதி | மானுஷம் |
| டே | டோ | ப | பி | உத்திரம் | சூரியன் | மானுஷம் |
| பு | ஷ | ண | ட்ட | அஸ்தம் | சரஸ்கா | தேவம் |
| பே | போ | ர | ரி | சித்திரை | துவட்டா | ராட்சசம் |
| ரு | ரே | ரோ | த | சுவாதி | வாயு | தேவம் |
| தி | து | தே | தோ | விசாகம் | சுப்பிரமண்யர் | ராட்சசம் |
| ந | நி | நு | நே | அனுஷம் | லட்சுமி | தேவம் |
| நே | ய | யி | யு | கேட்டை | இந்திரன் | ராட்சசம் |
| யே | யோ | ப | பி | மூலம் | அசுரர் | ராட்சசம் |
| பு | த | ப்ப | ட | பூராடம் | வருணன் | மானுஷம் |
| பே | போ | ஜ | ஜி | உத்திராடம் | விநாயகர் | மானுஷம் |
| க்கு | க்கு | க்கே | கோ | திருவோணம் | விஷ்ணு | தேவம் |
| க | ஸ | கு | கே | அவிட்டம் | வசுக்கன் | ராட்சசம் |
| கோ | கி | ஸீ | ஸு | சதயம் | யமன் | ராட்சசம் |
| ஸே | ஸோ | த | தி | பூரட்டாதி | குபேரன் | மானுஷம் |
| த | த்த | த்த | ஞ | உத்திரட்டாதி | காமதேனு | மானுஷம் |
| தே | தோ | சோ | சி | ரேவதி | சனி | தேவம் |

கணம் மிருகம் பட்சி;
ராசி கணம் விருட்சம்

| மிருகம் | விருட்சம் | பட்சி | நட்சத்திரங்கள் நிற்கும் இராசிகள் |
|---|---|---|---|
| ஆண் குதிரை | எட்டி | இராஜாளி | அசுவணி, பரணி. கார்த்திகை முதற்கால் மேஷம், கார்த்திகை, பின்முக்கால் ரோகிணி மிருக சீரிடம் முன்னரை; ரிஷபம்; மிருக சீரிடம் பின்னரை திருவாதிரை, புனர்பூஷம் முன்கால்; மிதுனம் புனர்பூசம், பின் கால், பூசம் ஆயில்யம் கற்கடகம், மகம், பூரம் உத்தரத்து முன் கால், சிங்கம்,உத்திரம் பின் முக்கால், அஸ்தம், சித்திரை முன்னரையும், கன்னி சித்திரை, பின்னரை, சுவாதி,விசாகம் முன்முக்கால், துலாம், விசாகம். பின் கால் கேட்கை விருட்சிகம், மூலம் பூராடம் உத்ராடத்து முன்கால் தனுசு உத்திராடம், பின் முக்கால் திருவோணம்; அவிட்டம், முன்னரை மகரம்‘ அவிட்டம் பின்னரை, சதயம், பூரட்டாதிமுன்முக்கால் கும்பம்,பூரட்டாதிபின்கால் உத்திரட்டாதி ரேவதி மீனம் |
| ஆண்யானை | நெல்லி | காக்கை | |
| பெண் ஆடு | அத்தி | மயில் | |
| ஆண் நாய் | நாவல் | ஆந்தை | |
| பெண்சாரை | கருங்காலி | கோழி | |
| ஆண் நாய் | செங்கருங்கா | அன்றில் | |
| பெண் பூனை | மூங்கில் | அன்னம் | |
| ஆண் ஆடு | அரசு | நீர்காக்கை | |
| ஆண் பூனை | புன்னை | கிச்சிலி | |
| ஆண் எலி | ஆல் | ஆண்கழுகு | |
| பெண் எலி | பாலாசு | பெண் கழுகு | |
| ஆண் எருது | அலரி | சிள் வண்டு | |
| பெண்எருமை | ஆத்தி | பருந்து | |
| ஆண் புலி | வில்வம் | ரங்கொத்தி | |
| ஆண் எருமை | மருதமரம் | தேனீ | |
| பெண் புலி | விளா | செவ்வார | |
| பெண்மான் | மகிழ் | சாதகம் | |
| ஆண் மான் | பிராய் | சக்ரவளம் | |
| ஆண் நாய் | மரா | சேம்போ | |
| ஆண் குரங்கு | வஞ்சி | பண்டை | |
| பட்டுட்பசு | பலா | வலியன் | |
| பெண்குரங்கு | எருக்கு | ந[illegible] | |
| பெண் சிங்கம் | வன்[illegible] | [illegible]ண்வண்டு | |
| பெண்குதிரை | சடம்பு | அண்டங்கா | |
| ஆண்சாஙகம் | தேவதாரி | உள்ளான் | |
| பெண் பசு | வேம்பு | கோட்டான் | |
| பெண் யானை | இலுப்பை | வல்லூரு | |

## கோசார தேவதைகளின் பலாபலன்கள்

சந்திர லக்கினத்திற்கு சூரியன் ஐந்தாமிடத்திலும் சந்திரன் எட்டாமிடத்திலும் செவ்வாய் ஏழாமிடத்தில் புதன் நான்காமிடத்திலும் வியாழன் மூன்றுமிடத்திலும் வெள்ளி ஆறுமிடத்திலும் சனி சென்மத்திலும் இராகு ஒன்பதாமிடத்திலும்கேது இரண்டாமிடத்திலும்இருந்தால் கோசாரத்தில் நல்ல பலனைக் கொடுக்க மாட்டார்கள்.

சந்திர லக்கினத்திற்கு 11-3-10-மிடங்களில் சூரியனிருக்க முறையே 5-9-4-12-மிடங்களில் கிரகங்களில்லாதிருந்தால் தானிருந்த இராசி பலனைக் கொடுப்பார்கள் என வறிக.

1-3-6-7-10-11-மிடங்களில் கிரகங்களில்லாதிருந்தால் தானிருந்த இராசிப் பலனைக் கொடுக்குமென வறிக.

3-6-11-மிடங்களில் செவ்வாய் சனி இராகு இவர்கள் இருக்க முறையே 2-9-5-மிடங்களில்கிரகங்களில்லாதிருந்தால் தானிருந்த இராசிப் பலனைக் கொடுக்கும் என வறிக.

2-4-6-8-10-11 மிடங்களில் புதனிருக்க முறையே 5-9-1-8-2 மிடங்களில் கிரகங்களில்லாதிருந்தால் தானிருந்த இராசிப் பலனைக் கொடுப்பார்கள்.

1-6-9-7-5-2 மிடங்களில் வியாழனிருக்க முறையே 3-10-3-4-12 மிடங்களில் கிரகங்கள் இல்லாமலிருந்தால் தானிருந்த இராசிப் பலனைக் கொடுப்பார்கள்.

11-12-8-6-4-3-5-9 மிடங்களில் சுக்கிரன் இருக்க முறையே 9-3-7-5-3-9-10-11 மிடங்களில் கிரகமில்லாமலிருந்தால் தானிருந்த இராசிப் பலனைக் கொடுப்பான்.

## கோசார விபரீத தேவதை அறியும்படி

சந்திர லக்கினத்திற்கு 5-3-1-12 மிடங்களில் சூரிய னிருக்க முறையே 1-13-10-9 மிடங்களில் வேறு கிரகம் இருந்தால் சூரியன் தக்க பலனைக் கொடுப்பானென வறிக.

இவ்வாறே மற்ற கிரகங்களுக்கும் கோசார விபரீத தேவதை பார்த்துக் கொள்ள வேண்டுமென வறிக.

சூரியனுஞ் செவ்வாயுஞ் முற்பங்கிலும் குருவும் சுக்கிரனும் நடுப்பங்கிலும் சனியுஞ் சந்திரனும் கடைப் பங்கிலும் புதனும் பாம்புகளும் எப்போதும் பலன் தருவார் களென வறிக.

## மாதா பிதாவுக்கு கரிட்டநாள்

பூராடம் முதற்காலும் பூசத்தின் இரண்டாங் காலும் மூன்றுங்காலும் சித்திரையின் முதற்காலும் மாதாபிதா வுக்கு கரிட்டமென வறிக.

## பிதாவுக் கரிட்ட நாள்

ஆயிலியம் பூராடம் மூன்றாங் காலும் உத்திராடம் ரேவதி இரண்டாங் காலும் பிதாவுக் கரிட்டமாம் என வறிக.

## மாதாவுக் கரிட்ட நாள்

பூசம் ஆயிலியம் மகம் சித்திரை பூராடம் உத்திராடம் ரேவதி முதற்காலும் உத்திரம் விசாகம் இரண்டாம் காலும் மாதாவுக் கரிட்டமாமென வறிக.

## பாட்டனுக்கரிட்ட நாள்

சித்திரை முதற் காலும் விசாகம் அனுஷம் மூலம் நாலாங்காலும் பாட்டனுக் கரிட்டமாமென வறிக.

## அம்மானுக் கரிட்டநாள்

உரோகினி நட்சத்திரம் முழுமையும் சதயம் பூரட்டாதி முதற்காலும் மகம் இரண்டாங்காலும் அனுஷம் மூலம் மூன்றுங்காலும் பூராடம் நாலாங்காலும் அம்மானுக் கரிட்டமாமென வறிக.

## கோசார நற்பலன்கள்

### சூரியன்

ஊனமில்லாமூன்றுகூட னுகந்தவாறுதன்னினும்
உற்பத்தினோடடுத்த ஓங்கும்பதினொன்றினும்
தேனதாகுஞ்செங்கதிருந் தேரிநிற்கிலவ்விடம்
தேடிவருஞ்செல்வமோடு தானிறக்கமேதரும்
மானேகேளுமங்கையற்கு மகிழுங்கெற்பந்தானுண்டோ
மடுத்திருந்தவியாதிதானு மகன்றதுவுமோடிடும்
கோனெனசத்துருதன்னை குறுகிடஜெயிப்பாராம்
குறையகற்றிநற்பலனைக் கொடுக்கும் ஸ்தானமாமிதே

### சந்திரன்

மீதேகேளுமொன்றுமூன்று மிகுந்தவாறுவேழினும்
மிக்கதோர்பத்தினோடு மேவுபதினொன்றினும்
தீதிலாவெண்மதியுந் தானமரிலவ்விடம்
தேவயிந்திரன்போலும் வாழ்வுதானதுபலித்திடும்
சோதியாஞ்சந்தானமொடு சொல்லுதற்திரமிக்கவாம்
சுத்தமாம்வயித்தியவாதம் சோதிரமந்திம்பலிதமாம்
மேதினியெலாம்புகழ மிக்கக்கீர்த்தியோங்கிடும்
மேன்மையான நற்பலஸ்தானமீது நன்மையே

### அங்காரகன்

நன்மையாகுமூன்றுட நயந்தவாறுதன்னினும்
நவிலும்பதினொன்றினும் நாட்டமாய் சேய்நின்றிடில்
வன்மையானயீகையோடு வதுவையதுகூடிடும்
வாழவேதனக்குமனை வலியவந்துசேர்ந்திடும்
தன்கையானவாழ்வினொடு தழைத்திடுஞ்சந்தானமும்
தக்கபூரிவருத்துமாந்த னதியில்பயிர்விர்த்தியாம்
பன்மையாகுங்கீர்த்தியொடு பலதுயரம்நீங்குமாம்
மகன்றனர் கணிதவல்லோர் பாருநல்லஸ்தானமே

புதன்

தானமாகுமிரண்டுவாறு சாற்றுமெட்டுதன்னினும்
தக்கபத்தாமிடத்திேைடு தாண்டிபதினென்றினும்
ஊனமில்லாபுந்திதானு முகந்துமவர் நின்றிடில்
உற்றமித்தியோடுயோமம் மாங்கியேபலிக்குமாம்
ஆனதோருறவினர்க ளடுத்துவந்துசேர்வராம்
அன்புடன்சந்தான விர்த்தியாகுமே மகிழுமாம்
இன்பமுறதன்மனம்போ லெய்திடுஞ்சுகமென
இச்சையாமுன்னோர்கள் சொன்னஸ்தானமிதுபாருமே

வியாழன்

பார்க்கிரண்டுவைந்தினும் பகருமேழுவொன்பதும்
பக்ஷமாம்பதினென்றினும் பார்ப்பானுமேவியேறிடில்
தீர்க்கமாகும்செல்வமொடு திகழ்குடைபரிவரும்
தேடரியதானதர்மம்தேசமெங்கும்கீர்த்தியாம்
சேர்க்கவேதாய்தந்தைதுணை செதரிடாதிருக்குமாம்
செப்பிடுமறுமையோடு பெருமையதுவோங்குமாம்
பூர்க்கவேயிராஜசேவை புகழுடன் கிடைக்குமாம்
புத்தியுண்டாஞ்சித்தி யுண்டாம்புகழ்தரும்நன்றிதே

சுக்கிரன்

நன்றதாகுமொன்று நவிலுமூன்றுநாலுடன்
நாட்டமாகுமைந்தெட்டொடு நலம் பதினொன்றுவியம்
குன்றிடாதகுருடனுருங் குலவியதில்நின்றிடில்
குலவும்பொன்னோடு வெள்ளி செம்புவந்து சேருமாம்
கன்றென நல்மொழிதிறமை கல்விபுத்திபெருகுமாம்
சாட்சிதரும்லக்ஷிமி கடாட்சமும்பலிக்குமாம்
சென்றவிடங்கீர்த்தியாஞ் செய்வரன்னதானமாம்
செப்பியகணிதவல்லோர் சீர்மொழியிதுண்மையே

சனி

உண்மையாகுமூன்றுட னேதுமாறுதன்னினும்]
உற்றபதினென்றினி லுகந்துசனிநின்றிடில்

திண்ணமிலாக்கீர்த்தியுந் தேடியேவரும்பாக்கியம்
திரவியத்தோடுசெல்வம் தானுறுமேவாகனம்
உண்மையானயேவலு மிடம்பொருளுங்கருதுமாம்
இலட்சுமிகடாட்சமூண்டா மிலாபமும்புவியினில்
புண்மையானவாயுசும் புகழதுவுமோங்குமாம்
போதவேநற்பலனெனப் புகன்றனர்கணிதரே

## இராகு

கணிதமேமூன்றுடன் தருதுமாறுதன்னினும்
சாட்சியாம்பதிஞென்றினுங் காணராகுநின்றிடில்
பூணவேவரும்பாக்கியம் புகலொணுதசெல்வம்
போதவேசெய்காரியம் புரியசித்திதானுறும்
தோணும்புத்திநிலையிருந் திலங்குமன்னதானமும்
தோகையேநற்கீர்த்தியா தொகுப்புதானுண்டாம்
மேணவேகைவிட்டகன்ற விளங்கும்பொருள்கிட்டிடும்
விந்தையாங் கணிதவல்லோர் விளம்பு மூறையாறிதே

## கேது

வரையுமூன்றுதன்னுடன் வகுத்தவாறுதன்னினும்
வளம்பெறுபதிஞென்றினும் வந்தகேதுநின்றிடில்
குறையகலும்பயிர்செழிக்குங் குவியுந்தனமிக்கவாம்
கூறுமிக்குவலயத்தில் குபேரன்போலுங்கீர்த்தியாம்
புரியுந்தன்சொல்தவறிடாமை புகழதுதருகுமாம்
போசிப்பினுஞ் சுகமதாம் பொருந்தும் வாழ்வுநன்மையாம்
வறுமையதுவிலகிநன்று வருகும்லாபமிக்கவாம்
வாகுடனற்பலனறிய வரைந்தனர்நூலோர்

கோசார பலன்கள் முற்றிற்று



## கோசார துற்பலன்கள்

### சூரியன்

ஜென்மமிரண்டு நாலுடன் சேரவைந்தேழெட்டினுஞ்
செப்புமொன்பான் வியத்திலுஞ் செங்கதிரோனின்றிடில்
துன்பமொடுதுயரமாம் தொகுக்குங்காரியக்கேடாம்
தூரதேசமோட்டுமாம் தொல்லையாமலைச்சலாம்
வன்மமெய்யிலுஷ்ணமாம் வாட்டும்பொல்லாக்கினவதாம்
வருத்தமாகுங்கண்வலி வந்துநேரும்பகைகளும்
தன்மனைவிட்டோட்டுமாந் தலைவலியும்வறுமையாம்
தக்கதிர்வாழுமாகா தன்மனையிதாகுமே

### சந்திரன்

ஆறுமிரண்டு நாளொடைந்து மடுத்தயெட்டுநவம்வியம்
அம்புலியுந்தானுமே யமர்ந்துமேயிருந்திடில்
போகுமேபொருட்களவு பிடிபடுஞ்சிறைவரும்
பொல்லாத்தீங்குகிலேசமொடு பொருந்தொணுத்
துயரமாம்
பாகம்பிரிந்திமறதியாம் பட்டிடும்நிஷ்டூரமாம்
பழியதுபெருகுமாம் பாதையாம்வணக்கமாம்
மோகமோடுநிரையின்ன மூதேவிநாளும்வாசமாம்
மொழியுஞ்சொல்லு மூனமாமோதுபலன்நாசமே

### அங்காரகன்

நாசமொன்றிரண்டுடன் நாலொடைந்தழெட்டினும்
நாடுமொன்பான்பத்துடனவிலும்பன்னிரண்டினும்
மோசமாகசெவ்வாய்தானு முனைந்துமேயமர்ந்திடில்
மொழியொணுதுன்பமது மூண்டுமேவதைத்திடும்
கூசமொடுதுக்கமுங் கோளுடன்வழக்குறும்
குற்றமாகும்பகைகளுங் கொடுக்குமெய்மயக்கமும்
வாசமாமனைமக்களும் வரையொணுதுயர்படுவாராம்
வரையொணுத்துன்பமென்றுவாகுமொழிக்கூறுமே

புதன்

கூறுமொன்றுமூன்றுடன் குலவிநாலைந்தேழினும்
குற்றமாம்நவத்தினுங் கொடூரம்பன்னிரண்டினும்
சேரம்வேபுதன்தானுமோ சீரியிம்மனை நின்டில்
செப்பொணுதீனமயோடு செய்யுமச்சந்தானுறும்
நெருந்துக்கமிக்கவாம் நடக்குந்தூதுதொழிலதாம்
நிந்தையாகுங்கீல்பிடிப்பு நீடுமெய்யில் தோன்றுமாம்
காரியங்கள்சேதமாங் கல்வியதுகுறையுமாம்
கண்டுணர்ந்தகணிதவல்லோர் கருத்துடன்செப்பினரே

வியாழன்

ஜென்மராமர்வனத்திலே சீதையைசிறைவைத்ததும்
தீதிலாதொருமூன்றிலே திரியோதிரன்படைமாண்டதும்
தன்புத்திரர் நாலிலே வனவாசமேவிதிரிந்ததும்
சத்துமாபலியாறிலே இருநாள்விலங்கதுபூண்டதும்
இன்மையெட்டிலேவாயிபட்டமழிந்துமப்படிபோனதும்
ஈசனுர்சடைமுடியுடன்தலையோட்டிலேபிறந்துண்டதும்
பன்னிரண்டில்ராவணன் பத்துமாமுடியற்றும்
பாரில்மாகுருசாரிமா மனைவாழ்வுருதீதென்னவே

சுக்கிரன்

என்னவாறுயேழுட னியம்பும்பத்துதன்னினும்
இருக்கவெள்ளிதானுமே யியம்புமிவ்விடங்களில்
மன்னியதுயர் துன்பமோடு மாகுந்துற்குறிகளும்
மடுத்திடுங்குலேசமோடு மனவருந்தஞ்சோர்வுறும்
பின்னியமெய்தன்னிலெங்கும் பெருகிடுஞ்சொரிகளும
பிடிக்குமயக்கமோடு பீடையதுவணுகுமாம்
தன்ணியகுருடன்வா ழுந் தங்கும்பொல்லாஸ்தானமே
தானறிந்துகணிதமதை தக்கபலனேதுமே

சனி

ஓதுசென்மமிரண்டுட னுற்றநாலைதேழினும்
உறையுமெட்டு நவத்திநேடுதசத்தினும்

தீதுறுஞ்சனியிவ்விடங்களில் தீமையாகவேநின்றிடில்
தேடியதனஞ்சேதமோடுயிர் தீமையாமுயிர்சேதம்
பாதையாந்தனிச்சிறைப் படுவர்பண்ணுமானபங்கமாம்
பழிவருந்தன்மொழில் மோசம்பலதுயருமணுகுமாம்
மாதுகேள்மறுதேசஞ்சொல்லு மாடுமனைகளுநஷ்டமாம்
மாபகையோடுபில்லியேவல் பிசாசும் பிடித்தாட்டுமே

## இராகு

ஆட்டும்ஜென்மமிரண்டுநா லுடனைந்தேழெட்டான்பதும்
அடுத்துபத்துபனிரண் டில்சீறியமர்ந்திடில்
தொட்டபிணியுமற்றிடுமாம் துயரமூட்டுமாசரால்
தொல்லையாம்வயித்தியனல் துடருமுயிர்மோசமாம்
வெட்டுகுத்துசண்டையாம் வெளிதேசமேசஞ்சாரமாம்
விளங்கிடுஞ்சகோதரர்க்குள் வருகுஞ்சத்துருபாதையாம்
பூட்டுமெய்மயக்கமோடுப் பொருள்விரையமாகும்
புத்திதனக்கிசைந்தபடிப் பினத்தியெதிரிவரே

## கேது

வண்ணமாக வழுத்தியவாறுகேள்
திண்ணமாகிய தீயகேது விற்குகே
பண்ணருகுப் பலனையு மோர்ந்துமே
எண்ணமாக வெடுத்துரை செய்யுமே

கோசாரத்துற் பலன் முற்றிற்று



## கிரகங்கள் ஒன்பதுக்குந் திசாபுத்தி பலன்கள்

கார்த்திகை; உத்திரம்; உத்திராடம், சூரிய மகாதிசை வருஷம் ஆறுக்குப் பலாபலன்

சூரியன் மகாதிசை வருஷம் 6 இதற்குள் ராஜபயம் பொன்னூர்கள் பயம், பொன்னூர் நட்பு, அதனல் தனச்

சேதம் சந்ததியோடு சேய்க்கும் அரிட்டமூண்டாம் தன்னுடைய, குருவிற் கரிட்டமாங் கண்ணேயுண்டாம் தலை நோயுண்டாம் பகை விளைவிக்குமென வறிக.

புத்தி விவரம்

சூரியதிசையில் சூரியபுத்தி மாதம் 3 நாள் 18 இதற்குள் அரசர்களால் குரோதம் நேரும் மார்பிலும் முகத்திலும் பீடையான பிரியுண்டாம் வயிற்றில் குன்மரோகங்காணும் பல்வலியுண்டாகும் ஊராரும் உற்ரூரும் பகையவர் சுரமும் சிலேத்துமமுமுண்டாமென வறிக.

சூரியன் மகாதிசையில் சந்திரபுத்தி மாதம் 6 இதற்குள் இரு நிதி லாபம் மனையாள் சந்தோஷம் தனதான்னியம் பூமி வறுத்து அரசர்களால் மகிழ்ச்சிமன்னர்களால் வெகு மானம் வருதல் சந்தான விர்த்தியுண்டாமென வறிக.

சூரியன் மகாதிசையில் அங்கா?கன் புத்திமாதம்நாலு நாள் ஆறுக்குள் இடர் பகை கன்று காலி தனதன்னியம் இவைகள் நாசம் அக்கினியாற்கேடு மனைவி புதல்வர் நாசம். ஆயுதபயம் திரிச்சல் அக்கினியாற்கேடு மனைவி புதல்வர் நாசம். ஆயுதபயம் திரிச்சல் மானக்கேடு சுரப் பிணியால் சிந்தனை ஊர்விட்டு ஊருக்குப்போக்குமுண் டாமென வறிக.

சூரியன் மகாதிசையில் இராகு புத்திமாதம் பத்துநாள் இருபத்திநாலிற்குள் உற்ரூர் பூமி தனம் இவைநாசமாகும் கோபத்தினுல் பயம் சுரம் விஷம் இவைகளாற் பீடை சுரத்தில் விரணங்காட்டும் அலேச்சலுண்டாமென வறிக.

சூரியன் மகாதிசையில் வியாழன் புத்தி மாதம் ஒன்பது நாள் பதினெட்டிற்குள் கைவிட்டுப் போன பொருள் வரும் பூமி கிடைக்கும் பகைகளெல்லாம் ஒழியும் அரசர் களால் மகிழ்ச்சி தரும் கன்று காலியுடன் கீர்த்தியுண்டாம் என வறிக.

சூரியன் மகாதிசையிற் சனி புத்தி மாதம் பதினென்று நாள் பன்னிரண்டிற்குள்பகைவர் தன்னை வெல்லுவார்கள் வாணிபம் பூமி இவைகள் நாசமாகும் மனையாளுக்குப் பீடை காட்டும் தனதான்னிய சேதம்பந்துக்களில்கலகமா மென வறிக.

சூரியன் மகாதிசையில் புதன் புத்தி மாதம் 10 நாள் 6 இதற்குள் அதிக லாபம் கல்வி விர்த்தி மனமகிழ்ச்சி புத்திரரும் தாரமும் லபிக்கும் பொற்பணியும் வஸ்திரமுங் கிடைக்கும், இராஜபோகமுண்டாமென வறிக.

சூரியன் மகாதிசையில் கேது புத்தி மாதம் 4, நாள் 6 இதற்குள் தன் இனமான பந்துக்கள் நாசம் புகழும் புத்திரரும் உண்டாம்கிலேசம் மனையாள் அரிட்டம்இராஜ பயம் விஷத்தினாலும் நஞ்சாலும் கருவிகளாலும் பயங் கெட்டு வேளாண்மை இவைகள் கெடுமென வறிக.

சூரியன் மகாதிசையில் சுக்கிரன் புத்தி வருடம் 1. இதற்குள் மாதவம், செல்வம்; பூமி பொன் இவைகள் பலிதமாகும் நினைத்த காரியஞ் சித்தியாகும் கன்று காலி கள் பெருகும். இராஜபோக முண்டாம் ஆனால் படை யுண்டாகி வாழ்வானென வறிக.

சூரியன் மகா திசை முற்றிற்று

ஃஃஃ

## உரோகிணி, அஸ்தம், திருவோணம், சந்திரன் மகாதிசை வருஷம் பத்துக்குப் பலாபலன்

சந்திரன் மகாதிசை வருடம் 10 இதற்குள் தனலர்பம் புத்திர லாபம் மனோதைரியம் கீர்த்தி பிரதிஷ்டை ஆரோக் கியம் இராஜ போஜனம் மகிழ்ச்சி இவைகளுண்டாமென வறிக.

### புத்தி விபரம்

சந்திரன் மகாதிசையில் சந்திரன் புத்தி மாதம் 10. இதற்குள் விவாகங் கூடும் பொன் பூமி கிடைக்கும் கன்று காலிகள் பெருகும் வாணிபங் கிடைக்கும் அரசர்களால் மகிழ்ச்சியுண்டாமென வறிக.

சந்திரன் மகாதிசையில் அங்காரகன் புத்தி மாதம் 7 இதற்குள் வெப்பு சுரங்காணும் வேதியர்களால்வழக்குண்

டம். அம்மை காணும். மனையாளுக்குப் பீடை காட்டும் சோரர்களால் குரோதமுண்டாம் அக்கினியால் வாதை நேரும் பூமி போகும் வாணிபம் கெடும் அலைச்சலுண்டா மென வறிக.

சந்திரன் மகாதிசையில் இராகு புத்திவருடம் 1, மாதம் 6. இதற்குள் சர்ப்ப பயம் பூதத்தினால் பீடை தேகத்தில் காயம்படும் மனையாளும் புதல்வரும் வேறுபடச் செய்யும் கவலைப்படுவர் வாணிபம் போகும் மனவருத்தத்துடன் கஞ்சி கூழ் பொசிப்பனென வறிக.

சந்திரன் மகாதிசையில் வியாழன் புத்தி வருடம் 1, மாதம் 4, இதற்குள் தருமவர்த்தனை பொன் குதிரை இலாபம் கிடைக்கும் அரசர்களால் நாற்கால் ஜீவன் கிடைக்கும் வேளாண்மை பலிதமாகும் பலவிதமான பயிர்களால் இலாபங் கிடைக்கும் பூமியின்மீது யாவரும் புகழ் வாழ்வானென வறிக,

சந்திரன் மகாதிசையில் சனி புத்தி வருடம் 1, மாதம் 7, இதற்குள் பங்கப்படுத்தும் பசியால் மெலியச் செய்யும் மதுபானஞ் செய்வன். கால் சிரை, தலைச்சிறையாகும் பகைவரால் துன்பப்படுவன் அரசரானும் பிரபுக்களாலும் குருவினாலும் பகைப்படுவன் பொருள் சேதமாகுமென வறிக.

சந்திரன் மகாதிசையில் புதன் பத்தி வருடம் 1, மாதம் 5 இதற்குள் வியாபார பலிதம் வஸ்திராபரண லாபம் வைசியர்கள்நேசம் கல்வியால் சகலரும் புகழ்வர் அதனால் பொன் கிடைக்கும் தெய்வச் செயலும் இராஜ நோக்கமு முண்டாமென வறிக.

சந்திரன் மகாதிசையில் கேது புத்தி மாதம் 7. இதற்குள் தந்தை தாய் மைந்தர் இவர்கள் நாசமாவர் கால் கரங்களில் சிந்தனையுண்டாகும் கன்று காலியுடன் பொருள் நஷ்டமாகும் சோரர் பயமுண்டாமென வறிக.

சந்திரன் மகா திசையில் சுக்கிர புத்தி வருடம் 1, மாதம் 8 இதற்குள் பந்துக்களுக்குள் மகிழ்ச்சி புத்திர லாபம் பாப நிவர்த்தி கனி வர்க்கங்கள் இலாபம் அரசர் களால் கீர்த்தி சந்தோஷம் வாகனம் வெள்ளி வெங்கலம் பூமி வாணிபம் இவைகள் பலிதமாமென வறிக.

சந்திரன் மகாதிசையில் சூரியன் புத்தி மாதம் 6 இதற்குள் குன்ம வியாதி காணும் மூத்திர கிரிச்சின முண் டாகும் தந்தரோகஞ் செய்யும் வாதபித்தத்தினால் கண் ணோய் உண்டாகும் மனையாளுக்கு அரிட்டமாகிய பீடை வரும் அலைச்சலுண்டாமென வறிக.

சுக்கிரன் மகாதிசை முற்றிற்று

ஃஃஃ

## மிருகசீரிடம்-சித்திரை-அவிட்டம்-அங்காரகன் மகாதிசை வருஷம் ஏழுக்குப் பலாபலன்

அங்காரகன் மகாதிசை வருடம் 7 இதற்குள் கண் ணோய் பீடைபசாசு அக்கினிபயம் பகைவர்கள் பயம் இவ ரிடமிருந்து மனைவி மைந்தர்கள் வேறுபடச் செய்யும்அவர் களால் கோபம் நேருமென வறிக.

### புத்தி விபரம்

அங்கரரகன் மகாதிசையில் அங்காரகன் புத்திமாதம் 4, நாள் 27. இதற்குள் வைசூரி சுரம் குஷ்டவிரணம் பலங் குறைதல் சோரர் பயம்பொன்தேசமாகும் கோபாவே சத்தினால் நற்குழவி மரிக்கும் மனையாள் பிரிந்து போய் விடுவாள் என வறிக.

அங்காரகன் மகாதிசையில் இராகு புத்தி வருடம் 1 நாள் 18. இதற்குள் அரசர்களால் பயம் பரதேசவாசம் பில்லி சூனியங்களினால் தனச்சேதம் வரும் உருவங்

கெடும் பூமி வேருகும் வாணிபங்கெடும் மிகவும் விரோத மென வறிக.

அங்காரகன் மகாதிசையில் வியாழன் புத்தி வருடம் மாதம் 11, நாள் 6 இதற்குள் சவுரியவிருத்தி தனதான்ய விர்த்தி தாசிதாசாள் வர்த்தனை யுண்டாம் வேளாண்மை பலிதமாகும் தண்டிகையும் வஸ்த்திராபரணமுங் கிடைக்குமென வறிக.

அங்காரகன் மகாதிசையில் சனி புத்தி வருடம் 11, மாதம் 1, நாள் 9, இதற்குள் சத்துரு பீடை சுற்றத்தார் நாசம் சகிக்க முடியாத வியாதி தனச்சேதம் வேசியர் சேர்க்கை விருப்பமில்லாத தொழிலாமென வறிக.

அங்காரகன் மகாதிசையில் புதன் புத்தி மாதம் 11, நாள் 37 இதற்குள் நல்ல போஜனமுண்டாம் வாகனம் பொன் பூமி வித்தை முதலியன லாபம் சத்துரு ஜயம் கீர்த்தி தேககாந்தி இவைகளுண்டாமென வறிக.

அங்காரகன் திசையில் கேது புத்தி மாதம் 4 நாள் 27 இதற்குள் ஜபதபங்கெடும், துவேஷமுண்டாம், பொருள் சேதப்படும் நீசர்கள் கலகம் நேரும் அதனுல் பயம் அலைச்சலுண்டாம் பூமி போம், ஊரார் பகைநேரும், மனக்கிலேசமுண்டாமென வறிக.

அங்காரகன் திசையில் சுக்கிரபுத்தி வருடம் 1 மாதம் 2 இதற்குள் கீர்த்தி பரிமளகந்தமனிதல், போக பாக்கிய முண்டு உலகிலுள்ளோர் புகழ்வர் மாற்ருனை உபாயத்தால் ஜயிப்பன் கன்று காலி பலிக்கும் மகிழ்ச்சியுண்டா மென வறிக.

அங்காரகன் மகாதிசையில் சூரியன் புத்தி மாதம் 4 நாள் 6 இதற்குள் மனைவிமைந்தர்களுக்குப் பகை பீடை யுண்டாம் பலவிதமாக சொர்ப்பனங் காணும் உஷ்ணாதி ரோகங்கள் சம்பவிக்கும் அரசராலும் மந்திரிகளாலும் பகைநேரும் மனைவி மக்களனை வரும் விரோதமாவார்கள் தலையில் பிணிகாணுமென வறிக.

அங்காரகன் மகாதிசையில் சந்திரன் புத்தி மாதம் 7 இதற்குள் ஞானமுமுண்டாகும் வாயுவினால்பீடையுண்டாம் பந்துக்களுடன் மனைவி மைந்தர்களும் பகையாவார்கள் என வறிக,

அங்காரகன் மகாதிசை முற்றிற்று

ஃஃஃ

## திருவாதிரை, சுவாதி, சதயம், இராகு, மகாதிசை வருஷ பதினெட்டுக்கு பலாபலன்கள்

இராகு மகாதிசை வருஷம் 18 இதற்குள் மன்னர் களாற் கோபம் மித்துரு பயம் தனச்சேதம் தந்தைக்கு மரணம் நேரும் தனக்குண்டான ஸ்தானம் நாசமாகும் சலிப்பு வெறுப்பு அவைகளுண்டாகும் சிநேகிதரும் இஷ்ட பந்துக்களும் பகையாவார்களென வறிக.

புத்தி விபரம்

இராகு திசையில் இராகு புத்தி வருடம் 2, மாதம் 8, நாள் 12. இதற்குள் தனந்தேடுவன் ஜயமுண்டு மன்னர் களாலும் மிருகத்தினாலும் ஆயதங்களினாலும் தனது சேவகர்களாலும் பயம் நேரும் மனையாள் மரணமாவாள் என வறிக,

இராகு மகாதிசையில் வியாழன் புக்தி வருடம் 2, மாதம் 4, நாள் 24 இதற்குள் திரவியம் பூஷண லாபம் உரிமையும் கன்று காலியும் வாணிபமும் பலிதமாகும் நினைத்த பொருள் கைக்கூடும் சிக்காதனமுமுண்டாம் என வறிக.

இராகு மகாதிசை சனி புக்தி வருடம் 2; மாசம் 10' நாள் 6 இதற்குள் மரணத்திற்குச் சமானமான துக்கம் வாகனம் விருட்சம் இவைகளுலிருந்து விழுதல் மானக் கேடு துற்புத்தி கொடும்பகை மனையிற் கலகம் காலில்

விலங்கு நேரும் துடையில் விரணமுண்டாகும் கன்றுகாலி பொன் பூமி இவைகள் கெடுமென வறிக.

இராகு மகாதிசையில் புதன் புக்தி வருடம்4, மாதம்6, நாள் 18 இதற்குள் உரிமையான பொருளுண்டாம் மகிமைபொருந்தியமைந்தர்கள் உண்டாகும் சுகபோஜனம் வெகு ஜனப்பிரிதியாகும் செட்டு வெள்ளாண்மை பலித மாகும் பூமி கிடைக்கும் புகழுண்டாமென வறிக,

இராகு மகாதிசையில் கேதுபுக்தி வருடம் 1, நாள் 18 இதற்குள் மனையில் கொள்ளைபோகும் மானபங்கம்நேரும் அகாலபோஜனம் பொசிப்பார் துவேஷம் கலகம் நிலைமையும் தாரமுமாகவும் உறவின்ரும் அடிமையாளும் வேந்தர்களும் பகையாவார்களென வறிக.

இராகு மகாதிசையில் சுக்கிரபுத்திவருடம்3 இதற்குள் பூமி பொன் மைந்தர் பசு எருமை க்ஷேத்திரம் தனதான்னியம் முதலிய சம்பத்துண்டாமென வறிக.

இராகு மகாதிசையில் சூரியன் புக்திமாதம் 10. நாள் 24 இதற்குள் இனத்தாராலும் பிரமராக்ஷசியாலும் பயமாகும்வீடுந்தாரமும் பாழாகும்தீர்த்தயாத்திரை செய்வன் கைப்பொருளும் பூமியும் அடிமையாலும் கன்று காலியும் போய் அலைச்சல்படுவானென வறிக.

இராகு மகாதிசையில் சந்திரன் புக்தி வருடம்1,மாதம் 6 இதற்குள் நீர்கனல் இவைகளிலிருந்து விழுதல் சென்னல் பூமி லாபம் கப்பல் வர்த்தகஞ் செய்குவன் வாணிபம் ஓங்கும் மைந்தரும்வேந்தரும்சன்மானமுடையவராவர் பாற்கடல்போன்ற செல்வமுண்டாமென வறிக.

இராகு மகாதிசையில் அங்காரகன் புக்தி வருடம் 1, நாள் 13 இதற்குள் உலகோருக்கு உபத்திரவஞ் செய்ய காரிய புத்தியுடைவனுவன் நிந்தைப்படுவன் திரபுத்தியாளன் பயம் நேருமென் வறிக.

இராகு மகாதிசை முற்றிற்று



## புனர்பூசம், விசாகம், பூரட்டாதி குருதிசை வருஷம் பதினாறுக்குப் பலாபலன்

வியாழன் மகாதிசையில் வருடம் 16, இதற்குள் போதக சித்தியாகும் பட்டாபிஷேகமுண்டு புத்திர விர்த்தியாகும் சந்திராபரணம் கிடைக்கும் வாகனாதிகள் சேரும் கீர்த்தியுண்டாமென வறிக.

### புத்தி விபரம்

வியாழன் மகாதிசையில் வியாழன் புக்தி வருடம் 2, மாதம் 1, நாள் 18, இதற்குள் தனதானியம் ஆளடிமை வர்த்தனை வெகுஜனவசியம் சிவபூசை கன்றுகாலிக்ஷேத்திரம் வெங்கலம் வெள்ளி முதலியவை யுண்டாமென வறிக.

வியாழன் மகாதிசையில் சனிபுக்தி வருடம் 2 மாதம் 6, நாள் 12 இதற்குள் மன்னன் கோபம் நேரும் வீண் காரியங்களில் அலைச்சலுண்டாகும் மன்னர்களில் பயம் நேரும் துன்பமான ரோகமுண்டாம் பூமி கன்று காலி பொருள் முதலியவை கெடும் நீசரால் பகை நேருமென வறிக.

வியாழன் மகாதிசையில் புதன் புக்திவருடம் 2, மாதம் 3, நாள் 6 இதற்குள் பூமி புத்திர லாபங் கிடைக்கும் கலியாணங் கூடும் கீர்த்தி யுண்டாம் வியாபாரம் பலவிதமாகுமென வறிக.

வியாழன் மகாதிசையில் கேதுபுக்தி மாதம் 11 நாள் 6, இதற்குள் தனதானியம் மைந்தர்கள் நாசம் பிராமணாள் பகை விஷயம் இராக்களாலும் நீசர்களாலும் பல பொருள் சேதம் கருவிகளாற் கெடுதி நேருமென வறிக.

வியாழன் மகாதிசையில் சுக்கிரபுக்தி வருடம் 1, மாதம் 4, இதற்குள் சம்பத்து கீர்த்தி அபிஷேகம் புரியவன் மன்னர்களால் பூமி பொன் கிடைக்கும் ஸ்திரீக்கு

சேர்க்கையுண்டாம் சிறை தீங்கும் பிரதிஷ்டையாமென வறிக.

வியாழன் மகாதிசையில் சூரியன் புக்தி மாதம் 6, நாள் 19 இதற்குள் சுயமான தன் தொழில் யாவும் நாசமாகும் பந்துக்கள் பகையாளர் சேவை அரசர் வாசலில் சஞ்சாரம் நேத்திர ரோகம் குன்மம் பரு முதலிய ரோகங்கள் காணும் அலைச்சலினால் இலாபங் கிடைக்குமென வறிக.

வியாழன் மகாதிசையில் சந்திரன் புக்தி வருடம் 1, மாதம் 4 இதற்குள் பரிவாகனம் பூமி பொருள் வாணிபம் மகிழ்ச்சி இராஜபோஜனம் முதலியவைகளுண்டாமென வறிக.

வியாழன் மகாதிசையில் அங்காரகன் புத்தி மாதம் 11 நாள் 6 இதற்குள் மிருகத்தினுல் வருங்கண்டம் தேகத்தில் ரோகங் காணும் ஸ்தானப் பிரதிஷ்டை யுண்டு பயம் நேரும் தனதானியம் உண்டாமென வறிக.

வியாழன் மகாதிசையில் இராகு புக்தி வருடம் 3' மாதம் 4, நாள் 24 இதற்குள் சோரர்கள் விருத்தி சமமாலும் தேகநிந்தை உற்ருர் உறவின் முறையார் மக்கள் பொன் கன்று காலி இவைகள் யாவும் வேறுபட்டு போய் விடுமென வறிக.

வியாழன் மகாதிசை முற்றிற்று

ஃஃஃ

## பூசம், அனுஷம், உத்திராட்டாதி, சனி மகாதிசை வருஷம் பத்தொன்பதுக்குப் பலாபலன்

சனி மகாதிசை வருடம் 19 இதற்குள் பொருளோடு மானக்கேடு நேரும். இராஜகோபத்தினுல் பயமுண்டாம் இஷ்டன் பகையாவார்கள் தாயாருக்குக் கண்டம்சம்பவிக்

கும் கண்டவர் யாரும் பொய் யெனப் புகல்வர் துக்கந் துயரமென வறிக.

## புத்தி விபரம்

சனி மகாதிசையில் சனி புத்தி வருடம் 3, நாள் 3 இதற்குஞ் சந்ததியோடு பொருள் நாசமாகும் சத்துருபயம் நேரும் முதுகு, அரை இவைகளில் வியாதி காணும் வாணிபங்கெடும் யாவரும் பொய்யனென்று நிந்தனையாக இகழ்வார்களென வறிக.

சனி மகாதிசையில்புதன் புக்தி வருடம் 2, மாதம் 3, நாள் 9 இதற்குள் தனதான்னியம் க்ஷேத்திரங் கிடைக்கும் குருபக்தி தரும் சீடர்களால் தனங் கிடைக்கும் வெற்றி யுண்டாகும் பகைவர்கள் வந்து உறவாடுவார்கள் என வறிக.

சனி மகாதிசையில் கேது புக்தி வருடம் 1, மாதம் 1, நாள் 9 இதற்குள் அகாலபோஜனம் தேசந்திரிதல் சொற்பனங் காணுதல் மெய்யில் ரோகங்காட்டும் பந்துக்களும் மைந்தரும் வேறுபடுவர் காரியச்சேதம் பிணிவாதை யுண்டாமென வறிக.

சனி மகாதிசையில் சுக்கிர புக்தி வருடம் 3, மாதம் 2, இதற்குள்வியாதி யுற்பவமாகும் மறையோர் தெய்வம் முதலிய பிரீதி கல்யாணம் ஆளடிமை வேளாண்மை கன்று காலி இவைகள்புதுமையாக வாய்க்கும் மைந்தரும் செல்வமுமுண் டாமென வறிக.

சனி மகாதிசையில் சூரிய புக்தி மாதம் 12, நாள் 12 இதற்குள் அரசர் பகை மனஸ்தாபம் தேகத்திற் பீடை உற்ருர் கலகம் மனையாளும் மக்கள் வேறுபடுவார்கள் தேசாந்திரப் போக்கு அதனுல் பொருள் கள்ளர் கைவசமாகுமென வறிக.

சனி மகாதிசையில் சந்திரன் புக்தி வருடம்1; மாதம்2 இதற்குள் சீலமுண்டாகும் மறையோர் பக்தி குரு பக்தி தெய்வபக்தி யுண்டாகும் தானசித்தி கிடைக்கும் தாரத்திற்கும் மைந்தருக்குங் கேடாமென வறிக.

சனி மகாதிசையில் அங்காரகன் புத்தி வருடம் 1, மாதம் 1, நாள் 6 இதற்குள் பிராமணர் பகை பிராண னுக்கே நிலகேடான நேத்திரரோகம் வரும் ஆயுதங்களி ஞலும் அக்கினிஞலும் இரணமுண்டாகும் கை கால்களில் ரோகமுண்டாமென வறிக.

சனி மகாதிசையில் இராகுபுக்தி வருடம் 2. மாதம் 10, நாள் 6 இதற்குள் குஷ்டரோகம் நேத்திரரோகம் சித்தப் பிரமை தேகத்தில் கிருமி இவைகள் காணும் பொருள் சேதமாகும் சோம்பலுண்டாகும் பிராணசங்கடம் நேரும் நஞ்சாலும் அரசர்களாலும் பயமுண்டாகும் சிறை விலகு மென வறிக.

சனி மகாதிசையில் குருபுக்தி வருடம் 2, மாதம் 6, நாள் 12 இதற்குள் பவழம் வஸ்திராபரணம் வாகன லாபமுண்டாம் கோயில் கோபுரம் அமைத்தல் பழி பகை யாவும் வெல்லல் மனைவி மைந்தர் வாணிபம் இவைகள் உண்டாமென வறிக.

சனி மகாதிசை முற்றிற்று

∴∴∴

## ஆயிலியம், கேட்டை, ரேவதி, புதன் மகாதிசை வருஷம் பதினேழுக்குப் பலாபலன்

புதன் மகாதிசையில் வருடம் 17 இதற்குள் வித்தை பலிதமாகும் பொன்னுடன் வாகனங் கிடைக்கும் சுப சோபனங் கலியாணங்கூடும் பகைவர்கள் வந்து வணங்கு வார்கள் இராஜயோகம் பெற்று வாழ்வாரென வறிக.

### புத்தி விவரம்

புதன் மகாதிசையில் புதன் புக்தி வருடம்2, மாதம் 4, நாள் 26 இதற்குள் ஞானம் பெறுவன் சாத்திரங்கள்

கற்பன் செம்பொன் சேரும் தானிய லாபமுண்டாகும் உலகப்பிரீதி வேளாண்மை பலிதமாகும் உத்தியோகமும் பூமியும் வாய்க்கும் இளையோனுக்கு மணம் நடக்குமென வறிக.

புதன் மகாதிசையில் கேதுபுக்தி மாதம் 11, நாள் 27 இதற்குள் அச்சம் பயம் மித்துருவேஷம்கண்ணோய் அதிக சோரர்களாலும் விப்த்து நேரும் பூமி பதிகுடியிருப்பு தனம் இவைகள் போமென வறிக.

புதன் மகாதிசையில் சுக்கிரன்புக்தி வருடம் 2, மாதம் 10 இதற்குள் தனம் செல்வம் வஸ்திராபரணம்மைந்தர் இவைகளுண்டாம் கடன் தீரும் செய்யுந் தொழிலில் இலாபங் காணும் கல்வியில் வல்லவனுகயிருப்பான் பகை வருமென வறிக.

புதன் மகாதிசையில் சூரியன்புக்தி மாதம் 10, நாள்6 இதற்குள் கபாலரோகம் சனிரோகம்; சம்பவிக்கும் கண் பிணி பித்தம் நேரும் குருவினுல் கலகமாகும்சொற்பனங் காணும் பூமி கன்று காலி போம் பகைவர் மிச்சவார்கள் தெய்வ பயமுண்டாகும் செல்வங் குறைந்து போய் விடுமென வறிக.

புதன் மகாதிசையில் சந்திரன்புக்தி வருடம்1, மாதம்4 இதற்குள் செல்வங் பெருகும் தேவதாபூசை அதிகரிக்கும் மாற்றுனை செயிப்பன் க்ஷேத்திர சேவையுமுண்டுநினைத்த காரியம் சித்தியாகும் பகைவரும்மைந்தரும் உறவாவார்கள் மனையாள் மகிழுண்டாமென வறிக,

புதன் மகாதிசையில் அங்காரகன் புக்தி மாதம் 11, நாள் 27 இதற்குள் தனநாசம் சத்துரு சண்டி அக்கினி பயம் சிரவிரணம் தாபசுரத்தினுல் கண்டம் ஆனல் பூமி வாகனம் பொருள் கன்று காலி வேளாண்மை வாணிபம் பாரியாகு இவைகள் வாய்க்குமென வறிக.

புதன் மகாதிசையில் இராகு புக்தி வருடம்1, மாதம் 26; நாள்13 இதற்குள் வாணிபத்தினுலும்மனையாளாலும்

பர மாதர்களாலும் வியாதியுண்டாகும் விடத்தினலும் துஷ்டர்களாலுஞ் சங்கை நேரும் அதனல் பிணி அடுக்கும் அரசர்களாலும் பிரபுக்களாலுங் கோபம் சேர்ந்து சம்பத்துக் குறைந்து தொழில் நஷ்டமாமென வறிக.

புதன் மகாதிசையில் வியாழன் புக்தி வருடம் 2, மாதம் 3, நாள் 6 இதற்குள் வேளாண்மை அதிகரிக்கும் சவுக்கியம் வேதவாக்கியம் பிதுர் இவைகளைக் கண்டு மகிழ்தல் பகை வரை ஜெயித்தல் பொருள் சம்பாதித்தல் பூமி வாணிபம் பலிதமாகும் கீர்த்தி ராஜபோஜனமுண்டாமென வறிக.

புதன் மகாதிசையில் சனி புக்தி வருடம் 2, மாதம் 3, நாள் 9 இதற்குள் நிலைமை கெடும் தெய்வப்பிராமணனை நிந்தனை செய்யும் உறவின் முறையர் நஷ்டம் பூமியும் பொருளும் போகும். கால் கரங்களில் வலப்புறம் வீக்கம் குடைச்சல் நோக்காடு செய்யுமென வறிக.

புதன் மகா திசை முற்றிற்று

ஃஃஃ

## அசுவனி, மகம், கேது மகாதிசை வருஷம் ஏழுக்குப் பலாபலன்

கேது மகாதிசை வருஷம் 7 இதற்குள் இராத்திரி சஞ்சாரம் தரித்திரப்படுதல் விஷபயம்சூதுசூனியம் இவைகளால் வாதை துணை வரும் பகைவராவர் நன்மையைப் புகன்ற போதிலும் பகை நேரும் அலைச்சலுண்டாமென வறிக,

### புத்தி விபரம்

கேது மகாதிசையில் கேது புத்தி மாதம் 4, நாள் 27 இதற்குள் சோரரால் கொலை நேரும் வைசூரியால் கால் கையினில் காயம்படும் ரோகமுண்டாம் தீயினல் பயம் நேரும் பெரியோரால் பூமி வாணிபம் நஞ்சு இவைகளால் இடர் வருமென வறிக.

கேது மகாதிசையில் சுக்கிரன் புக்தி வருடம் 1; மாதம் 2 இதற்குள் தாரபுத்ராள் சேதம் பொன் நிலைமை ஜன வசியம் சேனுதிபதித்துவம் வரும் பூமி வாணிபம் கன்று காலி பலிதமாகும் தொடுத்த காரியம் பலிதமாகுமென வறிக.

கேது மகாதிசையில் சூரியன் புக்தி மாதம் 4, நாள் 5 இதற்குள் மைந்தன் அல்லது மனைவி இருவரிலொருவ ருக்கு சுரத்தால் பாதையான பயம் நேரும் அல்லது உற்ரு ரிக்கரிட்டஞ் செய்யும் அரசர்களால் தலைசிறை விலங்கு வழிப் பகையுண்டாமென வறிக.

கேது மகாதிசையில் சந்திரன் புக்தி மாதம் இதற்குள் ஜன்மம் பிணியொழியும் போரில் செயிப்பன் தெய்வபக்தி யுண்டு அனுமத்தாக வந்த பொருள் அழித்து போகும் வாதம் வாயுமடவார்களின் வழக்கு வெல்லும் திறமை யினுல் வாணிப லாபமுண்டாமென வறிக.

கேது மகாதிசையில் அங்காரகன் புத்தி மாதம் 4, நாள் 27 இதற்குள் சோரர் சத்துரு மன்னன் சத்துரு பயம் பந்துக்கள் நாசம் பரதாரத்தினுல் வாணிபம் போம் மனதுக்கமுண்டாம் மனைவியும்கன்றுகாலியும் வேறுபட்டு போகும் தரணியிலுள்ளோர் பகையாவார்களென வறிக,

கேது மகாதிசையில் இராகுபுக்தி வருடம்1, நாள் 18, இதற்குள் பரியானை மனையாள் இவைகள் நாசமாகும் வேந்தராலும் சத்துருவாலும் பீடை நேரும்யாவரும் பகை யாவார்கள் சிரை விலங்குவரும் சூலை வாதரோகம் முத் தொழிலொடுக்கம் வெம்பசியாகுமென வறிக.

கேது மகாதிசையில் வியாழன் புக்தி மாதம்11, நாள்6 இதற்குள் பூமிலாபம் கலியாணம் கூடும் சத்துரு நாசமா வார் கீர்த்தி யுண்டு தனதான்னியம் இலாபமாகும் மேன்மையான சம்பத்துண்டாமென வறிக,

கேது மகாதிசையில் சனி புக்தி வருடம் 1, மாதம் 1 நாள் 7 இதற்குள் வெளிதேச சஞ்சாரம் பசுதனம்;

நஷ்டம் மனையாள் பகையாவாள் கருவிகளாற் பயம் மன்னர்களாற் பீடை மருந்துண்ணல் கெட்டு நஷ்டம் வீடு நஷ்டமென வறிக.

கேது மகாதிசையில் புதன்புக்தி மாதம் 11, நாள் 27. இதற்குள் பரிசன சவுக்கியமுண்டாகும் வாகனலாபம் சாதுக்களை ரட்சிக்கப்படும் கன்று காலி திரவியம் பூமி கிடைக்கும் அறிஞரும் பகைவரும் உறவாவார்கள் சம்பத்துண்டாமென வறிக.

கேது மகாதிசை முற்றிற்று

ஃஃஃஃ

## பரணி, பூரம், சுக்கிரன் மகாதிசை வருஷம் இருபத்துக்குப் பலாபலன்

சுக்கிரன் மகாதிசை வருடம் 20 இதற்குள் பந்துக்களும் சம்பத்தும் இராஜாக்கள் சேவையும்போக பாக்கியமும் க்ஷேத்திர லாபமும் உண்டாமென வறிக.

### புத்தி விவரம்

சுக்கிரன் மகாதிசையில் சுக்கிரன் புக்தி வருடம் 3, மாதம் 4 இதற்குள் இராஜசன்மானம் பூஷணம் புத்திர விர்த்தியுண்டாகும் சகலமான தானியங்களும் கிடைக்கும் பூர்வத்தில் தேடிய நிலம் பூமி முதலானவைகளும் அதனுல் மகிழ்ச்சியுமுண்டாமென வறிக.

சுக்கிர மகாதிசையில் சூரியன் புக்தி வருடம்1 இதற்குள் தலைபாரம் கண்வலி காரியக்கேடு அரசர்களாலும் பிரபுக்களாலும் பகை நேரும் கன்றுகாலி வீடு இவைகள் தீயினுல் எறிந்து மடியுமென வறிக.

சுக்கிரன் மகாதிசையில் சூரியன் புக்தி வருடம் 1, மாதம் 8 இதற்குள் சொல் வன்மையாகும் போக மதிகரிக்கும் தொழில் மத்திபமாகும் தரித்திரஞ் செய்யும்

நல்ல வஸ்திராபரணமும் நல்ல சுகமுடைய மைந்தரும் அருமையான கன்றுகாலிகளுடைய மத்திய செல்வனுமா மென வறிக.

சுக்கிரன் மகாதிசையில் அங்காரகன் புக்தி வருடம் 1, மாதம் 2 இதற்குள் உறவாகும் துணைவர்கள் நாசம் பந்துக்கள் நாசம் குத்தரோகம் அரசர் கோபம் மனையாள் பிரிந்து போகுதல் வேளாண்மை பலவித செட்டு தொழில் யாவுங் கெடாமல் பலபல வழக்கு நேருமென வறிக.

சுக்கிரன் மகாதிசையில் இராகுபுத்தி வருடம் 3 இதற்குள் பங்கப்படுத்தும் பீடை சேரும் துற்சனா சாவகாசஞ் செய்யுமன்னர் நாசமாகுவர் தனதான்னியச் சேதம் புத்திரன் மனைவி செட்டு பங்கப்படும் பில்லி யேவல் பலிக்குமென சொல்லுவார்களென வறிக.

சுக்கிரன் மகாதிசையில் வியாழன் புக்தி வருடம் 2; மாதம் 8 இதற்குள் விவாகமுண்டாம் தாய் தந்தை சுகப் படுவார்கள் இராஜ சன்மானம் பொருந்தும் சம்போகம் வாணிபம் இவைகள் போம் கொடுத்த காரியம் ஜெயமாம் என வறிக.

சுக்கிரன் மகாதிசையில் சனிபுக்தி வருடம் 3; மாதம் 2 இதற்குள் மூர்க்க சாவகாசத்தினால் விலங்குவரும் பிராண சங்கடமாகும் பார்க்கில் ஆசாரமுண்டாம் வாணிபலாபமும் வழக்கும் வெல்லுவன் செல்வமுண்டாகிய மரணந் தரும் என வறிக.

சுக்கிரன் மகாதிசையில் புதன் புக்தி வருடம் 1, மாதம் 10 இதற்குள் இராஜ பூஜிதையும் வாகனமும் வரும் தெய்வப்பிராமணர் சேவை கிடைக்கும் சவுக்கியமுண்டா கும் மணிகளும் ஆபரணங்களும் உண்டாகும் கிராமப் பிரதிஷ்டை கிடைக்குமென வறிக.

சுக்கிரன் மகாதிசையில் கேது புக்தி வருடம் ; மாதம் 4 இதற்குள் தான் புகலும் சொல் யாவும் விஷத்திற் கொப்பாக இருக்கும் காலுக்கால் ஜீவன் நாசமாகும

நிடசாத்திரம் பலிதமாகும் குருவையும் உறவையும் நிந்தித்தலுண்டாமென வறிக,

சுக்கிரன் மகாதிசை முற்றிற்று

°°°°°°

## குளிகன் மகாதிசை பலன்

### விருத்தம்

குறித்ததேகுளிகன் றிரையுசைக்கிற்
குளிகனிராசி பாகைகலை
பிறித்ததையறிந்து குளிகனிலை
பெற்றநட்சத்திர திசையில்
செறித்ததேசென்ம பாகைமட்டுஞ்
சென்றவருடந்தன்னை யெண்ணி
மறித்ததேயச் சல்லியமாக
வருடந்திசையை நடத்துவதே

### இதுவுமது

பககும்குளி கன் தன்னுலே பார்க்கப்படுவோன் றிசை தனிலுஞ் செகமேற்குளிக பாவதிசைதனிலுமாந்தி யட்ட மத்தி; விகரிந்தோன் றிசைதலிலுனெருக்கு மரிட்டம் பலமாகும் புகர்கேதரிட்டஞ்சனி பாம்பு பொன்சேய்கணக்கன் புத்தி யென்பார்,

குளிகன் மகாதிசை முற்றிற்று

°°°°°°



## இராசிகளுக்கு கிரக பலன்

| இராசி | பாபர் | சுபர் | மாரகர் | யோகர் |
|---|---|---|---|---|
| மேஷம் | சனி-சு-பு | குரு-சூரி | சனி-புதன் | சனி-சந் |
| ரிஷ | குரு-க-சந் | சு-சூ | குரு-சு-சந் | சனி |
| மீது | செ-குரு-சூ | சுக்கிரன் | செ-குரு-சூரி | 0 |
| கடக | க-சனி-சந் | செ-குரு | சு-சனி-சந் | செவ் |
| சிம்ம | சு-புதன் | செ | சனி-புதன் | செவ் |
| கன்னி | சந்-செ-குரு | சுக்கிரன் | செ-குரு-சந் | சு-புத |
| துலாம் | குரு-சூ-செ | சு-பு | குரு-சு-செ | சந்-புத |
| விருச்சி | பு-செ-சனி | சந் | புத-செ-சு | சூரி-சந் |
| தனுசு | சுக்கிரன் | செ-சூரி | சந்-சு-கு-சனி | குரு-சனி |
| மகரம் | குரு-சந்-செ | சு-புத | குரு-சந்-செ-சூ | செ-சனி |
| கும்பம் | குரு-சந்-செ | சுக்கிரன் | சந்-செ-சூ-பு | சனி-பு |
| மீனம் | சனி-சு-புத | செவ்-சந் | சனி-சு-பு | செவ் |

### காலற்ற உடலற்ற தலையற்ற நட்சத்திரங்கள் துற்பலன்கள் கவி

#### கட்டளைக் கலித்துறை

காலற்றன வுடலற்றன தலையற்றன நாளில்
மாணுக்குய மடவார்தமை கூடினும்ல டாவார்
மாலுக்கொரு மணிமாளிகை கோலினுமது பாழாம்
ஞானத்தவர் வழிபோகிலு நலமெய் திடராமே

#### இதன் பொருள்

| காலற்றநாள் | உடலற்றநாள் | தலையற்றநாள் |
|---|---|---|
| கார்த்திகை | மிருகசீரிடம் | புனர்பூசம் |
| உத்திரம் | சித்திரை | விசாகம் |
| உத்திராடம் | அவிட்டம் | பூரட்டாதி |

இந்த நட்சத்திரங்கள் வரும் நாள்கள் புணர்ச்சிக்கும் முகூர்த்தத்திற்கும் யாத்திரைக்கும் ஆகாவாம்

## ஜன்மானு ஜன்மங்களில் கூடாத காரியமும் கூடுங் காரியமும் அறியும்படி

### விருத்தம்

கற்பினுள் மூன்றிலெண்ணே கடிமணஞ்சிரார்த்தம்போக்கு
வற்புறும்பிணிமருந்து மயிர்வினைமருவலாகா
இன்புகலுழுதல்வித்தல் விருந்துணலரங்கஞ்செய்தல்
பொற்பணிமகுடமாடை புனைதலாம் புகலுமாதே

[இ-ள்] ஜனனவர நட்சத்திரத் திதிகளில் எண்ணை யிடல் விவாகம் செய்யல் நூதனமாகத் திதி செய்யல் யாத்திரை போகல் மயிர்கழித்தல் மருந்துண்ணல்முதலிய காரியங்கள் செய்யலாகாது, உழவுசெய்ய, விதைவிதைக்க விருந்து செய்ய, ஆபரணம் பூண முடிசூட்ட கோடி உடுக்க இவைகள் உத்தமமாம்.

### கூடாத நாளறியும்படி

ஆதிரைபரணிகார்த்திகை யாயிலியமுப்பூரங்கேட்டை
தீதுருவிசாரஞ்சோதி சித்திரைமகமீரரறும்
மாதனங்கொண்டார்சாரர் வழிநடைப்பட்டார்மீளார்
பாய்தனிற்படுத்தார்தேரார் பாம்பின்வாய்தேரைதானே

### மருந்துண்ணும் நாள்

ஞாயிறு வியாழம் அமரபட்சத் திதிகளும் உத்தமமா மென வறிக.

ஜன்மானு ஜன்மம் ஜனன திதி ஜனனவாரம் திருவாதிரை முதல் விலக்கப்பட்ட நட்சத்திரங்கள் ஆகாவாமென வறிக.

### வியாதி கண்ட நட்சத்திர பலாபலன்கள்

### விருத்தம்

சோதிசதயமுப்பூரஞ் சொல்லுமாயிலியமுடன்கேட்டை
தீதாம்பரணியாதிரை நாள் செவ்வாய்சனிஞாயிறுவாரம்
ஓதுநவமிதுவாதசியுமுற்ற சதுர்த்திசஷ்டினிற்
பேதைமடவார்பிணிகொள்வார்பிரமன்வரினும்பிழையாரே

### இதையாருடக் கவிப்பு இராசிகள்

ஆருடங்கேட்ட ராசி உதயராசியாம் ஆருடங் கேட்ப்போன் லக்கன முதலிய ராசி ஆருடராசியாம் கவிப்புராசி கன்னி துலாம் மீனங்களுக்கு ரிஷபமும், மிதுனம் கடகம் சிங்கங்களுக்கு மேஷமும் தனுசுமகரம்விருச்சிகங்களுக்கு மிதுனமாகுமென வறிக.

### ஆருடம்

ஆருடராசி முதலாகச் சூரியன் நின்ற இராசி வரை எண்ணி கண்ட தொகையை பலன் சொல்வதென வறிக,

உதயலக்கினந் தொட்டு அந்த லக்கினாதிபதி நின்ற இராசி வரை எண்ணின தொகையை பார்க்க ஒற்றையாயிருந்தால் உத்தமம், இரட்டையாயிருந்தால் மத்திபமாம் என வறிக.

### ஆருடச் சுருக்க விதி

### விருத்தம்

சூரியன்முதலோ ரைத்துதிசெய்து
ஆருடநவநீதத் தரும்பொரு
டேறினுமின்றிச் சுருவிலறிந்திட
வாருடச்சுருக்க மென்றமைந்ததே

1 1 1

சூரியன்வந்து திக்திடத்தூயதாய்
நேருர்வந்துவலைத் திடும்நற்பொருள்
சாரும்நன்மைத் தடைவந்தபோரனுங்
காரியங்களும் கைவசமாகுமே

2 1 3

சந்திரன்வந்துவந்து தானேயுதித்திட
செந்திருவஞ்சிறைப்பு மமைந்திடுஞ்
சுந்தரப்பொருளே நற்சுகத்தருஞ்
சிந்தையுங்களில் பெய்திக்கிறக்குமே

2 2 2

சேயுதிக்கச்செழும் பிணியெய்திடுமாயு
மைந்தனு மங்கிடுஞ்செல்வமுங்

காயம்நொந்துக் கலக்கமுண்டாகியே
தீயவாதனையா மென்றுசெப்பிடே

3 1 2

புதனுதித்திடப் புத்தியும்பக்தியு
மதிகமாகியே அந்தணர் நட்பதாய்
விதியைவென்றுவினையை முடித்திட
அதிகமாம்பலனெய்து மறிந்திடே

3 3 3

குருவுதிக்கக்குலம்பி விரத்தியாய்த்
திருவுங்கல்வியுஞ் செல்வமுமெய்திடு
பெருமையும்புகழ்பிர பலமாகியே
வருமிதென்று மகிழ்ந்துரைந்தார்களே

3 2 1

சுக்கிரன்வந்து தோன்றிடிலேசுப
மிக்கவாடைம் பொன்னுபரணங்களுங்
கைக்குளாகுங் கடுமைநீக்கிடுந்
தக்கநன்மை யிதென்றுரைசாற்றிடே

1 2 3

சனியன்வந்துமே தானுமுதித்திட
இனியதோர்பொருள் பாருள் நீங்கிடும்
மனதின்பெருந் துன்பமெய்திடே
தனியதாக்கிடு மன்றுசொன்னார்களே

1 3 2

இராகுமேவந்துதித்திட ரெய்தியே
தராதலத்தையுதான் பறிதோட்டிடும்
அராவிடதினுமல்லது காவலாஞ்சுராக
மில்லையிதென்று சொல்வார்களே

2 3 1

கேதுவெய்தக்கிளந் துன்பங்கள்கெது
வெய்திக்கிளை பொருள்நாட்டம்
நீதிமன்னவராற் றெண்டநேரிடும்
பேதமில்லையதென் றுரைபேசிடே

ஆரூடச்சுருக்கம் முற்றிற்று

| | | |
|---|---|---|
| சூரியன் | சந்திரன் | செவ்வாய் |
| புதன் | குரு | சுக்கிரன் |
| சனி | இராகு | கேது |

## ஆருடச் சக்கரம்

அடியிற் கண்டிருக்கும் சக்கரத்திலுள்ள எழுத்தைத் தொட சொல்லி தொட்டதை பதிந்துகொண்டு 9 தள்ளி 10 எழுத்தை விருத்தமாகப் பார்க்க உதிக்குங் கிரக முதல் பிடிக்க கவியாகும் அதில் வரும் பலன் அறிவது

| | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கு | ச | செ | பு | கு | சு | சனி | ரா | கே | ரி | ந | யோ | த | ரு | க |
| ணி | கு | து | ய | தி | னு | வெ | வ | கி | ய | வு | வு | னு | ர | தி |
| யு | ரு | ற | னு | தி | தி | தை | ஞ | க | தை | மா | ஞ | தை | த | த |
| ய | க | க | ய | கி | க | ய | தி | தி | நே | செ | தீ | ம | ற | மி |
| ந | ட | ட | ரு | ந | ய | தி | றி | க | ணி | வா | ச | ஓ | தி | பீ |
| ம | ரு | க | வ | கி | தி | மி | ரு | ணி | கி | நி | சு | ரு | டு | யி |
| ன | வீ | யா | ழ | றை | க | தீ | கி | லீ | ப | டு | வ | வோ | வா | மா |
| மை | றை | ன | டே | சு | கா | டு | கி | ப | து | யு | மு | ச | ந | ய |
| வ | வ | க | ணி | மா | வா | ரு | த | மு | தி | ரு | க | பு | கு | த |
| ளு | ர | ம | சு | சு | மு | ய | ல | வ | ண | மா | வா | க | க | ந |
| ம | மி | மா | டா | டு | டி | ம | மெ | வு | கி | க | ண | ங | வ | போ |
| ன | வி | த | இ | வு | மே | கா | ந | யி | நி | பெ | க | ணி | மே | த |
| ரி | த | டு | தி | ரு | க | ய | தி | மு | ய | து | ம | க | மை | து |
| வை | யே | ம | ந | பொ | ளு | யு | ந | இ | வ் | வ | ன | ன | ன | ரு |
| மா | மா | ன | லை | ரு | ரு | ரை | மை | ளே | மே | மே | மு | யே | மே | மே |

### மேற்கண்ட சக்கரத்துள்ள எழுத்துகள் கூட்டும் விபரம்

சூரியனைத் தொடுவாராகில் அவற்றிற்குரிய சூவன்னுவை முதலாக பதித்துக் கொள்ளவேண்டும் சந்திரனைத் தொடுவாராகில் அவற்றிற்குரிய சனுவை முதலாகப் பதித்துக் கொள்ளவேண்டும், இப்படியே ஒன்பது கிரகங்களுக்கு முறையே முதலெழுத்தைப் பதித்துக் கொண்டு அவ்வெழுத்தைக் கொண்டு எண்ணி ஒன்பதை தள்ளி பத்தாவதெழுத்தைப் பதித்துக்கொண்டே வர செய்யுளாகும் அதைக் கொண்டு பலாபலன் சொல்ல வேண்டும்.

1 சூரியனுதய நேரிலுமிப்பே
சருளுண்டாங் காரியம்நன்றே.

2 சந்திரனுக செந்திருவுண்டு
சுந்தாமாகு வந்ததுநன்மை

3 சேயோநுதிக்க தீயபிணியால்
காயமும்வாடிபோ யிடும்பொருளே

4 புதமவனுலதய பதிமகிழ்வோடு
வதிசுகமான நிதிகளுமாமே]

5 குருவமுமாகிற் றிருநிறைவாகும்
வருசுக்ரமேவிற் பெருமையுமாமே

6 சனியனுடை நனிவருதீமை
துனிபயமாகி இனியவைபிலேயே

7 ராகுவுத்திட லாகிடுநிறைய
மாகுலமினவு மேதியேவருமே

8 கேதுவுதித்திட சாதியிலீனமு
மாதனமேதமு மாவருமே



## கோசாரத்தின் பார்வை காலம்

### விருத்தம்

கோசாரப்பார்வைதந்தி புகர்க்குநாளேழதாகுங்
காசறுசேய்க்கோரெட்டுக் கதிர்க்குநாலைந்தாகும்
மாசில்பொன்னிரண்டு திங்கள்மாகணம்பதிக்குமூன்றும்
விசுதன் மாதமாறும் விரிதிங்கள் மூன்றுகன்னல்

[இ-ள்] சூரியனுக்கு நாள் 5, புதனுக்கும் சுக்கிரனுக்கும் தனித்தனி நாள் 7, செவ்வாய்க்கு நாள் 8, வியாழனுக்கு மாதம் 2. இராகு கேதுவிற்கு தனித்தனி மாதம் 3, சனிக்கு மாதம் 6, சந்திரனுக்கு நாழிகை மூன்றும்

### மகாதிசைக்குப் போதகம் முதலியோர் அறியும்படி

| மகாதிசை | போதகன் | வேதகன் | பாசகன் | காரகன் |
|---|---|---|---|---|
| சூ-திசைக்கு | செவ்வாய் | சந்திரன் | சனி | வியா |
| சந்-திசைக்கு | செவ்வாய் | சூரியன் | சுக்கி | சனி |
| செவ்-திசைக்கு | சந்திரன் | புதன் | சூரி | சனி |
| புத-திசைக்கு | வியாழன் | செவ் | சந்தி | சுக்கிரன் |
| வியா-திசைக்கு | செவ்வாய் | சூரியன் | சனி | சந்திரன் |
| சுக்-திசைக்கு | வியாழன் | சனி | புதன் | சூரியன் |
| சனி-திசைக்கு | சந்திரன் | செவ் | சுக்கி | வியாழன் |
| இரா-திசைக்கு | 0 0 0 | 0 0 0 | 0 0 0 | 0 0 0 |
| கேது-திசைக்கு | 0 0 0 | 0 0 0 | 0 0 0 | 0 0 0 |

### மகாதிசையில் போதகன் முதலியோர் தரும் பலன்

### வெண்பா

கூறும்பலனைக் கொடுவென்பான் போதகனும்
வேறுபண்ணி தட்டிவைப்பான் வேதகனும் தேறுபலன்
கூட்டிவைப்பான் பாசகனுங் கோல மகாதிசைக்கே
நாட்டுபொருள் காரக னீவான்

## நாவி சுத்தி

நாவியை பருத்தியிலை ரசத்தில் ஊறவைத்து முத்திலைக்குள் வைத்துச் சுத்தி கும்பியில் சொருகி ஒரு நாழிகைப் பொறுத்தெடுத்து சீந்தில் கிஷாயத்தில் துவாந்திரங் கட்டி எறிந்து எடுத்து எருமையின் பாலில் சற்று ஊற வைத்து கோமயத்தில் கழுவி எடுத்துக் கொள்ள சுத்தியாகும்,

## நேர்வாள சுத்தி

எருமை சாணத்தில் காடிவிட்டுக் கலந்து அதில் வானத்தைப் போட்டு கொதிக்கவைத்தெடுத்து நஞ்சு தக்கி அதாவது அந்தப் பருப்பை பிளந்து முளை நீக்கி நீரடிமோர் பழரசம் கலந்து அதில் கொதிக்க வைத்து எடுத்துக் கொள்ள சுத்தியாகும்.

## தாளகச் சுத்தி

தாளகத்தைச்சிறு துண்டுகளாக செய்து சிறு மொந்தைக் குடுவையிலிட்டு மேலே மூடும் ஓட்டில் மூன்று துவாரஞ்செய்து கரிநெருப்பின்மீதுவைத்து விசுறுகையில் முதல் கறுப்புப் புகை வந்த பிறகு செகப்புப் புகை வருங் காலத்தில் எடுத்துக்கொள்ளச் சுத்தியாகும்,

## தாளகச் சுத்தி

தாளகத்தைச் சுண்ணாம்புக்குள் வைத்து கழுதை மூத்திரம் விட்டு ஏழுதிரம் தாளித்து எடுத்து கன்னநீர் தயிர் பூசணிக்காய் நீர்காடி அகத்திக்கீரை சார் இவைகளைக் கூட்டி இரண்டு ஜாமம் சுருக்குக் கொடுத்து எடுத்து சத்திச் சாரணைவேர் குக்கில் இதை முருங்கிலை ரசத்தாலரைத்து கவசம் செய்து லகுபுடமிட மிகுந்த சுத்தியாம்' பிறகு சகல அவிழ்தத்திற்கும் உபயோகப் படுத்தலாம்,

பூசனிப்பழம் மேலே கீறி 3 விராகனிடை இந்துப்புப் போட்டு அடியில் எழுத்தாணியால் துவாரஞ்செய்து மேலே தூக்கிக் கட்டி அடியில் பீங்கானை வைத்து இறங்கும் நீரை எடுத்துக்கொள்ளவும்.

## பாஷாண சுத்தி

அறுபத்து நான்கு பாஷாணங்களும் சுத்தி செய்ய வேண்டில் குப்பைமேனி ரசம் கற்றாழை பால் சிறுநீர் பழரசம் செம்பருத்தி ரசம் வெத்திரசம் வகைக்குப்படி (1) மூலைப்பால்படி (வ) இவைகளைப் பாண்டத்திலிட்டு அதில் பாரை யுப்பு வெண்காரம் படிகாரம் நவாச்சாரம் வகைக்குப் பலங்கால் தூள் செய்துக் கலந்து கிளிக்கட்டி யிருட்டு நிழலாகக் காற்றில்லாவிடத்தில் (15) நாள் வைத்து எடுத்துக்கொள்ள சுத்தியாகும்.

## 94 பாஷாணம் ஏக சுத்தி

மேனிரசம் தக்காளிரசம் ஊமத்தன் ரசம் பழரசம் சிறுநீர் காடி சமனுக்கலந்து இதில் உப்பு சுண்ணும்பு வெடியுப்பு நவாசாரம் சீனம் வகைக்குப் பலம் 1 தூள் செய்து கலந்து சரக்குகளை கிளியாய்கட்டி மண்டலமிட்டு எடுத்து உலர்த்திக்கொள்ள மிகுந்த சுத்தியாம்.

## இரும்புச் சுத்தி

இரும்புப் பொடியை ஒருநாள் பழரசத்தில் ஊறவைத்தெடுத்து மறுநாள் எண்ணெயில் ஊறவைத்தெடுத்து அயச்சட்டியில் போட்டு வறுத்து காடியில் கழுவி வேலம் பட்டை கஷாயத்தில் கொதிப்பித்து திரும்பவும் காடியில் கழுவி எடுத்துக்கொள்ள சுத்தியாகும்.

## காந்தச் சுத்தி

பசும்பால் நீர்லு ஊமம் நெய் தேன் இவைகளில் எட்டு நாள் ஊறவைத்து எடுத்துக்கொள்ள சுத்தியாகும்,

## தொட்டிச் சுத்தி

பாலும் முலைப்பாலும் வெள்ளாட்டுப் பாலும் தனித்தனியே பத்து நாழிகை ஊறவைத்து எடுத்துக்கொள்.

## தொட்டிப் பாஷாணச் சுத்தி

துண்டு துண்டாய் நறுக்கி கிளிக்கட்டி நெல்லில் அவித்து எடுத்துக் கொள்ளவும்,

பொன்னிமிளைச் சுத்தி

பொன்னிமிளையை மூணுநாள் காடியில் ஊறியபின் கிருஷ்ணு அபிரேக்கு தூள் ஒருபடி எடுத்து மூன்றுபடி காமயத்தில் வேகவைத்து எடுத்து உலர்த்தி நெல்லு சேர்த்து கிளிக்கட்டி காடியில் தோய்த்து இறங்குத் தூளிவை நீக்கி உலர்த்திக் கொள்ள சுத்தியாகும்.

சகஸ்திர பேதி சுத்தி

நாரத்தங்காய் ரசத்தில் ஊறவைத்து யெடுத்துக் கொள்ளவும்.

செங்கோட்டைச் சுத்தி

நல்ல ஜலத்தில் ஊறவைத்து மறுநாள் மூக்கைவெட்டி நீக்கி எடுத்துக்கொள்ள சுத்தியாகும்.

சிவதை சுத்தி

பசும்பாலில் அவித்தெடுத்து உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

சுக்கு சுத்தி

மேல் தோல் சீவி சுண்ணும்பு பூசி உலர்த்தி எடுத்துக் கொள்ளவும்.

மிளகு சுத்தி

புளித்த மோரில் மூன்று நாள் ஊறவைத்து ஓட்டில் வறுத்தெடுத்துக் கொள்ளவும்,

திப்பிலி சுத்தி

திப்பிலி பழரசத்தில் ஊறவைத்து எடுத்துக் கொள்ளவும்.

ஓமச் சுத்தி

ஓமத்தை சுண்ணும்பு தெளிவு நீரில் ஒரு ஜாமம் ஊறவைத்து உலர்த்தி எடுத்துக்கொள்ள சுத்தியாகும்,

## இரு சீரகச் சுத்தி

சீரகம் கருஞ்சீரகம் இவைகளை சுண்ணாம்புநீரில் ஏழு ஜாமம் ஊறவைத்து உலர்த்தி எடுத்துக்கொள்ளவும்.

## ஊமத்தன் விதை சுத்தி

ஊமத்தன் விதையை ஒரு ஜாமம் ஜலத்தில்ஊரவைத்து எடுத்துக்கொள்ளவும்.

## எட்டிக் கொட்டைச் சுத்தி

எட்டுக்கொட்டையை நெல்லில் அவித்து சிறுகீரை ரசத்தில் ஒரு சாமம் ஊறியபின் தேத்தாங்கொட்டை ரசத்தில் அவித்து எடுத்துக் கொள்ளவும்.

## கொம்பரக்குச் சுத்தி

நல்ல ஜலத்தில் போட்டு அடுப்பேற்றி எறித்தெடுக்கவும் இப்படி மூன்று தரம் எறித்தெடுத்துக்கொள்ளவும்.

## மாசிக்காய் சுத்தி

பசும் நெய்யில் வறுத்து வெடித்து பிறகு எடுத்துக் கொள்ளவும்.

## எண்ணெய் சுத்தி

சகலவித எண்ணெய்களும் நல்ல ஜலத்தில் விட்டு நாலு நாழிகை சென்று எடுத்துக் கொள்ளவும்.

## அமுக்குருவேர் சுத்தி

ஆவின் பாலில் கொஞ்சம் அவித்தெடுத்துக் கொள்ளவும்.

சுத்தி வகைப் பரணி முற்றிற்று

ஃஃஃ

## மாத்திரை வகைப் பாணி பேதிக்கு வாய்வு நிவாரண மாத்திரை

| | | | |
|---|---|---|---|
| சுக்கு பலம் | 1 | தேவதாரம் பலம் | 1 |
| மிளகு பலம் | 1 | வாய்விளங்கம் பலம் | 1 |
| திப்பிலி பலம் | 1 | சுத்திசெய்தவாளம் பலம் | 1 |
| கடுகுரோகணி பலம் | 1 | | |

மேற்கூறிய தினுசுகள் ஏழையும் அளவாக நிறுத்து எடுத்து கலுவத்திலிட்டு இஞ்சி ரசம் விட்டு மைபோல் அறைத்து குன்றுமணிப்பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலத்தி வைத்துக் கொள்ளவும் அதில் தேக வலு வறிந்து இரண்டு மாத்திரை எடுத்து இஞ்சி சாற்றிலாவது பனை வெல்லத்திலாவது சாப்பிட்டு கொஞ்சம் வெந்நீர் அருந்த நன்ருய் பேதியாகும் சகல வாயுவையும் சங்கரிக்கும் மலக்கட்டு வெளியாகும் பத்தியம் மோருஞ் சாதம் அல்லது வெற்றிநீர் சாதம் சாப்பிட வேண்டியது.

## பேதி மாத்திரை

| | | | |
|---|---|---|---|
| மல்லீ பலம் | 1 | கடுகுரோகணி பலம் | 1 |
| வால்விளங்கம் பலம் | 1 | கடுக்காய் பலம் | 1 |

மேற்கூறிய நான்கு சரக்குகளையும் நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு இஞ்சிரசம் விட்டு மைப்போல் அறைத்து பருத்தி விதைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டு மேற்படி சாற்றிலாவது மிளகு கஷாயத்திலாவது ஆள் வலுவறிந்து 2 மாத்திரை கொடுக்க பேதியாகும் சகல வாயுவையுங் கண்டிக்கும் மிளகு நீரும் அன்னமுங் கொள்ளவும் மாலையில் சுக்கு மிளகு கஷாயம் சாப்பிடவும்.

## பேதிக்குப் பூபதி மாத்திரை

| | | | |
|---|---|---|---|
| இரசம் விராகனிடை | 1 | கெந்தகம் விராகனிடை | 1 |
| சுக்கு விராகனிடை | 1 | சுத்திசெய்தவாளம்,, | 1 |
| வெண்காரம் விராகனிடை | 1 | | |

மேற்கூறிய ஐந்து திறுசுகளையும் சுத்திசெய்து கலுவத்திலிட்டு குளிர்ந்த ஜலம் விட்டறைத்து பாசிப் பயர் அளவாக மாத்திரைகள் செய்து வைத்துக்கொண்டு குழந்தைகளுக்கு ஒரு மாத்திரையை தண்ணீரில் இழைத்துக் கொடுக்கப் பேதியாகும் ஊது மாந்தம் பொருமல் வாதம் இவைகள் நீங்கும் பந்தியமில்லை.

### பேதிக்கு சண்பகப்பூ மாத்திரை

| | | | | |
|---|---|---|---|---|
| சண்பகப்பூ | பலம் அரை | கோஷ்டம் | பலம் | அரை |
| ஏலம் | பலம் அரை | கடுகுரோகணி | பலம் | அரை |
| லவங்கம் | பலம் அரை | சுத்திசெய்தவாளம் | ,, | 2 அரை |

இந்த ஆறு சரக்குகளையும் திறுத்தெடுத்து கலுவத்திலிட்டு வெந்நீர் விட்டறைத்து கால்மஞ்சு வீதம்மாத்திரைகள் செய்து வைத்துக் கொண்டு தேனிலாவது சுக்கு கஷாயத்திலாவது ஒரு மாத்திரை யிழைத்துக் கொடுக்க பேதியாகும் பத்தியம் ஆட்டெலும்பு சூப்பு அல்லது மிளகு நீர் சாதம் சாப்பிட வேண்டும் பேதி அதிகம் ஆனால் சாதத்தை வெந்நீர் விட்டுக் கரைத்துக் கொடுக்கப் பேதி நிற்கும்,

### இரவிலுண்ணும் பேதி மாத்திரை

| | | |
|---|---|---|
| வாளம் | பலம் | வ |
| பூரம் | பலம் | வ |
| ரசபஸ்பம் | பலம் | வ |

இந்த இரசபஸ்பம் செய்ய சாத்தியப்படா விட்டால் மருந்துக்கடையில் கால்மல் என்று கேட்டால் கொடுப்பார்கள் அதை வாங்கி வந்து மற்ற திறுசுகளையும் ஒன்றாய்க் கலந்து கலுவத்திலிட்டு ஒருபிடி சாதம் போட்டுஅறைத்து மிளகு பிரமாணம் மாத்திரைகளாக செய்துநிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும் இராத்திரியில் சாதம் சாப்பிட்டு படுக்கிறபோது கொஞ்சம் சாதத்தில் முழு மாத்திரையாக திரேகத்திற்கு திக்கினவாறு ஒன்று அல்லது இரண்டு மாத்திரை வைத்து விழுங்கிடவும் மூன்றுவது ஜாமமுதல் பேதியாகும் தேகத்திற்கு அலப்பிராது காலையில் சூப்பு சாதம் சாப்பிடவும்.

## சவுக்கிய பேதி மாத்திரை

| | | |
|---|---|---|
| நல்ல ஜலத்தில் ஊறின கோதுமை ரவை | பலம் | வ |
| சுத்திசெய்து மூளை நீங்கின வாளம் | பலம் | வ |
| பூரம் | பலம் | வ |
| சுக்குத்தூள் | பலம் | வ |

இவை நாலு சரக்கையும் கலுவத்திலிட்டு இரண்டு பலம் பந்நீர்லிட்டு அறைத்து பயர்போல் மாத்திரைகளாக செய்து நிழலிலுலர்த்திவைத்துக்கொள்ளவும் அனுபானம் குழந்தைகளுக்கு முலைப்பாலில் பெரியவர்களுக்கு சோம்பு திராக்ஷை இந்த கஷாயங்களில் தேக திடந்தெரிந்து இரண்டு அல்லது மூன்று மாத்திரையை கொடுக்கவும் மனக்களிப்புடன் சுகமாய் பேதியாகும்.

## உஷ்ணத்திற்கு சீரக மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நற்சீரகம் | பலம் | வ | மிளகு | பலம் | வ |
| பேரீச்சம்பழம் | பலம் | வ | திப்பிலி | பலம் | வ |
| ஏலம் | பலம் | வ | கோஷ்டம் | பலம் | வ |
| முந்திரிப்பழம் | பலம் | வ | அதிமதுரம் | பலம் | வ |
| செங்கழுநீர் ரசம் | பலம் | வ | சந்தனம் | பலம் | வ |
| சுக்கு | பலம் | வ | கருஞ்சீரகம் | பலம் | வ |
| கஸ்தூரிமஞ்சள் | பலம் | வ | கற்பூரம் | பலம் | வ |

இந்த பதினான்கு சரக்கையும் நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு இளநீர்விட்டறைத்து தூதுவளங்காய்பிரமாணம் மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும் ஒரு மாத்திரை வீதம் முலைப்பாலிலறைத்து ஆறு பொழுது கொடுக்கத் தீரும்.

## சுரத்திற்கு ரசக்கற்பூர மாத்திரை

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த ரசக்கற்பூரம் | பலம் | வ |
| சுத்திசெய்த வாளம் | பலம் | வ |
| அழிஞ்சிவேர் பட்டை | பலம் | வ |
| கொடிவேலிவேர் பட்டை | பலம் | வ |

இவை நாலு சரக்கும் நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு கையாந்த கரைச்சாற்றிலும் முலைப்பாலிலும் வெவ்வேறாக ஒவ்வொரு ஜாமம் அரைத்து துவரைப் பிரமாணம் மாத்திரைகளாகச் செய்து நிழலுலர்த்தி வைத்துக் கொள்ளவும் ஒரு மாத்திரை வீதம் தேனில் இழைத்துக்கொடுக்க சகலவித சுரங்களும் நீங்கும் இச்சாபத்தியம்.

| | |
|---|---|
| சுத்தி செய்த கெந்தகம் | பலம் ௧ |
| மிதிபாகல் இலை | பலம் ௧ |

இவை இரண்டையும் கலுவத்திலிட்டு அறைத்து பாசிப் பயரளவாக மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்திவைத்து கொள்ளவும் அனுபானம் கால்பலம் மிளகை உடைத்துப் போட்டு கஷாயஞ் செய்து அதில் ஒரு மாத்திரையை உறைத்துக் கொடுக்கவும். இம்முறையாக மூன்றுநாள் ஆறு வேளை கொடுக்க குளிர் சுரம் நீங்கும் பத்தியம் வறுத்த உப்பு சுட்ட புளி கூட்டவும்,

## சுரங்களுக்கு லிங்க மாத்திரை

| | | |
|---|---|---|
| லிங்கம் | பலம் | அரை |
| திப்பிலி | பலம் | ௧ |

இவைகளை சுத்தி செய்து கலுவத்திலிட்டு ஆவின்பால் விட்டு அறைத்துப் பாசிப்பயரளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும் சுக்கை தட்டி பொடிபொடியாகப் போட்டு கஷாயம் வைத்து அதில் வேளை ஒன்றுக்கு ஒரு மாத்திரை வீதம் மூன்று நாள் ஆறு வேளை இழைத்துக் கொடுக்க சுரங்கொதிப்பு தீரும் இச்சாபத்தியம்.

## சன்னி 13-க்கும் கவுரி மாத்திரை

| | | | |
|---|---|---|---|
| சுத்திசெய்தகௌரிபலம் | ௧ | வெடியுப்பு பலம் | ௧ |
| சுத்திசெய்தபூரம் பலம் | ௧ | அதிமதுரம் பலம் | ௧ |
| கஞ்சாங்கோரைபலம் | ௧ | அகாரகாரம் பலம் | ௧ |
| கோரைக்கிழங்கு பலம் | ௧ | கர்க்கடகசிங்கி பலம் | ௧ |

இவைகளை நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றில் நாலு ஜாமம் அறைத்து முலைப்பாலில் இரண்டு ஜாமம் அறைத்து உளுந்திடைப் பிரமாணம் மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும் அனுபானம் தேனில் ஒரு மாத்திரை இழைத்துக் கொடுக்க சன்னி 13-ந் தீரும் பத்தியம் வறுத்த உப்பு சுட்டபுளி கூட்டவும்.

## அறிவாநந்த வயிரக மாத்திரை

| | | | |
|---|---|---|---|
| சுத்தி செய்த வெங்காரம் பலம் | வ | கருவங்க பற்பம் பலம் | வ |
| அயப்பற்பம்பலம் | வ | வெள்வங்க பற்பம் பலம் | வ |
| அரிதாரம் பலம் | வ | இரசம் பலம் | வ |
| ஜாதிலிங்கம் பலம் | வ | | |

இவைகளை நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு திரிபலை கஷாயத்தில் ஒரு ஜாமம் அறைத்து உலர்த்தி குப்பியிற் போட்டு தீபம்போல மூணு ஜாமம் எரித்து கலுவத்திற் கொட்டி ஒரு ஜாமம் எலுமிச்சம்பழஞ் சாற்றில்அரைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும் தேனில் ஒரு மாத்திரை வீதம் இழைத்து கொடுக்க சீத ஜன்னி தீரும் பத்தியம் தினிக்கஞ்சி காய்ச்சி கொடுக்கவும்.

## சுரத்திற்கு கோரோசனை மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோரோசனை | பலம் | வ | கிராம்பு | பலம் | வ |
| குங்குமப்பூ | பலம் | வ | கோஷ்டம் | பலம் | வ |
| பச்சைக் கற்பூரம் | பலம் | வ | ஜாதிக்காய் | பலம் | வ |
| ரசச்செந்தூரம் | பலம் | வ | அக்கிராகாரம் | பலம் | வ |
| ஏலம் | பலம் | வ | | | |

இவைகளை நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு சந்தனக் கஷாயத்தில் நாலு ஜாமமும் குங்குமப்பூ கஷாயத்தில் இரண்டு ஜாமமும் சண்பகப்பூ கஷாயத்தில் இரண்டு ஜாமமும் அறைத்து குன்றுமணிப் பிரமாணம் மாத்திரை

களாக செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும் ஒரு மாத்திரை வீதம் முலைப்பாலில்இழைத்து சாப்பிடவுந்தீரும் வியாதிகள் தொண்டைக் கட்டு சிலேத்துமம் சுரம் சன்னி 13-ம் மண்டைக்குத்து சூலை நீர்தோஷம் மயக்கம் சிலேத்துமக் காய்ச்சல் வலிப்பு கழுத்திசுவு இவைகள் நீங்கும் பத்தியம் இச்சாபத்தியம்.

## சன்னிதோஷக் காய்ச்சலுக்குச் சஞ்சீவி மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ரகச்செந்தூரம் | பலம் | வ | ஏலம் | பலம் | வ |
| லிங்கம் | பலம் | வ | சுக்கு | ,, | வ |
| தாரம் | பலம் | வ | மிளகு | ,, | வ |
| வீரம் | பலம் | வ | திப்பிலி | ,, | வ |
| கெந்தி | பலம் | வ | கடுக்காய் | ,, | வ |
| ரசபஸ்யம் | ,, | வ | தான்றிக்காய் | ,, | வ |
| நாவிக்கிழங்கு | ,, | வ | நெல்லிவற்றில் | ,, | வ |
| கிராம்பு | ,, | வ | வாளம் | ,, | வ |
| பத்திரி | ,, | வ | | | |

இவைகளை நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு நிம்பக் காய் சாற்றில் ஒரு ஜாமம்முலைப்பாலில் இரண்டுஜாமமும் குமரி சாற்றில் நாலு ஜாமமும் கொன்றை சாற்றில் நாலு ஜாமமும் அறைத்து குன்றுமணிம் பிரமாணம் மாத்திரை களாக செய்து நிழலிலுர்த்தி வைத்துக் கொள்ளவும் (அனுபானம்)முலைப்பாலிலாவதுதேனிலாவதுதிடமறிந்து ஒன்று அல்லது இரண்டு மாத்திரை வீதங் கொடுக்க சந்நிதோஷக் சாய்ச்சல் நீங்கும். பத்தியம் வறுத்த உப்பு சுட்ட புளியாகும்.

## குழந்தைகள் சுரத்திற்கு ஏலாதி மாத்திரை

| | விராகனிடை | | விராகனிடை |
|---|---|---|---|
| கோரோசனை | ஒண்ணரை | இலுப்பைக்கொட்டை | அரை |
| அதிமதுரம் | அரை | சாஸ்திரபேதி | அரை |
| கோஷ்டம் | அரை | பெருஞ்சீரகம் | அரை |
| இந்துப்பு | அரை | கருஞ்சீரகம் | அரை |

இவைகளை நிறுத்தெடுத்து குமரிச்சாற்றிலும் மூலைப் பாலிலும் மைபோல் அறைத்து துவரைப் பிரமாணம் மாத் திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ள வும் முப்பாலில் ஒரு மாத்திரை இழைத்து கொடுக்க சுரம் நிவர்த்தியாகும்.

## குழந்தைகளுக்கு சகல சுரத்திற்கும் பச்சை கர்ப்பூர மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பச்சை கற்பூரம் | பலம் | வ | சாதிக்காய் | பலம் | வ |
| லவங்கப்பட்டை | பலம் | வ | சுத்திசெய்தவாளம் | ,, | வ |

இவைகளை நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு குமரி சார் விட்டு மைப்போல் அறைத்து உளுந்தளவு மாத்திரை களாக செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும் சர்க்கரையில் ஒரு மாத்திரை கொடுக்க மூன்றே முக்கால் நாழிகைக்குள் பேதியாகி சுரம் நீங்கும் இச்சாபத்தியம்.

## ஜன்னி முதலானதற்கு ஆனந்த வயிரவ மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நாவிக்கிழங்கு | பலம் | வ | கெந்தகம் | பலம் | வ |
| சூதம் | பலம் | வ | ஜாதிலிங்கம் | பலம் | வ |
| மனோசிலை | பலம் | வ | வெங்காரம் | பலம் | வ |

இவைகளை நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு நிம்பப் பழச்சார் விட்டு மைபோல் அறைத்து அறுபயர் அளவாக மாத்திரைகள் செய்நு நிழலில் உலர்த்தி வைத்துக் கொள் ளவும் அனுபானம் சன்னிக்கு முலைப்பாலிலும் குளிர் சுரத்திற்கு இஞ்சி சாற்றிலும் ஒரு மாத்திரை உறைத்துக் கொடுக்கவும் சன்னி முதலானதும் தீரும் இச்சாபத்தியம்.

## ஜன்னி தலைவலிக்கு மாத்திரை

| | | | |
|---|---|---|---|
| நற்சீரசம் பலம் | வ | அதிவிடயம் பலம் | வ |
| கருஞ்சீரகம் பலம் | வ | மஞ்சேசிலை பலம் | வ |
| அசமாதகம் பலம் | வ | பெருங்காயம் பலம் | வ |
| திப்பிலி பலம் | வ | அதிமதுரம் பலம் | வ |
| கிராம்பு பலம் | வ | வாய்விளக்கம்வேர்பலம் | வ |
| விசுவாசி பலம் | வ | சோம்பு பலம் | வ |

இவைகளை நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு கழற்சியிலைச் சார்விட்டு மைபோல் அறைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகளாக செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும். கழச்சியிலை சாற்றில் ஒரு மாத்திரை இழைத்துக் கொடுக்கவும் ஜன்னி தலைவலி தீரும் இச்சாபத்தியம்.

## சூடாமணி மாத்திரை

| | | | |
|---|---|---|---|
| முந்திரப்பழம் பலம் | க | வெட்டிவேர் பலம் | க |
| இலுப்பைப்பூ பலம் | க | பன்னீர்ப்பூ பலம் | க |
| திப்பிலி பழம் | க | தாமரைப்பூ பலம் | க |
| பேரீச்சன் பலம் | க | நன்னாரிவேர் பலம் | க |
| கோஷ்டம் பலம் | க | சந்தனத்தூள் பலம் | க |
| முத்தக்காசு பலம் | க | | |

இவைகளை நிறுத்து உரலிலிட்டு இடித்து கலுவத்திலிட்டு அதில் லிங்கம் பூரம் அரிதாரம் இவை மூன்றும் வகை ஒன்றுக்கு காசு இடை சேர்த்து தண்ணீர் விட்டு கிழங்கின் சார்விட்டு மூன்று நாள் அறைத்து உளுந்துப் பிராணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும் தேனில் ஒரு மாத்திரை இழைத்து கொடுக்க (தீரும் வியாதிகள்) குளிர் சுரம், அசாத்திய சுரம் விரணம் ஊரல் சன்னிதோஷம் சன்னிவாய்வு தலை சுழட்டல் கிருகிருப்பு குத்தல் பித்தம் சன்னிவேர்வை அழலை இதை முதலானதும் நிவர்த்தியாகும் வியாதிக்குத் தக்க அனுபானத்தில் கொடுக்க வேண்டும் பத்தியம் சொல்லவேண்டும்.

## சிலோத்திரி மாத்திரை

| | | |
|---|---|---|
| சுத்திசெய்தவாளம் | பலம் | வ |
| ரசகற்பூரம் | பலம் | வ |
| அழிஞ்சிப்பட்டை | பலம் | வ |

இவைகளை நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு முலைப்பால் விட்டு இரண்டு ஜாமம் மைபோல் அரைத்து துவரைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து வைத்துக் கொள்ளவும். தேனில் ஒரு மாத்திரை விதம் இழைத்துச் கொடுக்க சுரம் நீங்கும் பத்தியம் மிளகு நீர்சாதம் சாப்பிடவும்.

## கணமாந்தம் வயிறு பொருமலுக்கு பாலசஞ்சீவி மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெள்ளைத்துத்தம் | பலம் | வ | வெங்காயம் | பலம் | வ |
| கோரோசனை | பலம் | வ | செழிஞ்சி | பலம் | வ |
| கடுகுரோகணி | பலம் | வ | | | |

இவைகளை நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு அத்தியிலை சார்விட்டு ஒரு ஜாமம் மைபோலரைத்து சிறுபயிர் போல் மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும் வெந்நீரிலாவது முலைப்பாலிலாவது ஒரு மாத்திரை இழைத்துச் கொடுக்கவும் (தீரும் வியாதிகள்) கணமாந்தம் வயிற்றுளைவு பொருமல் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## இராமபாண மூலிகை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | வ | சீரகம் | பலம் | வ |
| மிளகு | ,, | வ | ஓமம் | ,, | வ |
| திப்பிலி | ,, | வ | கற்கடகசிங்கி | ,, | வ |
| ஜாதிக்காய் | ,, | வ | சிறுதேக்கு | ,, | வ |
| கிராம்பு | ,, | வ | மாதுளம்பிஞ்சு | ,, | வ |
| இலவம்பிசினி | ,, | வ | வில்வப்பழச்சதை | ,, | வ |
| விளாம்பிசினி | ,, | வ | பொன்முசுட்டை | ,, | வ |
| வில்வப்பிசினி | ,, | வ | காட்டுமல்லிவேர் | ,, | வ |
| அதிவிடயம் | ,, | வ | காட்டேலம் | ,, | வ |
| சுழுந்சிப்பருப்பு | ,, | வ | | | |

இவைதனை நிறுத்தெடுத்து எள்ளெண்ணெய் விட்டு பதமாக வறுத்து கல்லுவத்திலிட்டு தண்ணீரிலாவது தயிரிலாவது மைபோல் அறைத்து பாக்களவு மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ளவும் அனுபானம் தயிரை வடித்து அதில் ஒரு மாத்திரை இழைத்துக் கொடுக்க [தீரும் வியாதிகள்) காய்ச்சல் கழிச்சல் முதலியவை தீரும் இச்சாபத்தியம்.

## குங்குமப்பூ மாத்திரை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| குங்குமப்பூ | பலம் | அரை | நெல்லிவற்றல் | பலம் | அரை |
| சுக்கு | ,, | ,, | சாதிக்காய் | ,, | ,, |
| மிளகு | ,, | ,, | கிராம்பு | ,, | ,, |
| திப்பிலி | ,, | ,, | ஏலம் | ,, | ,, |
| கடுக்காய் | ,, | ,, | சந்தனம் | ,, | ,, |
| தான்றிக்காய் | ,, | ,, | கடுகுரோகணி | ,, | ,, |

இவைகளை நிறுத்தெடுத்து கல்லுவத்திலிட்டு ஆறு ஜாமம் எலுமிச்சம்பழம் ரசத்திலும் நாலு ஜாமம் இஞ்சி சாற்றிலும் இரண்டு ஜாமம் கண்டங் கத்திரிப்பழச்சாற்றிலும் அறைத்து சிறுபயரளவாக மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும் அனுபானம் தேன் முலைப்பால் இஞ்சிரசம் இவைகளில் ஒரு மாத்திரை வீதம் இழைத்துக்கொடுக்க (தீரும் வியாதிகள்) குளிர் காய்ச்சல் சன்னி காய்ச்சல் முதலியவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## கோரோசனக் குளிகை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோரோசனை | பலம் | வ | அபிரேக்கு செந்தூரம் | பலம் | வ |
| குங்குமப்பூ | ,, | வ | கிராம்பு | ,, | வ |
| பச்சைகற்பூரம் | ,, | வ | கோஷ்டம் | ,, | வ |
| ரசக்கற்பூரம் | ,, | வ | ஜாதிக்காய் | ,, | வ |
| ரசச்செந்தூரம் | ,, | வ | அக்கிராகாரம் | ,, | வ |
| ஏலம் | ,, | வ | | | |

இவைகளை நிறுத்தெடுத்து கல்லுவத்திலிட்டு சந்தனக் கஷாயத்தில் நாலு ஜாமமும் சண்பகப்பூ கஷாயத்தில் இரண்டு ஜாமம் குங்குமப்பூ கஷாயத்தில் இரண்டு ஜமா

மும் அரைத்து குன்றுபணிப்பிரமாணம் மாத்திரைகளாக செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும் ஒரு மாத் திரை அல்லது இரண்டு மாத்திரை வீதம் மூலைப்பாலில் இழைத்துக் கொடுக்க (தீரும் வியாதிகள்) தொண்டைக் கட்டு சிலேத்துமம் 8, சளி 13; மண்டைக்குத்து சூலைநீர் தோஷம் மயக்கம் சிலேத்துமக் காய்ச்சல் உலிப்பு பின் னிசுவு இவைகள் தீரும்,

மாத்திரை வகைப்பரணி முற்றிற்று

ஃஃஃ

கட்டுவகைப் பரணி ஜாதிலிங்கக்கட்டு

ஜாதிலிங்கம் ஒரு பலம் வாங்கி பூவரசன்பட்டை வேப்பம்பட்டை இவை இரண்டையும் நன்ருய் உலர்த்தி குழிப்புடம் செய்து தயிலம் வாங்கி அதில் ஜாதிலிங்கக் கட்டியை வைத்து இரண்டு நாள் வரைக்கும் சுருக்குக் கொடுக்க ஜாதிலிங்கம் கட்டாகும் அதை பிள்ளைகளுக்கு தேனில் உரைத்துக் கொடுக்க சன்னி தோஷம் நீங்கும் பத்தியம் புளி கூடாது,

வேறு வகை லிங்கக்கட்டு

மூன்று கோழி முட்டையின் வெள்ளைக்கருவில் வீரம் பச்சை கற்பூரம் வெடியுப்பு சுன்னம் வகைக்கு விராகனிடை அரை பொடி போட்டு சீசாவிலடைத்து ஆறு நாள் சென்றபின்பு அதில் ஐந்துவீராகனிடை லிங்கத்தை ஐந்து பாகமாக்கி காயப்போட்டு அப்பால தைத் தேய்த்து கருஊமத்தன் இலையை மேலே சுற்றி ஒன்று முதல் 32 புடம் வரையில் புடந்தோறும் ஒவ் வொரு எருவாய் உபரியாக்கி 32 புடம் மணல் மறையில் போட்டிருக்க உருக்கிக் கட்டும் அதை எடுத்து பத்திரப் படுத்தி வைத்துக்கொள்ளவும் (அனுபானம்) தேன் மூலைப் பால் இஞ்சி ரசம் இவைகளில் இழைத்துக் கொடுக்க [தீரும் வியாதிகள்) முயல் கண்டன் குபிர கண்டன் முக்கால் வலிப்பு குதிரை வலிப்பு காக்கை வலிப்பு புற

வீச்சு சன்னி தோஷம் நெஞ்சுக்குத்து வாய்வுக்குத்தி இவைகள் தீரும் பத்தியம் புளி தள்ளவும்.

## வேறு லிங்கக்கட்டு

ஒண்ணரை பலம் லிங்கத்தை கரண்டியில் வைத்து அதன் கீழும் மேலும் இரண்டரை விராகனில் சீனத்தைப் பொடித்துப் போட்டு தீபாக்கினியாய் எரிகையில் லிங்கத்தை ஓயாமல் பிறட்டிக் கொடுத்து பின்பு கால் பலம் கொடிக்கள்ளிப் பாலும் ஆழாக்கு தேனும் சுருக்குக் கொடுத்துஎடுத்து வைத்துக்கொள்ளவும் இஞ்சி சாற்றில் உரைத்து எடுத்து கொடுக்க (தீரும் வியாதிகள்) சுரம் சன்னி தோஷம் வாய்வு புறவீச்சு குன்மம் இவைகள் தீரும் பத்தியம் புளி தள்ளவும்.

## வீரக்கட்டு

ஒரு விராகனிடை வீரத்திற்கு அமுரி பிலச்சார் அரை படி சுருக்குக் கொடுத்து சட்டியை ஒரு கரண்டியில் ஆவின் நெய்விட்டு அதில் வீரக்கட்டுறை யிட்டு காய்ச்சி எடுத்து வைத்துக் கொள்ளவும் அனுபானம் பரங்கிப்பட்டைச் சூரணத்தில் பிசைந்து சுண்டைக்காய் பிரமாணம் உருண்டைசெய்து கருப்புக் கட்டியிற் பொதிந்து மூன்று நாள் ஆறு பொழுது கொடுக்க மேகம் கிரந்தி முதலான மேக ரணங்கள் தீரும். பத்தியம் உப்பு புளி நீக்கவும்.

மேற்கூறியபடி சுருக்குக் கொடுத்துக் கட்டிய வீரத்தினிடைக்கு கெத்தகம் அயம் சமனு யெடுத்து இவை மூன்றையும் கலுவத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றினால் மெழுகு போல் அரைத்து கவசஞ் செய்து காயவைத்து ஒரு சட்டியில் அரை விரக்கடை மணல் போட்டு அதன் போட்டு அதன்மேல் கவசஞ் செய்து வீரத்தை வைத்து மேலும் மறையும்படி மணலைக் கொட்டி இரண்டுஜாமம் கமலாக்கினியாக எரித்து ஆறினபின் எடுத்துக் கொள்ளவும் சகல ரோகங்களுக்கும் தக்க அனுபானங்களில்

கொடுக்கத் தீரும் இச்சாபத்தியம். 10 மாதம் அல்லது ஒரு வருடம் இந்த செந்தூரத்தை உபயோகிக்கலாம்.

## தாளகக் கட்டு

1 பலம் தாளகத்தை நிறுத்தெடுத்து கல் சுண்ணும்பில் வைத்து அமுரிவிட்டு பத்து தபா ஜலம் விட்டுக் கழுவி அயச்சட்டியில் வைத்து ஒருபடிப்பூநீரை நாலுபடி அமுரியில் கரைத்துவைத்து மூன்று நாள் பொறுத்து தெளிவான நீரைபிருத்து அதில் வெங்காரம் காரம் சூடம் வகைக்குப் பலம் 1, முப்பூச்சுன்னம் கழஞ்சு ஒன்று பொடித்துப் போட்டு நாலு ஜாமம் சுடுக்குக் கொடுக்க தாளகம்கட்டும் அனுபானங்களிலிட சேத்மரோகம் 96 சுரம் சன்னி தோஷம் தீரும் இச்சாபத்தியம்.

## வேறு தாளகக் கட்டு

ஐந்து விராகனிடை தாளகக்கட்டியை நிறுத்து எடுத்து சிவகரந்தைசார் கரிப்பான்சார் வகைக்குப்படி அரை இதை மேற்படி கட்டிக்குச் சுருக்குக் கொடுத்து உலர்த்தி அதற்கு வெடியுப்பை அடக்கவறுத்து எலுமிச்சம்பழச் சாற்றில் அரைத்து கட்டிக்கு கவசஞ் செய்து காயவைத்து 7 சீலமண் செய்து 15 விரட்டியில் புடம் போட உருகிக் கட்டும் மேற்கூறியபடி உபயோகித்துக் கொள்ளவும்,

## ரசக்கர்ப்பூர கட்டு

5 விராகனிடை ரசக்கற்பூரத்தை நிறுத்தெடுத்து மூலைப்பால்எலுமிச்சம்பழச்சார் வாழைப்பழச்சார் ஆதளம் பால் இவைகளில் வகைக்கொரு ஜாமம் சுருக்கிட்டு 2 அரை விராகனிடை சாம்பிராணியைப் பொறுத்து வடி கட்டி வீசும்படி தேனிற் கலந்து சுருக்கிட்டு 5 விராகன் இடை சாம்பிராணியை பொடித்து அதற்கு கீழும் மேலும் வைத்துத் தீக்கொளுத்தவும் இந்தபடி பத்து தபா கொளுத்தி ஆறியபின் எடுக்கக் கட்டும் அனுபானம் மூலைப்பால்தேன் இவைகளில்உரைத்து கொடுக்க தீரும். தீரும் வியாதிகள் சன்னி சுரம் நாவரட்சி மலக்கட்டு

இவைகள் தீரும். லிங்கக்கட்டுடன் சேர்த்துக் கொடுக்க வாதநோய் தீரும் இச்சாபத்தியம்.

### வெடியுப்புக் கட்டு

சுத்தி செய்த வெடியுப்பு விராகனிடை இரண்டரை நிறுத்தெடுத்து நுறுக்கிக் கரண்டியிற் போட்டு அதற்கு கீழும்மேலும் வெடியுப்பு சீனம் விராகனிடை இரண்டரை வீதம் பொடிக்கத் தூள்போட்டு உலையில் வைத்து ஊதி உருகினவுடன் எடுத்து ஆரவைத்துக் கொள்ளவும் பண விடை எடுத்து தேனில் குழைத்துக் கொடுக்க வாய்வு வயிற்றுவலி தீரும் இச்சாபத்தியம்.

### லவணக் கட்டு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இந்துப்பு | பலம் | அரை | சவுட்டுப்பு | பலம் | அரை |
| கல்லுப்பு | பலம் | அரை | வளையலுப்பு | பலம் | அரை |
| பாரையுப்பு | பலம் | அரை | வாலலிங்கு | பலம் | அரை |
| பிரண்டை | பலம் | அரை | | | |

இவைகளை நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டு முருங் கைப்பூ எருக்கன்பூ வேலிப்பருத்தி இவைகளின் சாற்றில் வகைக்கொரு ஜாமம் அரைத்து பில்லை செய்து நன்ருய் காயவைத்து முழுப்புடம் போடவலுத்து கட்டி கருத்திருந் தால் மறுபடியும் அந்தச் சாறுகளிலெதிலாவது அரைப் புடம் போட்டு எடுக்க வெள்ளையாகும் பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டு அனுபானம் இரண்டு பணவிடை வீதம் வாய்வு நெஞ்சடைப்புக்கு வெந்நீரிலும் அஸ்தி குன்மத்திற்கு ஆவின் நெய்யிலாவது தேன் சுக்கு கஷாயம் இவைகளிலாவது கொடுக்கத் தீரும் இச்சாபத் தியம்.

### கரியுப்புக் கட்டி

கரியுப்பை தண்ணீரில் கரைத்து தெளிய வைத்து தெளிவை இறுத்து காய்ச்சி எடுத்து மேனிதை வேளை முருங்கை இவைகளின் இலைச்சாற்றை ஓரளவாக விட்டு மெழுகு போலரைத்து காயவைத்து குக்குடமாக மூன்று

புடம் போட்டு வைத்துக்கொள்ளவும். பணவிடை கருப்பு கட்டியில் மத்தித்துக் கொடுக்க சகல வாய்வு தீரும்,

கட்டுவகைப் பரணி முற்றிற்று

ஃஃஃ

## பற்பவகைப் பரணி

### லிங்க பற்பம்

போதுமான லிங்கத்தை எடுத்து வைத்துக்கொண்டு வெள்ளெருக்கன் வேரில்கொஞ்சம் பொட்டிலுப்புபோட்டு இடித்து சார் பிழிந்து அந்த ரசத்தில்பாதிஎடுத்துலிங்கத் திற்குச் சுருக்குக் கொடுத்து மற்றச் சாற்றினால் உப்பை உறைத்து உலர்த்திதூள் செய்துகழுத்து நீண்டகுடுவை யில் அறைக்குடுவை போட்டு அதன் மேல் லிங்கத்தை வைத்து அந்த லிங்கத்தின் மேல் மேற்படி உப்பைப் போட்டு நிறப்பித்து எருவில் புடம் போட்டு உப்புவெந்த வுடன் எடுத்துஆரவைத்துலிங்கத்தை எடுத்துக்கொள்ள வும் இதற்கு அனுபானம் தேன் நெய் வெண்ணெய்இது களில் பணவிடை கொடுக்க வாய்வு இவை யெல்லாம் தீரும். பத்தியம் இறைச்சிபீர்க்கங்காய் ருமுங்கைப் பிஞ்சு துவரை நெய் கூட்டவும் வாய் பிடித்தால் பசும்பால் கொப்பளித்து முழியவும் 3 நாள் அல்லது 5 நாள் சாப்பிடவும்,

### வீர பற்பம்

அரைப்படி நீரை இரண்டுபடி அமுரியில் கலக்கி தெளிய விறுத்து ஒரு பாண்டத்திலிட்டு அதன் வாயில் சீலையால் ஏடு கட்டி அதன்மேல் 2 அரை விராகனிடை வீரக்கட்டியை வைத்து மூடி நீர் வற்றும் வரை எடுக்க பற்பமாகும். அதை கிரந்திசாயகச் சாற்றால் பனிரண்டு சாமம் அறைத்து பில்லை செய்து காயவைத்து மேற்படி பில்லையை அறைத்து குகை செய்து அதற்கு மேற்படி பில்லையை வைத்து மூடி ஒரு சட்டியில்நாலு வீரற்கடை

மணல் போட்டு அதன் மேல் வைத்து 4 சாமம் யெரிக்க செவந்த நிறமான பற்பமாயிருக்கும். அதில் பணவிடை எடுத்து திரிகடிசூரணத்தில் வைத்து தேன் விட்டு மத்தித்து மூன்று வேளை கொடுக்க (தீரும் வியாதிகள்) சன்னி தோஷம் கபக்கட்டு வாய்வு வாதம் முதலானதுந் தீரும். பத்தியம் வறுத்த உப்பு கூட்டவும் புளியாகாது.

தாளக பஸ்பம்

சுத்திசெய்த தாளகம் பலம் 1, நிறுத்தெடுத்து சுருள்ளி சார் சிவகரந்தைச்சார் வகைக்குப்படி ஒன்று சுருக்குக் கொடுத்து சிற்றண்டம் பேறண்டம் இவைகளின்சுன்னத்தை ஓர் நிறையாக எடுத்து எருக்கன் பால்விட்டு அரைத்து சட்டிக்கு கவசஞ்செய்துகாயவைத்து பூவரசன் பட்டை புளியம் பரணை நாயுருவி இவைகளின் சாம்பல் வகைக்குப்படி 2, ஒரு சட்டியில் போட்டு அதற்குநடுவில் வைத்து மேலே மூடி சீலைமண் செய்து 4 ஜாமம் கமலாக்கினியாய் தென்னம் பட்டையால் எரிக்கப் பற்பமாகும் அதில் பணவிடை யெடுத்து தேனில் கொடுக்க க்ஷயம் கபாலசூலை இவைகள் தீரும்பத்தியம் புளிநல்லெண்ணெய் கடுகு இவைகள் ஆகாது.

துருசு பற்பம்

ஒரு பலம் துருசு கட்டியை எடுத்து தும்பை சாற்றில் ஆறு ஜாமம் ஊறவைத்து எடுத்து ரவியில் உலர்த்தி அப்பால் அந்தச் சாற்றால் ஒரு ஜாம மரைத்து பில்லை செய்துகாயவைத்து மேற்படி இலையைஅரைத்து அதற்கு கவசஞ்செய்து ஏழுசீலை மண்செய்து கௌதாரிப் புடம் போட்டு எடுத்து கலுவத்திலிட்டு கருவூமத்தன் சார் விட்டரைத்து பில்லை செய்து உலர்த்தி முன்போல் புடம் போட்டு எடுக்க நீறும் அனுபானங்களிட கெண்டை தோஷம், அஷ்டகுன்மம், பக்கவாயுகட்டி, சுவாசம், இருமல்; இளைப்பு; தாகம், வயிற்றுப் பொருமல், பெருவயது, வீக்கம், காமாலை; பித்தசோகை, பாண்டு. விஷநீர், சோகை முதலானதுந் தீரும் இச்சாபத்தியம்.

## வெள்ளி பற்பம்

வேண்டிய சரிகை வெள்ளியை லேசாகத் தகடு கட்டி பழுக்கக் காய்ச்சி பாகைக் கிழங்கின் சாற்றில் ஏழு தரந் தோய்த்து குகையில்வைத்துஉருக்கி கண்விட்டாடும் போது மகிழம்பூச் சாற்றை சிறுக விட்டு எடுத்து ஊதப் பொடிப்பொடியாட்போகும்அதை மேற்படிசாற்ருல் அரைத்துப் பில்லை தட்டி காயவைத்து முக்காவேளை வேரை மேற்படிசாற்ருல் அரைத்து குகை செய்துவைத்து மூடி ஏழுசீலைமண் செய்து நூறு விரட்டியிற் புடம் போட நீறும், அதை எடுத்துப் பத்திரப்படுத்திக் கொள்ளவும் அதில் பணவிடை திப்பிலி லேகியத்திற் கொள்ள சிலேத்துமம்; 96 சூலை இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## நாகபற்பம்

இலுப்பை நெய்யில் இருபது தரம் உருக்கிச் சாய்த்து சுத்தி செய்த பாகத்தை அரைப்பலம் நிறுத்தெடுத்து குகையில் வைத்து உருக்கிகண்விட்டு ஆடும்போது சிற்ரு மணக்கிலையைக் கசக்கி ஐந்தாறு துளிபிழிய சத்தமிடும் மறுபடியும்ஐந்தாறு துளிபிழிய சத்தமடங்கும் தருத்தியை விசையாய் ஊதிமறுபடியும் ஐந்தாறு துளிபிழிந்துமேற்படி வேரால் கிண்டிப் பார்க்க மரமல்லிகைப்பூ போல் நீறும் அதை பத்திரப்படுத்தி கொள்ளவும். அதற்கு அனுபானம் பாலில் வேகவைத்து உலர்த்திய சுக்கு சூரணத்தில் பனை வெல்லம் சம்மாய் சேர்ந்துபிசைந்த லேகியத்தில் கழற்சிக் காய் பிரமாணம் எடுத்து அதன் நடுவில் மேற்படி பற்பத் தை குன்றியிடை வைத்து மூன்று நாள் கொடுக்க மூலம் சீழ் மூலம் தீரும் இச்சாபத்தியம்.

## வெள்வங்க பற்பம்

சுத்தி செய்த வெள்வங்கம் விராகனிடை ஒண்ணரை வாலைரசம் விராகனிடை ஒண்ணரை, இரண்டையும் ஒன்றாய்த் கொந்தித்து கற்பூர சலாசத்து விராகனிடை அரை கூட்டி தண்ணீர்விட்டு சீலைமண் செய்து 30 விரட்டியிற் புடம் போட்டு மறுபடியும் மேற்படி நீரால்

அரைத்து 3-4 புடம்போட நீறும் அதையெடுத்து பத்திரப் படுத்தவும் இதற்கு அனுபானம் மாதுளம்பூ விதழை நிழலிலுலர்த்தி அதனிடை சீரகஞ்சேர்த்து சூரணித்து திரிகடி பிரமாணத்தில் பணவிடை பற்பம் வைத்து நாள் ஒன்றுக்கும் இருவேளையாக மண்டலங் கொள்ள தீரும் வியாதிகள் நவமூலம் மெய்நோய்மேகம் எலும்புருக்கி இவைகள் தீரும் நாடி வலுத்து தாதுண்டாகும் பத்தியம் கடுகு நல்லெண்ணெய் மீன் கருவாடு பூசினிக்காய் கொள்ளு அகத்திக்கீரை இவைகளாகாது.

## வேறு வெல்வங்க பற்பம்

சுத்திசெய்த வெள்வங்கத்திற்குப் பாதிரசஞ் சேர்த்து உருக்கி கலுவத்திலிட்டு கஞ்சாயிலைச் சாற்றினால் அரைத்து பில்லை செய்து காயவைத்து அதற்கு மேற்படி இலையை அரைத்து ஓட்டிலிட்டு மூடி கவசஞ்செய்து மேற்கூறியபடிபுடம்போட பற்பமாகும் அதைஅனுபானங் களில் சாப்பிட மேற்கூறிய வியாதிகள் தீரும்-

## கருவங்க பற்பம்

கருவங்கத்தைப் பிரண்டைச் சாற்றில் பத்து முறை உருக்கிச் சாய்த்து சுத்தி செய்தது பலம் 1 சட்டியிலிட்டு உருக்கி ஆடு தீண்டாப் பாளைவேரால் கிண்டி நிறுத்து அதற்குப் பாதிரசஞ் சேர்த்து முக்கரைச் சாரணைச்சாரால் நாலு சாமம் அரைத்து மூன்று புடம்போட நீறும் அனு பானம் நெய்யில் பண விடை கொடுக்க வெள்ளை மேக மூத்திரம் முதலியதுந் தீரும் பத்தியம் முன் மாதிரியாக இருக்கலாம்.

## கற்பூர சலாசத்து பற்பம்

சித்திசெய்த கற்பூர சலாசத்து ஒரு பலம் கலுவத்தி லிட்டு சிறுசெருப்படைச் சார்விட்டு சீலைசெய்து 51 விரட்டியிற் புடம் போடவும் இந்தப்படி மூன்று புடம் போட பற்பமாகும் அனுபானம் ஆவின் வெண்ணெயில் கொள்ள மேலெரிவு பித்தவெட்டை நீர்க்கடுப்பு இவைகள் நீங்கும் இச்சாபத்தியம்.

## சீமை கல்நாற்பற்பம்

3 பலம் கல்நார் கொண்டு வந்து துண்டு துண்டாக யிடித்துப் புதுக்குடுவையில் போட்டு எலுமிச்சம்பழச் சார் விட்டு நிழலில் ஊறவைத்து சுண்டின பின்பு இதே மாதிரி ஐந்துதரம் ஊறவைத்துக் கொள்ளவும் நெய் அல்லது வெண்ணெயில் கொடுக்க டல் நோய் மார் நோய் இதுகள் தீரும் சூடு நிவர்த்தியாகும் இச்சாபத்தியம்.

## பவள பற்பம்

ஒரு பலம் பவளத்தை எலுமிச்சம்பழச்சார் விட்டு ஒரு நாள் ரவியில் வைத்து மறுநாள் எடுத்துக்கழுவிப்போட்டு இலந்தையிலை சாராவது கைவேளையிலை சாராவது விட்டு அரைத்து குகைசெய்து அதற்குள் வைத்து மூடி ஏழுசீலை செய்து காயவைத்து 50 விரட்டியில் புடம்போட பர்ப மாகும் அதைப் பீங்கானில்விட்டு ஆவின் பால் விட்டு ரவி யில் வைத்து காய்ந்த பின்பு பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ளவும் அனுபானம் தேன் ஆவின் நெய் இவை களில் கொடுக்க மேக ஊரல் குன்ம வாய்வு இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## ரச பற்டம்

ரசம் 5 விராகனிடை யெடுத்து சிவக்காந்தைச் சார் விட்டரைத்து பில்லை செய்து ரவியிலுலர்த்தி ஓட்டில் வைத்து மேல் ஓடு மூடி மூன்று சீலைமண் செய்து கோழி புடம்போட நீறும் இதைப் பனைவெல்லத்தில் கொடுக்க கிரந்தி மேகம் வெள்ளை தீரும் இச்சாபத்தியம்.

## தங்க பற்பம்

தங்கரேக்கு விராகனிடை 1, சுத்திசெய்த சிற்றண்டு ஒடு விராகனிடை 1, இவ்விரண்டையும் அரைத்து உத்தாமணிப்பால் 5 துளி விட்டுப் பிசரி மூசையிட்டு ஓடு மூடி சீலைசெய்து ஒருகுண்டு சட்டியில்உமிக்கொட்டி

அதன் மத்தியில் வைத்து தீயிட பற்பமாகும் காச ரோக அதிக கொழுமைதனலடைந்த தாது சோர்வுந் தீரும் இச்சாபத்தியம்.

### முத்து பற்பம்

வேண்டுமான முத்தை யெடுத்து சங்கப்பழச் சாற்றில் இரண்டு நாள் ஊறவைத்து எடுத்து கலுவத்திலிட்டு முள்ளிப்பழச்சாற்றில் மெழுகு போல அரைத்து பில்லை செய்து காயவைத்து ஓட்டிலிட்டு சீலைமண் செய்து முப்பது விரட்டியில் புடம்போட பற்பமாகும் இதை தங்க பற்பத்துடன்சேர்த்து சாப்பிட தாது கட்டும் மேகவியாதிகள் தீரும்,

### ஆமையோடு பற்பம்

ஆமையோட்டை நருக்கி பச்சைக் கோரைக் கிழங்கை அறைத்து அதின் மேற்பூசி கவசஞ்செய்து உலர்த்தி 50 பற்பம் விரட்டியில் புடம்போட பற்பமாகும் நெய்யில் கொடுக்க பசி தீபனமுண்டாகும் அஜீரணம் நீங்கும் இச்சாபத்தியம்.

பற்பவகைப் பரணி முற்றிற்று

ஃஃஃ

## செந்தூரவகைப் பரணி

### அயச்செந்தூரம்

வேண்டுமான அரப்பொடியை எடுத்து எலுச்சம்பழ சாற்றில்மூன்றுநாள்ஊறவைத்துபிசைந்து கழுவிபோட்டு அப்பால் காடியில் மூன்று நாள் ஊறவைத்து கழுவி சுத்திசெய்து காட்டா மணக்கன் பாலில் மூன்றுநாள்ஊற வைத்து ரவியிலுலர்த்தி கலுவத்திலிட்டு மேற்படிபாலால் நாலு ஜாமமறைத்து பில்லை தட்டிக் காயவைத்து ஓட்டி விட்டு சீலைமண்செய்துகெஜபுடமும் போடவும்இந்தப்படி மேற்பாவால் 11 கெஜபுடமும் மருதம் பட்டை நாவற் பட்டை கற்ருழைச்சார் மூலம் இவைகளை ஓர் நிரையாக பிடித்து சாருவாங்கி அதில்25 நாள்ஊறவைத்துஅறைத்து

கெஜபுடமும்பொற்றிலைக் கரிப்பானிலையும் சீந்தில்தண்டும் ஓர் நிரையாக இடித்துப் பிழிந்த ரகத்தில் 25 புடமும் போட்டு எடுக்க செந்தூரமாகும்: அனுபானம் வாத தேகிக்கு தேனிலும் அரத்தையிலும் பாலிலும் கொடுக்க சோகை விஷபாக வீக்கம் குடல் வாதம் தேக வெளுப்பு சயனரோகம் 96 தீரும், தேகம் பொன் போலாகும் அதிக பலமுண்டாகும் உதிர்ந்த ரோமங்கள் முளைக்கும் நரை மாறும். மேற்சொல்லியதை திரிகடுகு சூரணத்திற் கொள்ள குன்மம் சத்திகாசந் தீரும் இச்சாபத்தியம்.

## அயக்காந்தச் செந்தூரம்

சுத்தி சென்ம அயக்காந்த செந்தூரம்வகைக்குபலம் 1 ஜாதிலிங்கம் கந்தகம் வகைக்கு பலம் 2,வெங்காரம் ரசம் வகைக்கு பலம் 1 இவைகளை எலிமிச்சம்பழச் சாற்றில் நாலு ஜாமமும் பொற்றலைக்கரிப்பான் சாற்றில் நாலு ஜாமமும் மறைத்து பில்லை செய்து காயவைத்து ஓட்டி லிட்டு சீலைமண் செய்து முப்பது விரட்சியில் புடம்போட செந்தூரமாகும் இதை அனுபானமறிந்துகொள்ளபாண்டு 6; கிராணி 6, பித்தம் 16, வாய்வு வாதம் அக்கினிமந்தந் தீரும்தாது புஷ்டி யுண்டாகும் தேகயெரிவுதீங்கும்தேனிற் கொள்ள பாண்டு சூலை கர்ப்பநோய் வாந்தி பொருகல் உஷ்ணம் வாயூரல் பித்தம் இவைகள் தீரும் இச்சாபத் தியம்,

## கனமண்டூரச் செந்தூரம்

நாள் சென்ற நாலு பலம் மண்டூரத்தை இடித்து அதில் வெள்ளாட்டு நீர் குருணிவிட்டு மூன்று நாள் ஊற வைத்து காய்ச்சி அப்பால் ஆவின் நீரில்பத்து முறையாக காய்ச்சி தேய்த்துக் கழுவிப் போட்டு கலுவத்திலிட்டு கற்றாழைச்சார் விட்டு ஒரு ஜாமமறைத்து பில்லை செய்து காயவைத்து ஓட்டிலிட்டு சீலைமண் செய்து கஜபுடம் போடவும், இந்தப்படி மேற்படி சாற்றில் புடம் 10, நீர்முள்ளி கரிப்பான் விழுதி வேலிப்பருத்தி மாதுளம் பழம் இவைகளின் சாற்றில் வகைக்குப் புடம் பத்துப்

போட்டு எடுக்க செந்தூரமாகும் அனுபானம் கரிப்பான் சாற்றில் பணவிடை கொள்ள (தீரும் வியாதிகள்) பகோதரம் விஷநீர் கோவை பாண்டு சோகை சூலை பெருவயிறு குன்மம் மேக வீக்கம் நீர்க்கடுப்பு வாதம் குடல் வாதந் தீரும் இச்சாபத்தியம்.

## திரிலோகச் செந்தூரம்

சுத்தி செய்த அயக்காந்தம் அபிரேக்கு வகைக்குப் பலம் 1, கந்தகம் பலம் 3, ரசம் பலம் ஒண்ணரை பூநீர் கழுஞ்சு பலம் 2; இவைகளை கலுவத்திலிட்டு பொற்றலைக் கரிப்பான் நாலு ஜாமமறைத்து பில்லை செய்து காயப் போட்டு நூறு விரட்டியில் புடம் போட்டெடுத்து லிங்கம் பலம் அரைகூட்டி கலுவத்திலிட்டு குமரி சாற்றில் நாலு ஜாமமறைத்து பில்லை தட்டி காயவைத்து 30 எருவில் புடம்போட செந்தூரமாகும். அனுபானம் சஞ்சீவிச் சூரணத்தில் பணவிடை வைத்து நெய்யில் மத்தித்துக் கொள்ளத் தீரும் வியாதிகள் மேகநீர் பாண்டு பித்தம் பிர மேகவாய்வு உட்சூடு இருமல் இவைகள் தீரும் தேகங் குளிர்ச்சியாகும் இச்சாபத்தியம்.

## பஞ்சலோகச் செந்தூரம்

தங்கம் வெள்ளி செம்பு காந்தம் இரும்பு இவைகள்ஓர் நிறையாக யெடுத்து சுத்திசெய்து அதற்குஇரட்டிகந்தகம் சூதம் வீரங்கால் கூட்டி முப்பூக்கன்னம் கழுஞ்சு ஒன்று எலுமிச்சம்பழச் சாற்றிலும் கரிசாலை சாற்றிலும் வகைக்கு நாலு ஜாமமறைத்து முழுப்புடத்திற் போட்டு அப்பால்சிறு செறுப்பட்டை சாற்றில்நாலுஜாமமறைத்துமுழுப்புடத்தில் போடச் செந்தூரமாகும் அனுபானம் திரிகடுகு சூரணத்தில் பணவிடை வைத்து தேன் விட்டு மத்தித்து கொடுக்க வாய்வு எண்பதும் பித்தம் மூலம் சிலேத்துமம் இவைகள் தீரும் ஒரு மண்டலம் சாப்பிட வேண்டியது இச்சாபத்தியம்.

## அபிரேக் செத்தூரம்

இரண்டு பலம் அபிரேக்கு நவநீதத்தை யெடுத்து அதற்கு செந்தகம் விராகனிடை அரைவீசம்புடந்தோறுஞ் சேர்த்து சிறுசெருப்படைச்சாற்றில் நாலுஜாமம் அறைத்து ரவியிலுலர்த்தி முப்பது யெருவில் முப்பது புடம்போட செந்தூரமாகும் அதோடு குங்குமப்பூ கோரோஜனைப் பச்சைக் கற்பூரம் நத்தைச்சூரிவிரை கூகை நீர் வகைக்கு விராகனிடை ஒன்றரை இவைகளை செவ்விள நீராலும் கருப்பஞ் சாற்றுலும் மாதுளம்பழச் சாற்றுலும் வகைக்கு ஒருஜ ாமமறைத்து குன்றிபோல் உருண்டை செய்து காலையிலும் மாலையிலும் ஒவ்வொரு உருண்டை வீதம் ஆவின்பாலில் உரைத்து சாப்பிட்டுவர நீரிழிவு பிரமேகந் தீரும் இச்சாபத்தியம்.

வீரிய விர்த்தியும் தேககாந்தியும் உண்டாகும் ஜாதிக் காய் தைலமும் கசகசாத் தைலமும் ஓர் நிறையாக கலந்து கால் விராகனிடை தைலத்தில் செந்தூரம் பணவிடை வைத்து மாலையில் சாப்பிட்டு இரவில் பாலும் அன்னமும் சாப்பிட்டுப் புணர்ந்தால் விந்துவிடாது.

## நாகச் செந்தூரம்

சுத்தி செய்த நாகத்தை குகையிலிட்டு உலையில் வைத்து உருக்கி அதில் ஒரு பலம் மனோசிலையைப் பொடித்துத் தூவி வெண்கொழிஞ்சி வேரால் கிண்ட நீறும் அதை கலுவத்திலிட்டு, சூதம் வீரம் வகைக்குபலம் ஒன்று கூட்டி முலைப்பாலால் நாலு ஜாமமறைத்து பின்பு கெந்தகம் இரட்டிப்பாய் சேர்த்து பொற்றலைக் கரிப்பான் சாற்றுலறைத்து ஆறுதபா கோழிப் புடம்போடச் செந்தூர மாகும். அனுபானம் வெண்ணை தேன் இவைகளில்குன்று மணி இடைக்கொள்ள (தீரும் வியாதிகள்) காசம் வலி குன்மம் எரிகுன்மம் இரவு சூலை கிராணி உள் மூலம்மேக வாதம் பீலிகை காமாலை காசம் இவை தீரும் இச்சாபத் தியம்.

## ஈஸ்வரிச்சிந்தாமணிச் செந்தூரம்

| | | | |
|---|---|---|---|
| சுத்திசெய்தரசம் பலம் | க | கெந்தி பலம் | கவ |
| ஜாதிலிங்கம் பலம் | அரை | மனேசிலை பலம் | அரை |

இவைகளை கலுவத்திலிட்டு பொற்றலைக் கரிப்பான் மாதுளம்பூ சிறு சண்பகப்பூ இவைகளின் சாற்ருல் ஒவ்வொரு நாளாக அரைத்து உலர்த்திப் பொடித்து ஏழுசிலை மண் செய்து குப்பியிலடைத்து பலபப்க்கல்லால் மூடி ஒரு சட்டியில் நாலுவிரக்கட்டை மணல் கொட்டி அடுப்பேற்றி தீபாக்கினியாய் ஒரு ஜாமமும் சமலாக்கினியாய் ஒரு ஜாமமும் கடாக்கினியாக 11 ஜாமமும் எரித்து தீயாற்றி யெடுக்க செந்தூரமாகும். இதற்கு அனுபானம்ஜாதிக்காய் ஜாதிபத்திரி குராசாணி ஓமம் அதிவிடயம் வகைக்குப் பலம் 1, வெதுப்பிப் பொடித்து திரிகடிகை சூரணத்தில் பணவிடை செந்தூரம் வைத்துப் பத்து நாள் கொள்ள கிராணி முதலானதுந் தீரும் இச்சாபத்தியம்.

மருள் கிழங்கு உலர்த்தி இடித்த திரிகடிகைத் தூளில் பணவிடை ஈஸ்வர சிந்தாமணிசெந்தூரம்வைத்துஇருபது நாள் சாப்பிட நலமூலந்தீரும்; பத்தியம் கீரைத் தண்டும் கோழிக்கறியுஞ் சேர்க்கவும்.

பறங்கிப்பட்டைச் சூரணத்தில்செந்தூரம்வைத்துதேன் விட்டு மத்தித்து இருப்பது நாள்கொள்ள விப்புருதிமேகம் மேகரண முதலானதுந் தீரும் இச்சாபத்திபம்.

பிரண்டையில் தயிலமிறக்கி அதில் பணவிடை செந்தூரம் வைத்து இருபது நாள் கொள்ள சசலகுன்மம்சகல வாய்வு தீரும் வெற்றிலை சாற்றில் கொள்ள மாறல் சுரம் அஸ்திசுரம் வில்வாதி லேகியத்திற் கொள்ள ஈளை இருமல் மந்தாரகாசம் உளைமாந்தை சுரமாந்தம் சக்திகுன்மம் வலிகுன்மம் இவை முதலானதுந் தீரும் தாமரைப்பூ சாற்றிலாவது அல்லிப்பூ சாற்றிலாவது செங்கழுநீர்ப்பூச் சாற்றிலாவது ஒரு பணவிடை செந்தூரம் வைத்து இருபதுநாள் கொள்ள உஷ்ணரோகம்சுரந் தீரும்.

சந்திரோதயச் செந்தூரம்

| | விராகனிடை | அரை |
|---|---|---|
| தங்கம் | | 4 |
| வாலைரசம் | ,, | 6 |
| சுத்திசெய்த கெந்தகம் | ,, | |

இவைகளை செம்பரத்தன் பூச்சாற்றில் நாலு ஜாமமும் கற்றாழை வெற்றிலைசாற்றில் எட்டுஜாமமரைத்து நிழலில் உலர்த்தி குப்பியிலிட்டு மணல்மேல் வைத்து தீபாக்கினி கமலாக்கினி காடாக்கினியாய் எகைக்கொரு நான் இராஜாதி விறகால் எறித்து ஆற்றி எடுக்கச் செந்தூர மாகும். அதில் பணவிடை வீதம் அனுபானங்களில் கொள்ள நீரிழிவு க்ஷயமுதலான சகலரோகங்கள் நிவர்த்தி யாகும் இச்சாபத்தியம்.

கரியுப்பு செந்தூரம்

லிங்க செந்தூரம்

வேண்டுமான வரைக்கும் கரியுப்பு எடுத்து எருக்கன் பால் திருகு கள்ளிப்பால் தும்பை சவுரி தும்பை மருதம் பட்டை குமரி எலுமிச்சம்பழம் பொடுதலை இவைகளின் சாற்றில்தனித்தனியாகவிட்டு அரைத்துவகைக்கு இரண்டு புடம்போட செந்தூரமாகும். அதில் உ பணவிடைதேனில் இழைத்துக் கொடுக்க குன்மம் உதிரரோகம் க்ஷயம் சூலை விக்கம் வாய்வு கிராணி முதலியவை தீரும் இச்சாபத்தியம் புடம் கோழிப்புடம்.

சுத்திசெய்த ஒரு பலம் லிங்கத்தை அயச்சட்டியிலிட்டு காலுக்கு கீழுமேலும் ஒரு பலம் செர்திவைய பொடித்துப் போட்டு கால்படி கழுதைப்பாலைச் சிறுகச்சிறுக மெழுகு போலுருகும்படி விட்டுக்கொண்டு நாலு ஜாமம் எறித்து எடுத்து கழுவிப் பொடித்து வைத்துக் கெரண்டு இதற்கு அனுபானம் இஞ்சி சாற்றிலும் திரிகடுகு சூரணத்திலும் கொடுவேலிகஷாயத்திலும் பயரிடைசெந்தூரம் இழைத்து கொடுக்க சன்னி சூலை வாதம் 80 வாய்வுதீரும் பத்தியம் புளி தள்ளவும்.

செந்தூரவகைப் பரணி முற்றிற்று

ஃஃஃ

## எண்ணெய் வகைப்பரணி

### குழந்தைகளுக்கு சுகபேதி எண்ணெய்

| | | |
|---|---|---|
| முருங்கைப்பட்டை சார் | படி | வ |
| ஈக்கரைச்சாரணைவேர் சார் | படி | வ |
| ஈருள்ளிச் சார் | படி | வ |
| விளக்கெண்ணெய் | ஆழாக்கு | வ |

இவைகளை ஒன்ருய் கலந்து ஒரு குண்டு சட்டியில் ஊற்றி அடுப்பேற்றி எரித்துக் காய்ச்சி இறங்கி வடித்துக் கொண்டு உச்சிக் கரண்டி வீதங் கொடுக்க மலபந்தம் கரப்பான் சிரங்கு முதலானதுந் தீரும் இச்சாத்தியம்.

### கணத்தெண்ணெய்

| | | |
|---|---|---|
| முத்துக்கொட்டை எண்ணெய் | படி | க |
| கையாந்தகறைச்சார் | படி | வ |
| குமரிச்சார் | படி | வ |
| உள்ளிச்சார் | படி | வ |
| கோவைச்சார் | படி | வ |
| புளியாரைச்சார் | படி | வ |
| கற்பூரவள்ளிச்சார் | படி | வ |

இந்த ஆறு வகைச்சாற்றையும் எண்ணெயில் விட்டு அதில்

| | | |
|---|---|---|
| ஜாதிக்காய் | பலம் | 2 |
| ஜாபத்திரி | பலம் | 2 |
| மாசிக்காய் | பலம் | 2 |
| கர்க்கடகசிங்கு | பலம் | 2 |
| கோஷ்டம் | பலம் | 2 |
| அக்கிராகாரம் | பலம் | 2 |
| வெந்தயம் | கழஞ்சு | 1 |
| லவங்கப்பத்திரி | கழஞ்சு | 1 |
| லவங்கப்பட்டை | கழஞ்சு | 1 |
| வெள்ளுள்ளி | கழஞ்சு | 1 |

இந்த பத்து சரக்கையும் கலுவத்திவிட்டு ஆவின்பால் விட்டு அறைத்து மேற்படி சாற்றை எண்ணெயில் கலந்து ஒரு படி பால் விட்டு அடுப்பேற்றி மெழுகு பதமாய்க் காய்ச்சி வடித்துக் கொண்டு கோரோஜனை குங்குமப்பூ ஜாதிக்காய் இவை மூன்றும் வகைக்கு கழஞ்சு வீதம் யெடுத்து எண்ணெயில் போட்டு வைத்துக்கொள்ளவும் அதில் கரண்டி வீதம் கொடுக்க தீரும் வியாதிகள் கண வெட்டை கணச்சுரம் மாந்தம் உப்பிசம் இரணம் கர்ப்ப வெட்டை பாண்டு வெளுத்த தேகம் நீர் வடிதல் விடாத சூடு ஊரல் உஷ்ணம் இவைகள் தீரும் இச்சாத்தியம்.

## சர்வரோக சங்கார சித்தாதி எண்ணெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| காயம் | கழஞ்சு | க | கடுக்காய் | கழஞ்சு | க |
| உள்ளி | ,, | க | இந்துப்பு | ,, | க |
| வெங்காரம் | ,, | க | கருஞ்சீரகம் | ,, | க |
| திப்பிலி | ,, | க | வாளம் | ,, | க |
| காட்டெருமைப்பால் | ,, | க | | | |

இவைகளில் சுத்திசெய்வதை சுத்திசெய்து கலுவத்தி லிட்டு உள் சாற்றாலும் கடுக்காய் சாற்றாலும் அறைத்து வைத்துக்கொண்டு சித்தாமணக்கெண்ணை சேர் 1, தேங் காய்ப்பால் சேர் 8, வேலிப் பருத்திச்சார் சேர் 8 இவைக ளோடு பாண்டத்திலிட்டு குழப்பி அடுப்பேற்றி நன்ருய் எரியும்படியான விரகால் எரித்துப் பார்க்க சுத்த ஜலம் போலிருக்கும், அதை மறுபாண்டத்தில் இருத்துகொண்டு பத்திரப்படுத்தவும் பெரியவர்களுக்கு ஒரு கழஞ்சு எண் ணெயும் குழந்தைகளுக்கு அரை கழஞ்சு எண்ணெய் கொடுக்க தீரும் வியாதிகள் மேகம் சொரி சிரங்கு அழலை தாகம் விக்கல் சத்திகுன்மம் மெய்நாற்றம் கிரந்தில் அரை யாப்பு இருமல் பயித்தியம் சூலை புண் கர்ப்பச்சூலை வலி காதடைப்பு வயருளைவகண்ணெரிவு குன்மம் 8-ம்; சூதகத் திஞல் வரும் வெட்டை பவுத்திரரோக முதலானதும் நிவர்த்தியாகும் கடும் பத்தியம் 3 அல்லது 5 நாள் சாப்பிடவும்.

## பிரமதண்டி எண்ணெய்

பிரமதண்டியை சமூலத்தோடு கொண்டுவந்து இடித்து பிழிந்தசார்படி அரை வெந்தயம் சீரகம் அதிமதுரம் வகைக்குப் பலம் இரண்டரை இவைகளை மேற்படி சாற்றில் அறைத்துக் கலக்கி ஆமணக்கெண்ணை 8 அழாக்கு சேர்த்து பாண்டத்திலிட்டு அடுப்பேற்றிதீபம்போலஎரித்து பதமாகக் காய்ச்சி இறக்கி வேருரு பாண்டத்திலாவது பீங்கானிலாவது இருத்து வைத்துகொள்ளவும் அதில் சிறு கரண்டி வீதம் 3 நாள் அல்லது 5 நாள் கொள்ள தீரும் வியாதிகள் கைகால் பிடிப்பு வாதம் மேக வெள்ளை முதலான நாள்பட்ட வியாதிகள் தீரும். பத்தியம் ஆட்டு இறைச்சி துவரை சிறுபயறு உள்ளான் கத்திரிப்பிஞ்சு வெண்டைப்பிஞ்சி மிளகுத்தூள் சுரைக்கீரை பசும்பால் முதலியவைகளாகும் கடுகு நல்லெண்ணெய் பூண்டு தள்ளவும்.

## ஸ்நானஞ் செய்த பிறகு சாப்பிடும் கஷாயம்

மிளகு பலம் 1, சீரகம் பலம் 3. இவை இரண்டையும் தட்டிப்போட்டு ஒருபடி ஜலம் வைத்துகாற்படியாக வத்த காய்ச்சி ஸ்நானஞ்செய்து 5 நாளைக்கு காலையில்ஒருதரம் இந்தக் கஷாயம் குடிக்கவும் வெண்ணை வேண்டுமானல் கூட்டிக் கொள்ளவும்.

## மேக சம்மார கருடன் கிழங்கெண்ணெய்

கருடன் கிழங்கை கொண்டு வந்து மைபோலறைத்து நிழலிலுலர்ந்தபின் 12 பலம் எடுத்து அதனுடன் வாய் விளங்கம் வாலுளுவை சுக்கு திப்பிலி சீரகம் இவைகள் வகைக்குப் பலம் 1, எடுத்து இடிந்து சேர்த்துக்கொண்டு ஒரு பாண்டத்திலிட்டு விளக்கெண்ணை படி அரைசேர்த்து வெங்காயம் இடித்து சார்பிழித்து 12 பலம் சேர்த்து அடுப்பேற்றி மெதுவாக எரித்து அடிபிடிக்கவொட்டாமல் மெழுகு பதமாய் காய்ச்சி இறக்கி வடித்துக்கொள்ளவும் அதில் சிறு கரண்டி வீதம் 3 நாள் 6 நாள் கொடுக்க

தீரும் வியாதிகள்) கிரந்தி குஷ்டம் கருமேகம் வெள்ளை அரையாப்பு மேகரணம் விஷதோஷம் மேகவூரல் வெப்பம் அழுவெட்டு மலச்சிக்கல் இவை முதலானதும் தீரும். பத்தியம் வறுத்த உப்பு சுட்டபுளி.

முதலாவது கருடன் கிழங்கையும் கடை சரக்கையும் கஷாயம் வைத்து காய்ச்சிய பின்பு இருத்து எண்ணெயில் சேர்த்து பதமாக கூட்டுச் செய்யவும் அல்லது ஒன்ருய் கூட்டிக் காய்ச்சி கொள்ளவும்,

சகல கரப்பான் சிரங்குகட்கு மேற்பூசும் எண்ணெய்

| | |
|---|---|
| விடந்திலே | அவுரி |
| இலேக்கள்ளி | பொடுதலே |
| திருகுகள்ளி | நிலக்கடுப்பு |
| சதுரக்கள்ளி | ஆமணக்கு |
| மாவிலங்கு | நொச்சி |
| தாழை | நல்லெண்ணெய் |
| கொமட்டி | |

மேற்கூறியவைகளின் சார் கைக்குப்படி கால் நல்ல எண்ணெய் படி-வ; இவைகளே பாண்டத்தில் ஒன்ருய் சேர்த்து அதில் சீரகம் கடுகு கோரைக்கிழங்குத் திரிக்கம் குக்கில் திரிகடுகு தேவதாரம் கருஞ்சீரகம் வகைக்குப் பலம்-க; விகிதம்-அரைத்துப்போட்டு காய்ச்சி வடித்து உடம்பிற் பூசவும் சகல கரப்பான் சிரங்கு முதலியவை தீரும்.

கரப்பானுக்கு எண்ணெய்

| | |
|---|---|
| செங்கந்தாரி | முதியார்கூந்தல் |
| முடகொத்தான் | கொடிவேலி |
| கருநொச்சி | உத்தாமணி |
| கழற்சி | வெள்ளறுகு |
| சிரந்தி நாயகம் | வெட்பாடம்பட்டை |
| சிறுசெருப்பட்டை | சிவனர்வேம்பு |

| | |
|---|---|
| சிருசின்னி | சிவதை |
| கண்டங்கத்திரி | பூங்கரப்பான்பட்டை |
| சீரகம் | கருஞ்சீரகம் |

இவை வகைக்கு பலங்கால் நிறுத்தெடுத்து சாருள்ள வகைகளில் சாரெடுத்துக்கொண்டு விளக்கெண்ணெய் படி அரை ஒரு பாண்டத்தில் விட்டு மேற்படி மருந்தை அதில் சேர்த்து அடுப்பேற்றி பதமாகக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும் சிருகரண்டி வீதம் உள்ளுக்கு கொடுக்கபுகை கரப்பான் கொள்ளி கரப்பான் வீங்கு கரப்பான் அதி கரப்பான் இவை முதலானதும் தீரும் இச்சாடத்தியம்.

## செங்கந்தாரி எண்ணெய்

| | | | |
|---|---|---|---|
| சிற்ருமணக்கெண்ணெபடி அரை | | கழற்சிவேர் கழஞ்சி | க |
| பூதக்கரப்பான்பட்டைகழஞ்சு | க | செங்கந்தாரிபட்டை ,, | க |
| பெருமரத்துப்பட்டை ,, | க | வெம்பாடன்பட்டை ,, | க |
| நன்ஞரிவேர் ,, | க | கண்டங்கத்திரிவேர் ,, | க |
| கிரந்திநாயகம் ,, | க | வேலிப்பருத்தி ,, | க |
| கடுக்காய் ,, | க | சுக்கு ,, | க |
| திப்பிலி ,, | க | | |

இந்தப் பன்னிரண்டு தினுசுகளையும் அறைத்து எண்ணெயில்கலக்கி அடுப்பேற்றிப் பதமாகக்காய்ச்சி வடித்து வைத்துக்கொண்டு வேளை ஒன்றுச்கு காசு எடை வீதம் கொடுத்துவர தீரும் வியாதிகள் தொண்டைப்புத்துப் நாப் புத்து வாய்ப்புத்து நாக்கு வெடிப்பு உதடு வெடிப்பு நாக்கு கொப்பளம் பல்லீறு சீழ்வடிதல் வாய் நாற்றம் வாய்கிரந்தி முதலானதுந் தீரும் பத்தியம் காரணமான பதார்த்தம் நீக்கிச் சாப்பிடவும்.

## வாய்வு சம்மார எண்ணெய்

| | |
|---|---|
| சொமட்டிக்காய்சார்படி க | சிற்ருமணக்கெண்ணெ படி முக்கால் |
| தேங்காய்ப்பால் படி க | ஈருள்ளுச்சார் படி ,, |

இவை நாலும் ஒன்ருய் சேர்த்து அதில் கடுகுவெள்ளுள்ளி மஞ்சள் லவனம் கடுகுரோகணி மதுரம் திரிகடுகு ஓமம் வாய்விளங்கம் சீரகம் அரத்தை கோஷ்டம்

சிருநாகப்பூ சன்ன லவங்கப்பட்டை வகைக்கு கழஞ்சு 1 நிறுத்து எடுத்துஅறைத்துமேற்படி சாற்றைஎண்ணெயிற் கலந்து ஒரு பாண்டத்தில் ஊத்தி அடுப்பேற்றி எரித்துப் பதமாய் காய்ச்சி வடித்துக் கொள்ளவும். காலையில் ஒரு கரண்டி வீதம் சாப்பிட்டுவர தீரும் வியாதிகள் வாதநீர் சீதக்கட்டு சிருமி பீலிகை இரணக்கோவை உதிரரோகம் பெருவயதுவெட்டைவாய்வு முதலானதுந் தீரும்பத்தியம் வறுத்த உப்பு சுட்டபுளி ஆகும்.

## அண்டவாதத்திற்கு முடக்கத்தான் எண்ணெய்

முடக்கத்தான் சார் கள்ளியை வாட்டிப் பிழிந்த சார் வகைக்குப்படி கால் சிற்றாமணக்கெண்ணெய் படி ஒண் ணரை இவை மூன்றையும் ஒன்ருய் கலந்து அதில்,

| | |
|---|---|
| சிதைவேர் | கொடிவேலிவேர் |
| வெள்ளைக்காக்கணம்வேர் | சிற்றரத்தை |
| சதகுப்பை | தேவதாரம் |
| இந்துப்பு | திப்பிலி |
| பெருங்காயம் | கடுகுரோகணி |
| கழற்சிப்பருப்பு | சுத்திசெய்த நேர்வாளம் |

இவைகளில் வாளம் 20 கொட்டை மற்றவைகள்பலம் 1, வெள்ளுள்ளி பலம் 4, சேர்த்து அறைத்து மேற்படி சாறை எண்ணெயில் கலந்து அடுப்பிலேற்றி பதமாக எரித்துக் காய்ச்சி வடித்து வைத்துக்கொண்டு கரண்டி வீதம் காலையில் சாப்பிட்டுவர தீரும் கடும்பத்தியமாக இருக்கவேண்டும் எண்ணெய் 3 நாள் சாப்பிடவும்.

## அரையாப்புக்கு கொடிவேலி எண்ணெய்

நல்ல எண்ணெய் படி அரை, கொடிவேலி வேர்ப் பட்டை பலம் அரை கருப்புக்கட்டி பலம்-வ; அறைத்துப் போட்டு அடுப்பேற்றி மெழுகு பதத்தில்காய்ச்சிகடுகுடன் வேளை ஒன்றுக்கு ஒரு கரண்டி வீதம் பத்தியமாய் மூன்று நாள் ஆறுபோது சாப்பிட்டு நாலாம் நாள் தலைக்குத்

தண்ணீர் வார்த்து உப்பை வறுத்துக் கூட்ட வேண்டும் அறையாப்பு தீரும்,

## மேகராஜாங்க எண்ணெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சிற்றாமணக்கெண்ணெய் | படி | க | கொடம்பட்டைச்சார் | படி | க |
| ஈருள்ளிச்சார் | ,, | க | கருநொச்சிசார் | ,, | க |
| சமுத்தைலத்திசம் | ,, | க | பொன்னாங்கணிசார் | ,, | ச |
| வரிகோம்பட்ரடிச்சா | ,, | க | நுணாச்சார் | ,, | க |
| கையாந்தகரைச்சார் | ,, | க | ஆடாதோடைச்சார் | ,, | க |
| புளியாரைச்சார் | ,, | க | கிரத்திநாயகச்சார் | ,, | க |
| சங்கஞ்சார் | ,, | க | வெள்ளருகுச்சார் | ,, | க |
| வல்லாரைச்சார் | ,, | க | சிவன்வேம்புச்சார் | ,, | க |
| பொடுதலைச்சார் | ,, | க | | | |

இவைகளை ஒரு பாண்டத்தில் ஒன்றாய் கலந்து அதில் கொடிவேலி பூவரசம்பேட்டை நிலாவிரைவேர் துத்திவேர் கற்றாழைக்கிழங்கு அப்பைக்கிழங்கு சங்கங் குப்பிவேர் வகைக்குப் பலம் அறை நிறுத்தெடுத்து உரலிலிட்டு இடித்து ஒண்ணறை பலம் ஜலத்தில் போட்டு எட்டொன்றாய் வத்தக்காய்ச்சி வடித்து கஷாயத்தைமேற்படி எண்ணெய் சாற்றுடன் கலந்து பின்பு அதில்;

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஜாதிலிங்கம் | விராகனிடை | உ | வாலுளுவையரிசி | விரா. | உ |
| கிராம்பு | ,, | உ | தக்கோலம் | ,, | உ |
| ஏலம் | ,, | உ | குங்குமப்பூ | ,, | உ |
| சன்னலவங்கபட்டை | ,, | உ | சீரகம் | ,, | உ |
| வால்மிளகு | ,, | உ | சாஸ்திரபேதி | ,, | உ |
| அதிமதுரம் | ,, | உ | சத்திச்சாரம் | ,, | உ |
| கோஷ்டம் | ,, | உ | நவாச்சாரம் | ,, | உ |
| திப்பிலிமூலம் | ,, | உ | தான்றிக்காய் | ,, | உ |
| வெங்காரம் | ,, | உ | கடுக்காய் | ,, | உ |
| குராசானிஓமம் | ,, | உ | கருஞ்சீரகம் | ,, | உ |
| தாளிசபத்திரி | ,, | உ | கஸ்தூரிமஞ்சள் | ,, | உ |
| செஞ்சா | ,, | உ | அரத்தை | ,, | உ |
| பறங்கிப்பட்டை | ,, | உ | சுக்கு | ,, | உ |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிவிடையம் | விராகனிடை | 2 | சிறுநாகப்பூ | விரா. | 2 |
| அக்கிராகாரம் | ,, | 2 | வசம்பு | ,, | 2 |
| சடாமாஞ்சில் | ,, | 2 | ஆனைத்திப்பிலி | ,, | 2 |
| கசகசா | ,, | 2 | ஏளம் | ,, | 2 |
| வலம்புரிக்காய் | ,, | 2 | செங்கொட்டை | ,, | 2 |
| அழிஞ்சிற்பட்டை | ,, | 3 | நவாச்சாரம் | ,, | 2 |
| கடுகுரோகணி | ,, | 2 | | | |

இந்த 39 சரக்கையும் நிறுத்தெடுத்து பொடித்திட்டு எண்ணெயைச் சாருடன் கலந்து அடுப்பேற்றி மெழுகு பதமாகக்காய்ச்சி வடித்துக்கொண்டு வேளையொன்றுக்கு கரண்டி வீதம் மூன்று நாள் ஆறு வேளை கொள்ள தீரும் வியாதிகள் கிரந்தி, அரையாப்பு சூலை விப்புருதி, கண்டமாலை மேக உஷ்ணம், சோகை பாண்டு; சுழல்வாதம், பவுத்திரம், மூலைட்புற்று மண்டைச்சூலை சூலைவாயு ரணச்சூலை முதலியவைகள் தீரும், பத்தியம் துவரம் பரும்பும் வருத்த உப்பும் கூட்டிக் கொள்ளவும்; கடும்பத்தியமாக இருக்கவேண்டும்.

### சுத்தவல்லாதி எண்ணெய்

சிற்ருமூட்டிவேர் பலம் 12, நிறுத்தெடுத்து இடித்து ஒரு தூணி நீரில்போட்டு அடுப்பேற்றி நாலிலொன்றாய் வற்றக்காய்ச்சி வடித்து அதில் ஆவின் பால் எலுமிச்சம் ரசம் வகைக்குப்படி அறைவிட்டு பின்பு,

| | |
|---|---|
| எள்ளெண்ணெய் | ஏலம் |
| சித்தாமணக்கெண்ணெய் | லவங்கப்பட்டை |
| இலுப்பை எண்ணெய் | அரத்தை |
| வேப்பெண்ணெய் | சுக்கு |
| புங்கெண்ணெய் | அக்கிராகாரம் |
| கேந்தி | சடாமாஞ்சில் |
| அதிமதுரம் | தாளிசப்பத்திரி |
| கோஷ்டம் | வாய்விளங்கம் |
| ஜாதிக்காய் | ஆனைத்திப்பிலி |
| ஜாபத்திரி | கடுகுரோகணி |

| | |
|---|---|
| வால்மிளகு | ஓமம் |
| குங்குமப்பூ | கருஞ்சீரகம் |
| கடுக்காய் | தான்றிக்காய் |
| சண்பகப்பூ | கொத்தமல்லி |
| வாலுளுவையரிசி | காகப்பூ |
| செவியம் | |

இந்த 25 சரக்கையும் வகைக்குக் கழஞ்சு 2 வீதம் நிறுத்தெடுத்து பொடித்துப் போட்டு அடுப்பேற்றிஎறித்து மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்து அதில் புனுகுகஸ்தூரி வகைக்குக் கழஞ்சு அரை போட்டு வைத்துக் கொண்டு மூன்று நாள் ஆறு வேளை காசிடை உள்ளுக்கு கொடுத்து ஒரு துளி நாசியில் உடம்பிற் பூசிவர தீரும் வியாதிகள் முகவாதம் அண்டவாதம் நீலகாசம் பீனிசம் வாய்வுசூலை சொரி முதலானதுந் தீரும்பத்தியம் பச்சைப்பயறும்உப்பும் கூட்டவும் நாலா நாள் சீயக்கா தேய்த்து ஸ்நானஞ் செய்யவும் அன்று பகல் நித்திரை நீக்கவும்.

## நீரடைப்புக்கு எண்ணெய்

விளக்கெண்ணெய் படி காலில் சுருள்ளி பலம் 1; சிதைத்துப் போட்டு பொன்னிறமாய்க் காய்ச்சி கழஞ்சு பொறித்த வெங்காரம் கடுக்காய்த் தூள் வகைக்கு கழஞ்சு 1; போட்டு கலக்கிக் கொடுக்க துன்மாங்கிஷம் நீரடைப்பு முதலானதுந் தீரும் இச்சாபத்தியம்-

## கணதோஷத்திற்கு ஜாதிக்காய் எண்ணெய்

நல்லெண்ணெய் படி அரை: முலைப்பால் படி வீதம் ஆவின்பால் படி அரைக்கால் இவைகளை ஒன்ருய்கலந்து ஜாதிக்காய் பலம் 1 ஜாபத்திரி வெந்தயம் வகைக்கு பலம் அரை இவைகளை கலுவத்திலிட்டு குமரிசாற்ருல்அறைத்து எண்ணெயிற் கரைத்து அடுப்பேற்றி பதமாகக் காய்ச்சி வடித்துக்கொண்டு குளிர்ந்த தண்ணீரிலாவது சுடுதண் ணீரிலாவது முலைப்பாலிலாவது ஒரு துளி இரண்டு துளி விட்டு கொடுக்க தீரும் வியாதிகள் கணதோஷம்

இரத்தவாந்தி இரத்தகாசம் வாந்தி இருமல் கக்குவாய் சீத பேதி இரத்தபேதி முதலானதுந் தீரும் இச்சாபத்தியம்.

ஃஃஃ

## தைலவகைப் பரணி

### சந்தனாதித் தைலம்

சந்தனத்தூள் பலம் 10, விலாமிச்சம்வேர் வெட்டிவேர் கோரைக்கிழங்கு சிந்திற்றண்டு சிற்றுமுட்டி பேருமுட்டி அமுக்குரு நன்னாரிவேர் பற்பாடகம் வகைக்குப் பலம் 2, இவைகளை இடித்து ஒரு தூணி நீரில் போர் போட்டு பதி னாரில் ஒன்ருய் வற்றக்காய்ச்சி வடித்து கஷாயத்தில்செவ் விளநீர் பொன்னாங்கணி வகைக்குச்சார் படி 1, சிறுகீரை பொடுதலை வல்லாரை பொற்றலைக் கரிப்பான் சிறுசின்னி நெல்லிக்காய் கர்ப்பூரவல்லிதாழையிதழ் இவைகளின்சார் ஆவின் நெய் வகைக்குப்படி அரை நல்லெண்ணெய் படி ஒண்ணறை, ஆவின்பால் படி 2, வெள்ளாட்டுப் பால் தயிர் தண்ணீர் வகைக்குப் படி 1, கூட விட்டுதிரிபலாதி கஸ்தூரிமஞ்சள் ஏலம் பூஞ்சாந்துப்பட்டை கிளியூரம் பட்டை லவங்கப்பட்டை லவங்கப்பத்திரி பச்சை பூலாக் கிழங்கு அல்லிக்கொடி சண்பகப்பூ சந்தனம் கருஞ்சீரகம் செங்கழுநீர்க்கிழங்கு கோஷ்டம் அக்கிரகாரம் மந்திஷ்டி வேர் கஸ்தூரிமஞ்சள் முத்தக்காசு வலம்புரிக்காய் வகைச் குப் பலம்கால் நிறுத்தெடுத்துகலுவத்திலிட்டுஆவின்பால் விட்டு அரைத்து சேர்த்து அடுப்பேற்றி தைலம் பதமாம் காய்ச்சிவடித்துக்கொண்டுஅதில்குங்குமப்பூகோரோசனை புனுகு வகைக்குக் கழஞ்சு அரை பொடித்துப் போட்டு வாரத்திற் கிரண்டு முறை ஸ்நானஞ் செய்துவர தீரும் வியாதிகள்மேகம் நீரிழிவு நீரெறிப்பு க்ஷயம் கண்ணெரிவு கண் புகைச்சல் கரிலெரிவு பிரமியம் கிரந்தி கற்ருழை

நாற்றம் அஸ்திசுரம் அஸ்திவெட்டை பித்த மயக்கர் புண் புரை புழுவெட்டு கண்டமாலை குஷ்டம் சொரிசிரங்கு முதலானதுந் தீரும் ஸ்நானஞ்செய்த பின்னுல் போகம் பகல் நித்திரை நீக்கவும்.

## நீர் தோஷத்திற்கு அகில் கட்டைத்தைலம்

அகில்கட்டைத்தூள் பலம் 12, அறைஎடுத்துஒண்ணைறைபடி நீரில்போட்டு எட்டிலொன்ருய் வற்றக் காய்ச்சி வடித்து அதில் நல்லெண்ணெய்படி கால்கூடவிட்டுஅதிமதுரம் தான்றிக்காய் வகைக்கு பலம் கால்எடுத்துஆவின் பால் விட்டு அரைத்துப் போட்டு அடுப்பேற்றிக் காய்ச்சி வடித்து ஸ்நானஞ்செய்துவர நீர்தோஷம் மேகம் முதலானதுந் தீரும்.

## மண்டைச்சூலைக்கு வெட்டிவேர் தைலம்

வெட்டிவேர் தூள் பலம் 5, 2 படி நீரில்போட்டு ஒரு நாள் முழுதும்ஊறவைத்து மறுநாள்அடுப்பேற்றி காய்ச்சி எட்டிலொன்ருய் வற்றியபின் வடித்த கஷாயத்தில் நல்ல எண்ணெய்படி 2, விட்டு அதிமதுரம் கருஞ்சீரகம் தேவ தாரம் கடுக்காய் வகைக்கு பலம் கால் எடுத்து அறைத்து போட்டு அடுப்பேற்றிக் காய்ச்சி முழுகிவர பீனிசம் மண்டைச்சூலை குஷ்டம் பிரநீர்க்கோர்வை கண்புகைச்சல் காதுமந்தம் தேகயெரிவு காந்தல் முதலானதுந் தீரும்.

## அறுகம்வேர் தைலம்

அறுகம்வேர் பலம் 5 நிறுத்தெடுத்து இடித்து 2 படி தண்ணீரில்போட்டு எட்டிலொன்ருய் வத்தக் காய்ச்சி வடித்த கஷாயத்தில் நல்லெண்ணெய் படி கால் விட்டு கோரைக்கிழங்குபூமிசர்க்கரைகிழங்கு அமுக்கிறுங்கிழங்கு வகை பலம் அரை ஆவின் பால் அறைத்துப் போட்டு அடுப்பேற்றி தைலம் பதபாககாய்ச்சி வடித்து ஸ்நானஞ் செய்துவர (தீரும் வியாதிகள்) மூலச்சூடு மேக காங்கை

பித்தவாதம் அரிகிரந்தி சூலை வயறெரிவு நெஞ்சு நோய் தேகவறட்சி நீர்க்கடுப்பு முதலானதுந் தீரும் தேகம் குளிரும்.

## வில்வாதி தைலம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வில்வவேர் | பலம் | 4 | விலாமிச்சவேர் | பலம் | 4 |
| கோரைக்கிழங்கு | பலம் | 4 | வாழைக்கிழங்கு | பலம் | 4 |
| சீந்தில் | பலம் | 4 | | | |

இவைகளை இடித்து 8 படி தண்ணீரில் போட்டு ஒரு படியாய் வற்றக் காய்ச்சிய கஷாயத்தில் கொம்பரங்குசேர் ஒன்ருய் கஷாயஞ் செய்து கொண்டு நல்லெண்ணெய் படி இரண்டரை சேர்த்து அதில்,

| | |
|---|---|
| திரிகடுகு | மஞ்சள் |
| திரிபலாதி | சந்தனம் |
| கஸ்தூரி | கிளியூரம்பட்டை |
| மதுரம் | பூஞ்சாந்துப்பட்டை |
| கோஷ்டம் | செவ்வள்ளி |
| கருஞ்சீரகம் | லவங்கப்பட்டை |
| பச்சைபூலாச்கிழங்கு | ஏலம் |

வகைக்குப் பலம் அரை எடுத்து ஆவின்பால் விட்டு அறைத்து மேற்படி கஷாயத்தில் கரைத்து அடுப்பேற்றி மெழுகு பதமாக காய்ச்சி வைத்துக் கொண்டு ஸ்நானஞ் செய்துவர மேகநீர் இருபதும் பித்தம் நாற்பதும் குன்மம் எட்டும் சிரசு நோயும் தீரும், ஸ்நானஞ் செய்யும் நாள் பகல் நித்திரை செய்யக் கூடாது.

## கொம்பரக்கு தைலம்

கொம்பரக்கு பலம் நிறுத்தெடுத்து ஒரு தூணி நீரில் போட்டு எட்டி ளொன்ருக வற்றக்காய்ச்சி வடித்த கஷாயத்துடன் நல்லெண்ணெய் படி 5, காடி படி 2, தயிர் படி 1, தண்ணீர் படி 1, பசும்பால் படி 5 இவை களை ஒன்ருய் சேர்த்து அதில்,

சதகுப்பை
கடுகுரோகணி
கினியூரம்பட்டை
பூஞ்சாந்துப்பட்டை
பச்சபூலாக்கிழங்கு
கஸ்தூரிமஞ்சள்
கந்தகம்
ஏலம்
செவ்வல்லிக்கிழங்கு
லவங்கப்பத்திரி
லவங்கப்பட்டை
சடாமாஞ்சில்
கேரஷ்டம்
அதிமதுரம்
கருஞ்சீரகம்

வகைக்கு கழஞ்சு இரண்டு நிறுத்தெடுத்து ஆவின் பால் விட்டு அறைத்து எண்ணெயுடன் சேர்த்து அடுப் பேற்றி காய்ச்சி மெழுகு பதத்தில் வடித்துக் கொண்டு ஒன்று விட்டொரு நாள் ஸ்நானஞ் செய்துவர (தீரும் வியாதிகள்) பித்த வெட்டை அஸ்திசுரம் தலை மயக்கம் வாயூரல் சீதசுரம் வெட்டை பாண்டு தேகவெளுப்புசூலை கற்ருழை நாற்றம் முதலானதுந் தீரும் பகல் நித்திரை நீக்கவும்,

## கரிப்பான் தைலம்

கரிப்பான் சார் நல்லெண்ணெய் வகைக்குபடி அரைக் கால் கஸ்தூரிமஞ்சள் ஜாதிக்காய் வகைக்குப்பலம் அரை இவைகளை ஆவின்பால் விட்டு அறைத்துசேர்த்து அடுப் பேற்றி காய்ச்சி வடித்து மூழுகிவர கண் நோய் தலை நோய் பித்தம் இவைகள் தீரும்.

## கீழ்க்காய் நெல்லி தைலம்

கீழ்க்காய் நெல்லி சமூலம் துலாம் கால் இடித்துஒரு தூணிநீரில் போட்டு எட்டுலொன்ருய் கஷாயஞ்செய்து எள்ளெண்ணெய் ஆவின்பால் வகைக்குப்படி உசேர்த்து சீரகம் பலம் அரை அறைத்துப் போட்டு அடுப்பேற்றி தைலம் பதமாகக்காய்ச்சி வடித்து ஸ்நானஞ் செய்துவர (தீரும் வியாதிகள்)பித்தவெட்டை மஞ்சள்காமாலைவாந்தி தலைமயக்கம் வாயூரல் உட்சுரம் ஒடுக்கம் முதலானதுந் ரும்,

## சிறுசந்தனாதித் தைலம்

சந்தனம் விலாமிச்வேர் ஆவாரம்பட்டை வகைக்குப் பலம் 5, இடித்து தூணி நீரில் போட்டு எட்டிலொன்ருய் காய்ச்சி வடித்து கஷாயத்தில் நல்லெண்ணெய் படி 1, விட்டு அதில் நன்ஞரிவேர், பட்டை பலம் 9, அறைத்து போட்டு அடுப்பேற்றி தைல பதமாகக் காய்ச்சி வடித்து ஸ்நானஞ்செய்துவர மேகந்தீரும் தேகம் இருகும்.

## இருவேலித் தைலம்

விலாமிச்சம் வேர் பலம் 5 எடுத்து தூணி நீரில்போட்டு ஒருநாள் ஊறவைத்து மறுநாள் எட்டிலொன்ருய் வற்றக் காய்ச்சி வடித்த கஷாயத்தில் நல்லெண்ணெய் படி 1 விட்டு அதில் எலுமிச்சம்பழச்சார் கையாந்த கரைச்சார் வகைக்குப்படி பால் விட்டு காய்ச்சி வடித்து ஸ்நானஞ் செய்துவர உஷ்ணம் சிலேத்துமம் பித்தம் கண் புகைச்சல் இவைகள் நீங்கும் தேகங் குளிரும்.

தைலவகைப்பரணி முற்றிற்று

ஃஃஃ

## மெழுகு வகைப்பரணி

### லிங்க மெழுகு

குமரிச்சாற்றில் கடுக்காய் தூளைப் போட்டு பிசைந்து வைத்து அதில் வரும் நீரை ஒரு பாண்டத்திலிட்டு 5 விராகனிடை லிங்கக்கட்டியை அதில் போட்டு அடுப் பேற்றி ஒரு ஜாமம் கருக்கு கொடுந்து சீனுகாரம் துருசு வெங்காரம் பூநீர் வகைக்கு விராகனிடை இரண்டரை கலுவத்திலிட்டுஎருக்கம்பால்விட்டுமெழுகு போலறைத்து மூன்று பங்கிட்டு ஒரு பங்கை சுருக்குக் கொடுத்த லிங்கக் கட்டிக்குப் பூசி காயவைத்து நன்ருய்க் காய்ந்த பின்பு மற்றிரண்டு பங்கையும் முன்போல் பூசிக் காயவைத்து

குக்குடம் புடம் போட்டு ஆறியபின் எடுத்து கரண்டியில் வைத்து கொடிக்கள்ளிச் சாற்றால் ஒரு ஜாமம் சுருக்குக் கொடுத்து கட்டியை ஊசியினுல் குத்தினுல் இறங்கும் அந்த பதத்தில் கலுவத்திலிட்டு அறைக்க மெழுகாகும் அதை எடுத்து வைத்துக் கொண்டு அதில் பணவிடை வீதம் அனுபானங்களில் சாப்பிடத் (தீரும் வியாதிகள்) கிரந்தி குஷ்டம் கரப்பான் காசம் கன்னிசுரம் சூலை நீரோடுதல் புணபேதி வாதம் ரண முதலானதுந் தீரும் பத்தியம் புளி தள்ளவும்,

## வீரமெழுகு

பரங்கிப்பட்டை கொடிவேலிவேர் சிவன்வேம்பு சமூலம் செங்கொட்டை இவைகள் வகைக்கு பலம் எடுத்துசுருக்கி குழித்தைலமிரக்கி சுத்திசெய்த சவ்வீரம் லிங்கம் ரச கற்பூரம் வகைக்கு விராகனிடை 3 ரசம் அரிதாரம் துருசு, பற்பம் இந்துப்புவகைக்கு விராகனிடை 1 இவைகளை மை போல் பொடித்து கரண்டியில் போட்டு காற்படி தைலம் விட்டு ஓயாமல் கிண்டிக்கொடுத்து தைலம் வற்றினபின்பு தேன்படி அரைக்கால் விட்டு கிண்டி மெழுகு பதத்தில் கலுவத்திலிட்டு அதில்,

| | |
|---|---|
| ஜாதிக்காய் | அக்கிரகாரம் |
| கார்போகவரிசி | சன்னிநாயகம் |
| திரிகடுகு | திப்பிலிமூலம் |
| கோஷ்டம் | ஓமம் |
| அரந்தை | திப்பிலி |
| தேசாவரம் | கொடிவேலிவேர்ப்பட்டை |

இவைகளை வகைக்கு விராகனிடை 1 எடுத்துப் பொடித்து வஸ்திரகாயஞ் செய்து சேர்த்து தேன் விட்டு இரண்டு ஜாமம் மெழுகு போலறைத்து தந்த சிமிளியில் வைத்துக் கொண்டு அனுபானம் கருப்பங்கட்டியில் சுண்டக்காய் பிரமாணம் பொதிந்து காலையில் ஏழு நாள் கொடுக்க (தீரும் வியாதிகள்) நெஞ்சடைப்பு மார்புக் குத்து விருபருதி வலிப்புகள் வயிற்றுவலி முகவாத

ஜன்னி சூலை 18, கரப்பான் உதிரத்திரட்சி லேசக்கட்டி குதக வாய்வு பந்தாரகாசம் சன்னிதோஷம் கை காலில் விழும் கறுப்பு வெள்ளை சொறி சிரங்கு படர்தாமரை குஷ்டம் மேகரணம் கிரந்தி அரையாப்பு மேகப்புற்று துன் மாங்கிசம் அடைட்பு இவைகள் தீரும் பத்தியம் புளி நகை தள்ளவும். கொஞ்சம் இருமல் வரும். பல் கிட்டும்.

ரசமெழுகு

கந்தகம் விராகனிடை 15; ஆவின் வெண்ணெய் பலம் 2; சேர்த்து தீக்கொளுத்தி சுடர்த்தைலம் இறக்கிக் கலுவத்திலிட்டு ரசம் விராகனிடை 4, சேர்த்து மெழுகு போலரைத்து வைத்துக்கொண்டு ஒரு பணவிடை வீதம் காலையில் சாப்பிட வாதசூலை தீரும்.

லிங்கசர கற்பூரமெழுகு

| | | |
|---|---|---|
| இரச கற்பூரம் | விராகனிடை | க |
| லிங்கம் | விராகனிடை | க |

இவை இரண்டையும் கலுவத்திலிட்டு மூலைப்பால் எலுமிச்சம்பழச்சார் தேன் இவைகளை விட்டு வகைக்கொரு ஜாமம் அறைத்து கரண்டியில் வழித்துப்போட்டு மேற்படி சாற்றை கொஞ்சம் விட்டு தீபம்போல் எரிக்கஉருகி மெழுகாகும். அதில் ஒரு பணவிடை வீதம் கருப்புக்கட்டியில் வைத்துச் சாப்பிட்டுவர வயிற்றுவலி குதகத்திரட்சி முதலியவை தீரும். திரிகடுகு பொடியில் கொடுக்க வாய்வுதீரும் சங்கங்குப்பு சாற்றில் கொடுக்க கிரந்தி அரையாப்பு பவுத்திரம் தீரும் சிறு செருபடைச்சாற்றில் கொடுக்க சிரங்கு சொறி தீரும் இச்சாபத்தியம்.

மெழுகு வகைப்பரணி முற்றிற்று

ஃஃஃ

## நெய் வகைப்பரணி

### கண் குளிர்ச்சிக்குப் பொன்னாங்கணி நெய்

| | | |
|---|---|---|
| பொன்னாங்கணிச்சார் | படி | அரை |
| பொற்றிலை கரிப்பான்சார் | படி | அரை |
| ஆவின் நெய் | படி | அரை |

இவைகளை ஒரு பாண்டத்திலிட்டு கலந்து அதில் எலுமிச்சம்பழச்சார் விட்டு அதிமதுரம் பலம் 1, எடுத்து ஆவின்பால் விட்டு அரைத்து சேர்த்து அடுப்பேற்றி காய்ச்சி வடித்து கற்கண்டு கோரோசனை ஜாதிக்காய் ஜாதிபத்ரி வகைக்கு கழஞ்சு அரை பொடித்துப் போட்டு காலையில் ஒரு கரண்டி வீதம் 8 நாள் அல்லது 5 நாள் சாப்பிட்டுவர மூலச்சூடு உஷ்ணம் மேகம் காங்கை கை கால் எரிவு வாய்நாற்றம் பிரமியம் முதலானதுந் தீரும் கண் குளிர்ச்சி உண்டாம்.

### இருமலுக்கு வல்லாரை நெய்

| | | | |
|---|---|---|---|
| வல்லாரைச்சார் | அதிமதுரம் | விரா. | முக்கால் |
| ஆவின்பால் | கோஷ்டம் | ,, | ,, |
| இளநீர் | செங்கழுநீர்கிழங்கு | ,, | ,, |
| ஆவின் நெய் | பச்சை கற்பூரம் | ,, | ,, |
| சீரா | கோரோசனை | ,, | ,, |
| செங்கழணிச்சார் | | | |

இவைகளை ஆவின்பாலால் அரைத்து அடுப்பேற்றி மூன்று நாள் சிறுதீயாக எரித்து நாலாம் நாள் சாயரக்ஷை வடித்து வைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு ஒரு கரண்டி வீதங்கொள்ள இருமல் தொண்டை கம்மல் விஷக்கடி நாவரட்சி முதலானதுந் தீரும் இச்சாபத்தியம்.

### நீர்கட்டிக்கு அருகன்வேர் நெய்

அருகன்வேர்சார் படி 1, ஆவின் நெய் படி-வ ஒன்றாய் கலந்து அதில்,

| | | | |
|---|---|---|---|
| அதிமதுரம் விராகனிடை | வ | வில்வவேல் விரா. | வ |
| சீரகம் ,, | வ | ஏலம் | ,, அரைக்கால் |
| ஜாதிபத்திரி ,, | வ | கிராம்பு | ,, ,, |
| விளாமிச்சம்வேர் ,, | வ | மிளகு | ,, ,, |
| சிற்றாமுட்டிவேர் ,, | வ | கோஷ்டம் | ,, ,, |

இவைகளை மைபோலரைத்துப் போட்டு அட்டபேற்றி காய்ச்சி வடித்து வேளை ஒன்றுக்கு ஒரு கரண்டி வீதம் சாப்பிட உடம்பெரிவு பிரமியம் இரத்தபித்தம் நீர்கட்டுக் தாகம் இவை தீரும் இச்சாபத்தியம்.

## கணத்திற்கு முலைப்பால் நெய்

| | | |
|---|---|---|
| முலைப்பால் | படி | அரை |
| ஆவின்பால் | படி | அரை |

இவை இரண்டையும் ஒன்றாய் கலந்து அதில்:

| | |
|---|---|
| கொடுப்பைவேர்கழஞ்சு அரை | நெல்லிமுள்ளிகழஞ்சு |
| வெள்ளரிவித்துகழஞ்சு அரை | அரை |
| பூசினிவித்துகழஞ்சு அரை | அதிமதுரம்கழஞ்சு அரை |

இவைகளை மைபோலரைத்துப் போட்டு அட்டபேற்றி காய்ச்சி வடித்துக்கொண்டு காலையில் ஒரு கரண்டி வீதங் கொள்ள உட்சாய்ச்சல் மெலிவு எலும்புருக்கி கணம் வறட்சி புத்தமேகம் வெட்டை தீரும் இச்சாபத்தியம்.

நெய் வகைப்பரணி முற்றிற்று

ஃஃஃ

## லேகிய வகைப்பரணி

### அமிர்த சஞ்சீவி லேகியம்

வள்ளாரை சிறுபுள்ளடி பொன்னாங்கனி சிற்றாமுட்டி தாழை விழுது வகைக்கு பலம் 2 நிறுத்தெடுத்து இடித்து ஆறரை படி ஜலத்திற்போட்டு ஒண்ணரை படியாக வற்ற காய்ச்சிய கஷாயமும் ஆவின்பால் இளநீர் வகைக்குப் படி ஒன்றும் ஒன்றாய் கலந்து அதன் மேல் மேற்பரணை சீவஇஞ்சியை மூணரை பலம் நிறுத்தெடுத்து மைபோல்

அறைத்துப் போட்டு அடுப்பேற்றி வேகவைத்து வெந்த பின் சீனி கற்கண்டு வகைக்குப் பலம் 4 போட்டுப் பாகு செய்து அதில்,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோஷ்டம் | பலம் | வ | சிவதைவேர் | பலம் | வ |
| வால்மிளகு | பலம் | வ | ஓமம் | ,, | வ |
| ஏலம் | பலம் | வ | நறுக்குமூலம் | ,, | வ |
| கருஞ்சீரகம் | பலம் | வ | திரிகடுகு | ,, | வ |
| நற்சீரகம் | பலம் | வ | அரத்தை | ,, | வ |
| ஜாதிக்காய் | பலம் | வ | ஜாதிபத்திரி | ,, | வ |
| கிராம்பு | பலம் | வ | தாளிசபத்திரி | ,, | வ |
| அக்கிராகாரம் | பலம் | வ | அதிவிடயம் | ,, | வ |
| திப்பிலி | பலம் | வ | | | |

இவைகளை வெதுப்பி பொடித்து சூரணமாக்கியும்வில்வப்பழத்தை பாலில்அவித்துசுத்திசெய்து பரங்கிப்பட்டை பலம் முக்கால் அன்னபேதி காயம் முந்திரிபழம் பேரிச்சங் பழம் கூகைநீர் வகைக்குப் பலம்-வ, குங்குமப்பூ கோரோசனை கஸ்தூரி பச்சை கற்பூரம் அபின் வகைக்குக் கழஞ்சு 2 வீதம் பொடித்து சூரணத்தையும் வ-பலம் தேன்ருன் விரையை ஆவின்பாலில் ஊறவைத்து அதையும் முக்கால் பலம் சீனிச்சக்கரையும் சிறுகச்சிறுக போட்டு மருந்துக்கு தகுந்த நெய்யை சிறுகச்சிறுக விட்டு கிண்டி மெழுகு பதத்திலிறக்கி ஆற்றி காலே அரைக்கால்படி தேன் விட்டு பிசைந்து பீங்கானில்வைத்துக்கொண்டு வேளைஒன்றுக்கு ஒரு கொட்டைப்பாக்கு பிரமாணம் சாப்பிட்டுவர மேகத்திலெடுத்த சகலரோகமும் அஸ்திசுரம் கக்கை சீறம் இரத்தம் விழுதல்வாய்பாண்டுசோகை காமாலைமுதலான ரோகங்களும் தீரும் 20 அல்லது 40 நாள் சாப்பிட வேண்டும்.

### கூழ்பாண்ட லேகியம்

கூழ்பாண்டச்சாறு படி 1 தாழையிதழ் தென்னம்பூ எலுமிச்சம்பழம் இவைகளின் சார் வகைக்குப் படி கால்; ஆவின்பால் படி அரை ஒன்ருய்க் கலந்து வைத்துக்

கொண்டு இரண்டரை பலம் சர்க்கரையை கரைத்துக் காய்ச்சி பாகு செய்து அதில்,

| | |
|---|---|
| சீரகம் | ஏலம் |
| மல்லி | ஜாதிக்காய் |
| கோஷ்டம் | ஜாதிபத்திரி |
| மிளகு | அதிமதுரம் |
| மாசிக்காய் | தாளிசபத்திரி |

வகைக்குப் பலம்-வ, நிறுத்தெடுத்து சூரணித்து தூவி நெய் படி அரைக்கால் விட்டுக்கிண்டி மெழுகு பதத்தில் இறக்கி ஆற்றி தேன் படி அரைக்கால் விட்டுப் பிசைந்து பீங்கானில் வைத்துக்கொண்டு 20 நாள் அல்லது 40 நாள் புன்னைக்காய் பிரமாணஞ் சாப்பிட்டுவர காமாலை சோகை அஸ்திசுரம் அஸ்திவெட்டை பிரமியம் வெள்ளை விழுதல் நீர்சுருக்கு உஷ்ணநோய் முதலானதுந்தீரும் தேகபுஷ்டிக் கும் விந்தூரும் பத்தியம் புளி புகையிலை தள்ளவும்.

## வில்வாதி லேகியம்

வில்வவேர் பலம் 1, அதன் பலம் 5, இடித்து இரண்டு படி ஜலத்திற்போட்டு அரைப்படியாய் வற்றக் காய்ச்சிய கஷாயத்தில் வெல்லம் பலம் 2, கரைத்துக் காய்ச்சி பாகு செய்து அதில்,

| | |
|---|---|
| திப்பிலிமூலம் | வாலுளுவை அரிசி |
| சித்திரைமூலம் | சடாமாஞ்சில் |
| செவ்வியம் | அதிவிடயம் |
| சூகைநீர் | இந்துப்பு |

வகைக்குப் பலம் அரை குங்குமப்பூ கிராம்பு பத்திரி ஜாதிக்காய் கோரோசனை வகைக்கு விராகனிடை அரை வெதுப்பிப் பொடித்துத் தூவி போதுமான நெய் விட்டு மெழுகு பதமாகக் கிண்டி இறக்கி ஆற்றி ஒரு பலம் தேன் விட்டு பிசைந்து பீங்கானில் வைத்துக்கொண்டு வேளை யொன்றுக்கு கொட்டைப்பாக்கு பிரமாணம் சாப் பிட்டுவர குன்மம் சத்திவிக்கல் நெஞ்சுவலி அரோசியம்

மூக்கு நீர்ப்பாய்ச்சல் சூலை யெரிவு காமாலை கிராணிகளை இருமல் வயிற்றுவலி கிருமி மூலம் முதலானதுந் தீரும் இச்சாபத்தியம்.

## நெல்லிக்காய் லேகியம்

15பலம் நெல்லி வற்றலை 8 படி தண்ணீரில் போட்டு 2 படியாக வற்ற காய்ச்சி வடித்த கஷாயத்தில்ஆறே கால் பலம் சர்க்கரையை கரைத்து பாகு செய்து அதில் சுகை நீர் முந்திரிப்பழம் வகைக்கு பலம்-வ பேரீச்சம் பழம் திப்பிலி வகைக்குப் பலம் சாலே அரைக்கால் இவைகளை அரைத்து போதுமான பசு நெய் விட்டு கிண்டி மெழுகு பதத்தில் இறக்கிஆற்றி தேன்விட்டு பிசைந்து பீங்கானில்வைத்துக் கொண்டு வேளை ஒன்றுக்குப் புன்னை காய் பிரமாணம் காலை மாலை சாப்பிட்டுவர வாந்தி பித்தம் பாண்டு வறட்சி முதலானதுந் தீரும் இச்சாபத்தியம்.

## சுக்கு லேகியம்

5 பலம் சுக்கைச் சிதைத்து 2 படி நீரில்போட்டுஎட்டி லொன்ருய் வற்றக்காய்ச்சி வடித்த கஷாயத்தில் அரை பலம் பனவெல்லத்தை கரைத்து பாகுசெய்து அதில்ஓமச் சூரணம் கரிவேப்பிலை சூரணம் வகைக்கு பலம் கால் தூவி ஒரு பலம் நெய்விட்டு மெழுகு பதமாக கிண்டி இறக்கி ஆற்றி தேன்விட்டுப் பிசைந்து பீங்கானில் வைத்துக் கொண்டு கொட்டைப் பாக்கு பிரமாணம் சாப்பிட்டு வர கிராணி முதல் திசை வாய்வு அதிசார் கடுப்பு இரத்தம் பாரிசவாய்வு வீக்கம் சூலை பொருமல் மாந்தம்செரியாமை புளியேப்பம் இவைகள் தீரும் இச்சாத்தியம்.

## மிளகு லேகியம்

50 பலம் மிளகை சிதைத்து பன்னிரண்டு படி தண்ணீரிற்போட்டு எட்டிலொன்ருய் வற்றக்காய்ச்சி கியாழத் தில் 5 பலம் கற்கண்டை கரைத்து பாகு செய்து அதில் அக்கிராகாரம் சீரகம் கிராம்பு ஏலம் கோஷ்டம் அதி

மதுரம் வாய்விளங்கம் பத்திரி சுருங்க மூலம் வகைக்குப் பலம் அரை இடித்து சூரணித்து தூவி நெய் ஆழாக்கு விட்டு கிண்டி மெழுகு பதமாய் இறக்கி ஆற்றி தேன்படி வ விட்டு பிசைந்து பீங்கானில் வைத்துக்கொண்டுவேளை ஒன்றுக்கு கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர சிலேத்துமம் க்ஷேபம் நீர்த்தோஷம் சில விஷம் வாதம் வாய்வு முதலானதுந் தீரும் இச்சாபத்தியம்.

## கடுகு லேகியம்

5 பலம் கடுகை 3 படி ஜலத்தில் போட்டு எட்டிலொன்றாய் வற்றக்காய்ச்சிய கியாழத்தை வடித்துஅதில் ஒரு பலம் நல்ல வெல்லங்கரைத்து பாகு செய்து அதில்;

| | |
|---|---|
| ஓமம் | திப்பிலி |
| சுக்கு | கிராம்பு |
| பெருங்காயம் | வாய்விளங்கம் |
| கொத்தமல்லி | மஞ்சள் |
| சீரகம் | அதிவிடயம் |

வகைக்குப் பலம் அரைக்கால் சூரணித்து தூவி ஒரு பலம் நல்லெண்ணெய் விட்டு கிண்டி மெழுகு பதத்தில் இறக்கி பீங்கானில் வைத்துக்கொண்டு வேளைஒன்றுக்கு புன்னை காயளவு சாப்பிட்டுவர மூலரோகம் வாய்வு உதிரத்திட்சி புளித்தேப்பம் செரியாமைத் தீரும் இச்சாபத்தியம்,

## இஞ்சி லேகியம்

கால்படி ஆவின் நெய்யில் ஏழரை பலம் சீனியை கலந்து காய்ச்சி கரைத்த பின்பு இலக்கி அதன் மேல் தோல் நீக்கின இரண்டரை பலம் இஞ்சியை அம்மியில் வைத்து எலுமிச்சம்பழச்சார் விட்டு மைபோல் அறைத்து வெய்யிலில் வைத்துஉலர்த்தி சூரணத்தையும் கால்பலம் உப்பு கலந்து மோரிற் போட்டு ஊறவைத்து உலர்த்தின பிரண்டை உலர்ந்த கரிப்பான் பூவரசன்பட்டை வகைக் குப் பலம்-வ; வாலுளுவை அரிசி தாளிசப்பத்திரி கடுகு

மல்லிகை சித்திரை மூலம் கற்கடக சிங்கி குரோசானி ஓமம் மிளகு சீரகம் திப்பிலி அதிமதுரம் கோஷ்டம் திப்பிலி மூலம் வகைக்குப் பலம் அரைக்கால் இவைகளை இடித்து வடிகட்டின சூரணத்தையும் தூவிக்கிண்டி வேளை யொன்றுக்கு கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர பித்த வாய்வு உஷ்ணம் சத்திகுன்மம் அரோசிகம் விக்கல் அஸ்தி சுரம் சன்னி அஜீர்ணவாய்வு உப்பிசம் இவைமுதலானதுந் தீரும் இச்சாபத்தியம்.

## அஷ்டகுன்ம லேகியம்

தைவேளை வரண்டை குப்பைமேனி இவைகளின் சாறு வகைக்குப்படி-வ, ஒன்ருய்க் கலந்து காய்ச்சிக் குழம்பு பருவத்தில் கலுவத்திலிட்டு 3 பலம் இலுப்பை புண்ணாக்கை கட்டகரி திரிகடுகு ஓமம் வகைக்குப் பலம் கால் கடுகு ரோகணி அன்னபேதி குரோசனி ஓமம் காயம் வகைக்கு கழஞ்சு முக்கால் இவைகளையும் கூட்டிபோட்டு மெழுகு போலரைத்து பின்பு கவ-பலம் பனவெல்லத்தை சேர்த்து பிசைந்து தான்றிக்காய் போல் குளிகை செய்து வேளை ஒன்றுக்கு ஓர் உருண்டை வீதம் சாப்பிட்டுவர அண்ட வாதம் குன்மம் கெண்டை உப்பிசம் பெருவயறு வாயுத் திரட்சி மலக்கட்டு வாயால் நீர் இரத்தம் வடிதல் சகல வாய்வு தீரும் பத்தியம் உப்பு புளி தள்ளவும்.

## பஞ்ச. தீபாக்கினி லேகியம்

சுக்கு மிளகு திப்பிலி ஏலம் சீரகம் வகைக்குப் பலம் அரை எடுத்து வெதுப்பி பொடித்து வைத்துக் கொண்டு ஒருபடி ஆவின்பாலில் 4 பலம் நல்ல வெல்லத்தைக் கரைத்து அடுப்பேற்றி பாகு செய்ததில் சூரணத்தைத் தூவி நெய் இரண்டரைப் பலம் விட்டுக் கிண்டி மெழுகு பதத்திலிறக்கி ஆற்றி தேன் பலம்-கவ, விட்டுப் பிசைந்து பீங்கானில் வைத்துக்கொண்டு வேளை யொன்றுக்கு

கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர வாய்வு வாதம் உஷ்ணம் தத்தவாய்வு சரீரத்தில் ஊசிகுத்தல்வலி கடிப்பு எரிச்சல்பேதி பொருமல் வாய்வு கிராணி தீரும் இச்சாபத்தியம்.

சண்டமாருத லேகியம்

கண்டகத்தரி தூதுவளை மிளகுத்தக்காளி ஆடாதொடை துளசியிலை இவைகளின் சார் வகைக்குப்படி அரை ஒன்ருய் கலந்து அதில் இரண்டரை பலம் கருப்பங்கட்டியை கரைத்து மிளகு தான்றிக்காய் இவைகளை சூரணித்து வகைக்கு கழஞ்சு 5 எடுத்து தூவி கவ-பலம் நெய்விட்டு பிசைந்து கொண்டு தான்றிக்காய் பிரமாணம் உருண்டை செய்து வேளை ஒன்றுக்கு ஒரு உருண்டைவீதம்சாப்பிட்டு வர சகல இருமலுந்தீரும் கடும்பத்தியமாக இருக்க வேண்டும்.

தூதுவளை லேகியம்

முருங்கைப்பூ தூதுளம் வகைக்குப் பலம் இரண்டரை சதாவேரி கிழங்கு பலம்2, நன்னாரிவேர் பலம்1, இவைகளை சூரணித்து கவ-படி ஆவின்பாலில் காய்ச்சிகுறுகி வரும்6 பலம் சீனியைப் போட்டு நெய் படி-வ, தேன்படி அரைக்கால் விட்டு கிண்டி இறக்கி ஆற்றி தான்றிக்காய் பிரமாணஞ்சாப்பிட்டுவர பிரமியம்மேகம் எலும்புருக்கிபிரமேகம் இவைகள் தீரும் தேகம் பலிக்கும் இச்சாபத்தியம்.

தாதுபுஷ்டி லேகியம்

ஒருபடி ஆவின்பால் 5 பலம் சீனியை கரைத்து பாகு செய்து அதில் 5 அண்டத்தை உடைத்துவிட்டு சுக்கு மிளகு திப்பிலி சாலரட்டரும்பு ககசசாகிராம்பு ஏலம்ஜாதிக்காய் ஜாதிபத்திரி அதிமதுரம் கூகைநீர் கோஷ்டம் சடாமாஞ்சில் சன்னதலங்கபட்டை லெங்கபத்திரி சுத்திசெய்த கஞ்சா வகைக்குப் பலம் அரை இவைகளை சூரணித்துத் தூவி ஆவின்நெய்படி அரைக்கால் விட்டு கிண்டி பெழுகு பதத்திலிறக்கி தேன்படி வீசம் விட்டு பிசைந்து பிங்கானில் வைத்துக் கொண்டு வேளைஒன்றுக்குப் புன்னைக்காய் பிரமாணம் சாப்பிட்டுவர தாது விர்த்தியாகும் பத்தியமில்லை.

மதனகாமேசுர லேகியம்

ஒரு பலம் ஆவின்பாலில் 5 பலம் சீனியைக்கரைத்து பாகு செய்து அதில்,

| | |
|---|---|
| சுக்கு | உளுந்து |
| மிளகு | எள்ளு |
| திப்பிலி | முந்திரிப்பழம் |
| அதிமதுரம் | ஏலம் |
| சிறுதேக்கு | முள்ளி |
| நீர்முள்ளிவித்து | இலவம்பிசின் |
| நெருஞ்சிவேர் | இந்துப்பு |
| மல்லி | அதிவிடயம் |
| கோஷ்டம் | கஸ்தூரிமஞ்சள் |
| சாதிக்காய் | கதலிக்கிழங்கு |
| சாரணைக்கிழங்கு | அமுக்குருக்கிழங்கு |
| தண்ணீர்விட்டான் | கரிப்பான்மூலம் |
| கொடிவேலிவேர் | ஆனைத்திப்பிலி |
| மருட்கிழங்கு | சுறுநாகப்பூ |
| வெந்தயம் | அபின் |
| அபிரேக்செந்தூரம் | திருமலை |
| லவங்கம் | சண்பகவித்து |
| நற்சீரகம் | சண்பகவித்து |
| பெருஞ்சீரகம் | சுத்திசெய்த கஞ்சா |
| லவங்கப்பட்டை | நிலப்பனங்கிழங்கு |

இவைகள் வகைக்கு பலம்அரைக்கால்எடுத்துசூரணித்து அதற்கு சரியிடை பூனைக்காலில் வித்துப் பருப்பின் மாவு கூடச் சேர்த்து தூவி நெய்விட்டு பிசைந்து பீங்கானில் வைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு தேத்தான் விரைப் பிரமாணஞ்சாப்பிட்டுவர வீரியவிர்த்தியுண்டாகும்இந்திரியங்கட்டும் அதிசாரம் கிராணி பித்த சிலேத்தும வாதந் தீரும் பத்தியம் புளி நல்லெண்ணெய் கடுகுநீக்கவும் பால் நெய் சேர்க்கவும்,

## சிறுகூழ்பாண்ட லேகியம்

ஒருபடி ஆவின்பாலில் 10 பலம் சீனியைக் கரைத்து பாகு செய்து அதில் பெரும் பூசனிக்காயை மேற்றோல் சீவி நறுக்கி உலர்த்தி இடித்து வடிகட்டின பொடி படி அரை கோஷ்டம் லவங்கம் கஸ்தூரிமஞ்சள் இந்துப்பு திரிபலை அதிமதுரம் சாதிபத்திரி கடுகு வகைக்கு கழஞ்சு அரை இடித்துச் சூரணித்து இருவகைச் சூரணத்தையும் ஒன்றாய் கலந்து தூவி கால்படி நெய் விட்டுக் கிண்டி மெழுகு பதத்திலிறக்கி பீங்கானில் வைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு கொட்டைபாக்கு பிரமாணஞ்சாப்பிட்டு வர தேகவரட்சி எலும்புருக்கி சிரங்கு நீர்க்கடுப்பு கல்ல

டைப்பு வெட்டை இவை முதலானதுந் தீரும் திரேகங் குளிரும் இச்சாபத்தியம்.

மதனசஞ்சீவி லேகியம்

அரைப்படி ஆவின்பாலில் உபலம் கோதுமை மாவையும் 10பலம் சீனியையும் போட்டு கிண்டி காய்ச்சி பாகு பதத்தில் முள்ளிலிரை நிலைப்பன கிழங்கு லவங்கப்பட்டை பனைவேர் வகைக்குப் பலம் 2, கருவேலம் பிசின் கஞ்சா வகைக்குப்பலம் 2, சந்தனம் ஜாதிக்காய் கிராம்பு பெருஞ்சீரகம் வகைக்கு விராகனிடை 1, திப்பிலி பலம் அரை இவைகளை யிடித்து சூரணித்துத் தூவி நெய் கால்படி விட்டு மெழுகு பதத்தில் இறக்கி ஆற்றிபேரீச்சம்பழம் 2, தேன் பலம் 5. சேர்த்து பிசைந்து வைத்துக் கொண்டு வேளை ஒன்றுக்கு கொட்டைபாக்கு பிரமாணம் சாப்பிட்டு வர விந்தூரும் போகம் மிகும்.

லேகிய வகைப்பரணி முற்றிற்று

ஃஃஃஃ

சூரண வகைப்பரணி

மேகராஜாங்க எண்ணெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெட்டிவேர் | பலம் | வ | ஜாதிக்காய் | பலம் | வ |
| சீரசம் | ,, | வ | ஜாதிபத்திரி | பலம் | வ |
| லவங்கப்பட்டை | ,, | வ | கிராம்பு | பலம் | வ |
| கோஷ்டம் | ,, | வ | தாமரைவளயம் | பலம் | வ |
| நெல்லிவற்றல் | ,, | வ | அகிற்குது | பலம் | வ |
| நிலைப்பனகிழங்கு | ,, | வ | பச்சைக்கற்பூரம் | பலம் | வ |
| அரேணுகம் | ,, | வ | சந்தனம் | பலம் | வ |
| முந்திரிப்பழம் | ,, | வ | திரிகடுகு | பலம் | வ |
| பேரீசசம்பழம் | ,, | வ | அதிமதுரம் | பலம் | வ |
| தக்கோலம் | ,, | வ | நெற்பொரி | பலம் | வ |
| குங்குமப்பூ | ,, | வ | அமுக்குருக்கிழங்கு | பலம் | வ |
| கோரோசனை | ,, | வ | நற்சிங்கி | பலம் | வ |
| சிறுநாகப்பூ | ,, | வ | குங்குமப்பட்டை | பலம் | வ |

இவைகளை நிறுத்தெடுத்து சூரணித்து அதற்கு சரியிடை சீனிகலந்து வைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு திரிகடிகை பிரமாணம் ஆவின் வெண்ணெயில்கலந்துஒரு மண்டலம்சாப்பிட்டுவர கைகால் எரிவு எலும்புருக்கி நீர் தாரை வழிருேர்போலிநங்கும் கற்பிரமியம் நீர்ச்சுறப்பி கல்

லடைப்பு நீர்தாரை யெரிவு தேகவரட்சி உட்சுரம் பித்த சயம் இவை முதலானதுந்தீரும் இச்சாபத்தியம்.

பித்த பாண்டுக்கு திரிகஷி சூரணம்

முந்திரிபழம் திப்பிலி மூலம் திருகடுகு செங்கழனிநீர்க் கிழங்குவெட்டிவேர் சந்தனம்விலாமிச்சு தக்கோலம் அதி மதுரம் முத்தக் காசுவில்வபழம் ஏலம்மல்லி திரிபலை நெற் பொரி பேரிச்சம்பழம்பச்சைக்கற்பூரம்கற்கண்டுஇலவங்கப் பத்திரி சிறுநாகப்பூ கூகைநீர் இவைகளை ஓர் நிரையா யிடித்து சூரணஞ்செய்து வேளை யொன்றுக்குதிரிகடியை பிரமாணஞ் சாப்பிட்டுவர பித்தம் கைகாலெரிவு இரத்த பித்தம் சந்தி கிருகிருப்பு பித்தபாண்டு இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

அக்கினி சூரணம்

கொடிவேலிவேர் திரிகடுகு ஓமம் சிறுதேக்கு ஆனைத் திப்பிலிகோஷ்டம்இந்துப்பு வகைக்கு பலம் அரை காயம் வசம்பு சுட்டகரி வகைக்கு பலம் அரைக்கால் கடுகு பலம் கால் இவைகளை சூரணித்து அதற்கு சரியிடையாய் சீனி கலந்து திரிகடிகைப் பிரமாணம் வெந்நீர் கொள்ள அஜீ ரணம் மந்தம் பொருமல் கிராணி இவைகள் நீங்கும் கடும்பத்தியம்.

பித்த அரோசிகத்திற்கு சீரகச்சூரணம்

இரண்டு பலம் சீரகத்தை இஞ்சிசாற்றில் ஆறு நாள் ஊறவைத்து உலர்த்தி அப்பால்முசுமுசுக்கைசாற்றில்ஒரு நாள் ஊறவைத்துஉலர்த்திகொண்டுஏலம்திரிகடுகுகோஷ் டம் நெல்லிவற்றல் நெற்பாரிவில்வப்பழத்தோடுவகைக்கு வீசை 1, இவையெல்லாம் பொடித்து அதற்கு நிகர் சீனி கலந்து வேளை யொன்றுக்கு திரிகடிகை பிரமாணம் சாப் பிட்டுவரபித்தம் அரோசிகம் பித்தவாய்வுகிருகிருப்பு உஷ் ணம்வாய் நாற்றம்வழுவழுப்புஇவை முதலானதுந்தீரும்.

இராஜ அமிர்தாதிச் சூரணம்

ஏலம் லலங்கம் அதிமதுரம் நற்சீரகம் கருஞ்சீரகம் குரோசானி ஓமம் வால் மிளகு திப்பிலி வாய்விளங்கம் குங்குமப்பூ சடாமாஞ்சில் கடுகுரோகணி திப்பிலி மூலம் ஜாதிக்காய் கிராம்பு வசுவாசி சிற்றத்தை சித்திரமூலம்நில வாகை அவைகள் வகைக்கு பலம் காலாக நிறுத்தெடுத்து

இடித்து சூரணஞ்செய்து அதற்கு சரியிடைசீனிசர்க்கரை கலந்து வைத்துக்கொண்டு திரிகடிகைப் பிரமாணம் சாப்பிட்டுவர கைகால் உளைச்சல் உள்ளுருக்கி எலும்புருக்கி பிரமியம் கரப்பான் மூலம் வாத பித்தம் உஷ்ணம் சகல வாய்வு தீரும் திரேகம் குளிரும் இச்சாபத்தியம்.

வயிற்றுவலிக்கு அஸ்வகெந்தி சூரணம்

பசும்பாலில் அவித்துசுத்திசெய்த அமுக்கிரான் வேறு பலம் 1; சுக்கு ஏலம் கூகைநீர் வகைக்குப் பலம் அரை, கிராம்பு சிறுநாகப்பூ பலம்முக்கால்திப்பிலி பலம்இரண்டே முக்கால் மிளகு பலம் கவ; இவைகளை யிடித்து சூரணஞ் செய்து சீனி பலம்-கவ, கலந்து வைத்துக்கொண்டுஅனுபானம் தேன் இஞ்சிச்சார் இவைகளில் திரிகடிகைபிரமாணம் சாப்பிட்டுவர வயிற்றுவலி மந்த வாய்வு அரோகம் வாதசித்தம் உப்பிசம் நெஞ்செரிவு வாந்தி சயம் ஈளை இருமல் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

மேக காங்கைக்கு வல்லாரைச் சூரணம்

வல்லாரையைப் பாலில் அவித்து உலர்த்தி இடித்து வடித்துக்கொண்ட சூரணம் பலம் 1 கிராம்தஏலம்ஜாதிக்காய் ஜாதிபத்திரி மாசிக்காய் தாளிசபத்திரி திரிபலாதி வகைக்கு பலம் 1 வெதுப்பி பொடித்து ஒன்ருய் கலந்து சர்க்கரை சமமாக கூட்டி வைத்துக் கொண்டு வேளை யொன்றுக்கு திரிகடிகைப் பிரமாணம் சாப்பிட்டுவர மேக காங்கை மூலச்சூடு உடம்புயெரிவு தீரும் தேகங் குளிரும்,

வஜ்ஜிர்வல்லி சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சுக்கு | பலம் | வ | கல்லுப்பு | பலம் | வ |
| மிளகு | ,, | வ | ஏலம் | ,, | வ |
| திப்பிலி | ,, | வ | லவங்கம் | ,, | வ |
| கடுக்காய் | ,, | வ | சிற்றரத்தை | ,, | வ |
| தான்றிக்காய் | ,, | வ | திப்பிலிமூலம் | ,, | வ |
| நெல்லிவற்றல் | ,, | வ | கருஞ்சீரகம் | ,, | வ |
| நற்சீரகம் | ,, | வ | பறங்கிப்பட்டை | ,, | வ |
| அக்கிராகாரம் | ,, | வ | இந்துப்பு | ,, | வ |
| கிராம்பு | ,, | வ | ஜாதிக்காய் | ,, | வ |
| ஜாதிபத்திரி | அரைக்கால் | | அமுக்கிருக்கிழங்கு | ,, | வ |
| வெங்காரம் | ,, | | ஓமம் | அரைக்கால் | |
| கமல்தம் | ,, | | நவாச்சாரம் | ,, | வீசும் |

இவைகளை யிடித்து சூரணஞ்செய்துஅதற்குநிகர் முற்பால் பிளெண்டைச் சூரணம் பாதியும் கலந்து வைத்துக்

கொண்டு அனுபானம் தேன் நெய் பால் இவைகளில் வேளை ஒன்றுக்கு திரிகடிகைப் பிரமாணம் சாப்பிட்டுவர வாயு குன்மம் தாகம் கபம் பித்தம் உஷ்ணம் வெட்டை அபானவாய்வு இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## மதுராதிச் சூரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அதிமதுரம் | பலம் | வ | மிளகு | பலம் | வ |
| கோஷ்டம் | ,, | வ | நெல்லிவற்றல் | ,, | வ |
| அக்கிராகாரம் | ,, | வ | கூகைநீர் | ,, | வ |
| விலாமிச்சம்வேர் | ,, | வ | முத்தக்காசு | ,, | வ |
| தக்கோலம் | ,, | வ | திப்பிலி | ,, | வ |
| ஏலம் | ,, | வ | கடுக்காய் | ,, | வ |
| சிறுநாகப்பூ | ,, | வ | லவங்கப்பத்திரி | ,, | வ |
| மல்லி | ,, | வ | நன்னாரிவேர் | ,, | வ |
| கிராம்பு | ,, | வ | பருத்திவிதை | ,, | வ |
| சிறுதேக்கு | ,, | வ | நற்சீரகம் | ,, | வ |
| நெற்பொறி | ,, | வ | | | |

இவைகளை வெதுப்பி பொடித்து தாளிசபத்திரி சூரணம் பலம் அரை, சீனி பலம்அரை ஒன்ருய் கலந்து வைத்துக் கொண்டு வேளை ஒன்றுக்கு திரிகடிகைப் பிரமாணம் சாப்பிட்டுவர பித்தஅரோசிகம் நெஞ்செரிவு கிருகிருப்புவாந்தி இவை முதலானதுந் தீரும் இச்சாபத்தியம்.

சூரணவகைப்பரணி முற்றிற்று

°°°°°°

## கஷாய வகைப்பரணி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நொச்சியிலை | பிடி | க | நுணாயிலை | பிடி | க |
| பொடுதலையிலை | பிடி | க | வேலிப்பருத்தி | பிடி | க |

இவைகளை நறுக்கி வெதுப்பிச்சார் பிழிந்து ஒரு பாலாடை வீதங்கொடுக்கத் தீரும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வேலிப்பருத்தியிலை | பிடி | க | வேளைவேர் | பிடி | க |
| நொச்சியிலை | பிடி | க | பொடுதலை | பிடி | க |
| நுணாயிலை | பிடி | க | முருங்கை | பிடி | க |

இவைகளை சட்டியிலிட்டு நறுத்துஅரைப்படிதண்ணீரில் போட்டு அடுப்பேற்றி அதில் ஓமம் திரிகடுகு செம்பு இவைகளை வகைக்குப் பலம் வீசமெடுத்து வெதுப்பிதுணியில் முடிந்து போட்டு எட்டிலொன்ருய் வற்றக்காய்ச்சி ஒரு பாலாடை வீதங்கொடுக்க வாதபித்த சிலேத்தும பாந்தந்தீரும் தாயார் இச்சாபத்தியமாகஇருக்கவேண்டும்

### ஊது மாந்தத்திற்கு கஷாயம்

பொடுதலை வேம்பு மாந்துளிர் புளி நுணா நொச்சிவேலி பருத்தி இவைகளின் ஈர்க்கையும் ஓமம் உள்ளி திப்பிலியும் சமமாயிடித்து ஒரு படி தண்ணீரில் போட்டு எட்டிலொன்ருய் கஷாயஞ்செய்து ஒரு பாலாடை வீதங் கொடுக்க ஊதுமாந்தம் பேதிமாந்தம் சுத்திமாந்தம் சொறி மாந்தம் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

### நீர் மாந்தத்திற்கு கஷாயம்

ஈருள்ளி மூக்குரட்டை இவைகளின்சார் வகைக்குபடி கால்விளக்கெண்ணெய்கால்படி ஒன்ருய் கலந்துகரைத்து காய்ச்சிசங்களவுகொடுக்கநீர்மாந்தந்தீரும்இச்சாபத்தியம்

### விஷமாந்தத்திற்கு கஷாயம்

நுணா நொச்சி வேலி இவைகளின் வேர் பலம்அரைக் கால் ஓமம் பொடுதலை உள்ளி வசம்புஇவைகள் வகைக்கு பலம்-வ, எடுத்து தட்டி வெதுப்பி ஒரு படி தண்ணீரில் போட்டு அடுப்பேற்றி எட்டிலொன்ருய் வற்றக்காய்ச்சி கஷாயத்தில் ஒரு பாலாடை வீதங்கொடுக்க விஷமாந்தந் தீரும் இச்சாபத்தியம்.

### பால் மாந்தத்திற்கு கஷாயம்

பொடுதலைக்காய் இந்துப்பு வசம்பு பூண்டு மிளகு இவைகள் வகைக்குப் பலம் அரைக்கால் நிறுத்தெடுத்து வெதுப்பி ஒருபடி தண்ணீரில் போட்டு எட்டிலொன்ருய் வற்ற கஷாயஞ்செய்து ஒரு பாலாடை வீதங் கொடுக்க பால் மாந்தத்தீரும் இச்சாபத்தியம்,

### கட்டு மாந்தத்திற்கு கஷாயம்

சீந்தில் தண்டு களிபாக்கு சிவதைவேர் கடுக்காய் சுக்கு கடுகுரோகணி இவைகள் வகைக்குப் பலம் கால் நிறுத்தெடுத்து தட்டி ஒருபடி தண்ணீரில்போட்டு எட்டிலொன்ருய் வற்ற கஷாயஞ்செய்து ஒரு பாலாடை வீதம் மூன்றுநாள் கொடுக்க கட்டுமாந்தந்தீரும் இச்சாபத்தியம்

### வாத சுரத்திற்கு கஷாயம்

பற்பாடகம் சீந்தில் மலைதாங்கி கண்டங்கத்திரி செம் முள்ளி இவைகளின் வேர் சங்கு வேலி சுக்கு முத்தக்காசு இவைகள் வகைக்குப் பலம்கால்எடுத்து கால்படிதண்ணீரில் போட்டு அரைக்கால்படியாய் வற்றக்காய்ச்சிவடித்து கொடுக்க வாதசுரந்தீரும் இந்தப்படி மூன்று நாள் ஆறு வேளை கொடுக்கவும் இச்சாபத்தியம்.

பித்த சுரத்திற்கு கஷாயம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஏலம் | பலம் | வ | இலுப்பைப்பூ | பலம் | வ |
| அதிமதுரம் | ,, | வ | நன்னாரிவேர் | ,, | வ |
| வெட்டிவேர் | ,, | வ | ஆடாதோடை | ,, | வ |
| கலைக்கொம்பு | ,, | வ | பேய்புடலை | ,, | வ |
| சீந்திற்றண்டு | ,, | வ | கோரைக்கிழங்கு | ,, | வ |
| முன்னைவேர் | ,, | வ | பற்பாடகம் | ,, | வ |
| மல்லி | ,, | வ | வில்வவேர் | ,, | வ |
| விலாமிச்சம்வேர் | ,, | வ | நெல்லிவேர் | ,, | வ |

இவைகளை நிறுத்தெடுத்து இடித்து பொடி செய்து வைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு கால் பலம் தூளை எடுத்து அரைபடி தண்ணீரில் போட்டு காற்படியாக வற்றக்காய்ச்சி மூன்று நாள் ஆறு வேளை சாப்பிட பித்த சுரத்தீரும் இச்சாபத்தியம்.

வாதசிலேத்தும சுரத்திற்கு கஷாயம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வெப்பரலைஅரிசி | பலம் | வ | முந்திரிப்பழம் | பலம் | வ |
| விலாமிச்சம்வேர் | ,, | வ | பேரீச்சம்பழம் | ,, | வ |
| வேம்பு | ,, | வ | கிராம்பு | ,, | வ |
| நெற்கற்கிழங்கு | ,, | வ | வில்வப்பழத்தின்வேர் | ,, | வ |
| பெருங்குமிள் | ,, | வ | பொன்முசுட்டைவேர் | ,, | வ |
| அதிமதுரம் | ,, | வ | நன்னாரிவேர் | ,, | வ |
| திரிகடுகு | ,, | வ | அதிவிடையம் | ,, | வ |
| பற்பாடகம் | ,, | வ | முத்தக்காசு | ,, | வ |

இவைகளை நிறுத்தெடுத்து யிடித்து அரைபடி தண்ணீரில் போட்டு காற்படியாக வற்றக்காய்ச்சிய கஷாயத்தை மூன்றுபோது கொடுக்க வாதபித்த சிலேத்தும சுரந் தீரும் இச்சாபத்தியம்.

சன்னிவாதத்திற்கு கஷாயம்

திப்பிலி சிறுதேக்கு முத்தக்காசு பற்பாடகம் சுக்கு செங்கழுநீர்க்கிழங்கு கோஷ்டம் ஆடாதோடை யிர்க்கு சீந்திற்றாண்டு சிறுகாஞ்சொரி நிலவேம்பு இவைகளை வகைக்குப்பலம் கால் வீதம் எடுத்திடித்து இரண்டு படி தண்ணீரில்போட்டு காற்படியாய் வற்றக்காய்ச்சி மூன்று போது கொண்டு சன்னிவாத சுரந் தீரும் இச்சாபத்தியம்.

மணிமந்திர வயித்திய சேகரம் முற்றிற்று

சீனிவாச அச்சகம், சூளை, சென்னை-112.

# புதிய புத்தக விளம்பரம்

| | |
|---|---|
| ஜாதக அலங்காரம் | ரூ. 150 |
| ஜோதிட ஆசான் 4-பாகம் | 75 |
| நம் நாட்டு வைத்தியம் | 50 |
| சித்த வைத்திய திரட்டு | 50 |
| தேவேந்திர நாத் மஹாவசிய சாஸ்திரம் | 50 |
| தேவேந்திர நாத் மாயாஜால விநோதம் | 60 |
| வைத்திய மூலிகை விரிவகராதி | 50 |
| அனுபவ சுந்தர சேகரம் 2 பாகம் | 40 |
| குருசிஷ்ய சம்வாத ஹஸ்தரேகை சாஸ்திரம் | 40 |
| சோதிட மர்மம் | 30 |
| ஆரூட கொத்து | 40 |
| மணிகண்ட கேரள சோதிடம் | 30 |
| போக முனிவர் பஞ்சபட்சி சாஸ்திரம் | 40 |
| மணிமந்திர வைத்திய சேகரம் | 30 |
| பிழைக்கும் வழி என்னும் அனுபவ கைத்தொழில் | 25 |
| காக்கையர் சிற்பம் | 30 |
| ஆயுர்வேத திரட்டு | 30 |
| நல்வாழ்வு களஞ்சியம் என்னும் சித்த மருத்துவம் | 30 |
| தமிழ்நாடு இலகு வைத்தியம் | 30 |
| கொக்கோகம் இரதி மன்மதன் திருவிளையாடல் | 30 |
| சதிபதிகளின் மர்மம் (அ) மானிட ரகசிய சாஸ்திரம் | 25 |
| மலையாள மாந்திரிக ரத்தினம் | 30 |
| சோதிட அரிச்சுவடி நான்கு பாகங்கள் | 20 |
| அகஸ்தியர் வைத்திய ரத்தின சுருக்கம் (மூ-உ) | 30 |
| அகஸ்தியர் பரிபூரணம் 400 (மூ-உ) | 30 |
| தமிழ்நாட்டு பச்சிலை வைத்தியம் | 20 |
| புலிப்பாணி விநோத ஜால திரட்டு | 15 |
| பச்சிலை மூலிகை அகராதி | 16 |
| போகமுனிவர் விநோத ஜால கண்ணாடி | 16 |
| கமல முனிவர் அருளிய முக்கால ரேகை சாஸ்திரம் | 16 |
| சோதிட கன்ம காண்டம் | 15 |
| ஜாதக கணித பாலசிட்சை | 15 |
| பெண்கள் [illegible] ஜாதக கணிதம் | 12 |
| ஆதிசாமுத்திரிக அவயலக்ஷண சாஸ்திரம் | 20 |
| மாந்திரீக ஆசிரியன் | 16 |
| மலையாள மாந்திரீக போதனம் | 16 |
| வராகிமாலை சக்கரத்துடன் | 16 |
| கைத்தொழில் ரகசியம் | 16 |
| கொக்கோக நுட்பம் | 16 |
| சர்வசொப்பன பலன் என்னும் கனவு சாஸ்திரம் | 15 |
| எண்களின் ரகசியம் | 12 |
| நவக்கிரக மகா மந்திரம் | 12 |
| கொக்கோக ரகசியம் | 12 |
| வீட்டு வைத்தியம் | 10 |
| மாந்திரீக அரிச்சுவடி | 10 |

**சண்முகானந்தா புக் டிப்போ**

67, T.K. முதலி தெரு, [illegible], சென்னை - 600 112.

[illegible]